# திருக்குறள் தரும் உவமையின்பம்





செல்வி
பதிப்பகம்

# பதிப்புரை

ஆசிரியர் இராமசாமி அவர்கள் திருக்குறள் நூல் முழுதும் உள்ள உவமைகள் எல்லா வற்றையும் முறைப்படுத்தித் தொகுத்து, நயத்தையும் இலக்கண முறையையும் சிறப்பாக விளக்கி எழுதி யிருக்கிறார்கள்.

மாணவ மாணவிகளுக்கும், இலக்கிய நயம் கண்டு இன்புறுவார்க்கும் இந்நூல் பெரிதும் பயன்படும்.

ஒவ்வொருவரும் படித்துப்படித்து இன்புறத்தக்க இந்நூலை நாங்கள், எங்கள் செல்வி பதிப்பக வெளியீடாக வெளியிடுவதில் மிகமகிழ்ச்சி யடைகிறோம்.

வீர சிவராமன்

# படைப்புப் பா

வள்ளல் ஓரி மாண்புடன் ஆண்ட
கொல்லியஞ் சாரலில் குலவு மாராடி
நற்பதி பெற்ற நலமுடைச் செல்வன்;
பொற்புறு ஞானப் புலமையில் மிக்கோன்;
சீர்த்திசேர் சிவன்பெயர் செப்பிச் செப்பி
நாத்தழும் பேறிய நல்லறி வாளன்;
வாசுகி யம்மையின் மறுபிறப் பெனத்தகும்
தேசுறு கவுரியின் திருக்கரம் பற்றி
வள்ளுவன் போலத் தெள்ளிய அறத்தை
உள்ளுவந் தாற்றி உயர்புகழ் புனைந்தோன்;
எங்குஞ் சிவமே இசைந்துள தென்ற
பங்கமில் ஞானப் பழத்தை நுகர்ந்தோன்;
பேய்மயக் கொழித்த பிரம்மா னந்தன்
சேவடி மலரைச் சென்னியில் சுமந்தோன்;
கயிலையை மறந்து கண்ணுதல் வாழ
உயர்வுறும் ஆலயம் உவப்பொடு சமைத்தோன்;
திடத்துடன் இராம நாமம் செப்பி
உடற்சுமை போக்கி உயர்சிவம் ஆனோன்;
என்னை யீன்ற இனியநற் றெய்வமாம்
அன்னையைப் பெற்றவன் அன்புறு பாட்டன்;
அன்னான் மலைப்பேர் அருளாற் பெரியோன்
தேன்மல ரடியில் சிறந்தஇந் நூலை
மாண்புறச் சார்த்தி வணங்குவன் யானே!

ஆ. வே. இராமசாமி.

# வாழ்த்துகின்றேன்!

## உயர்திரு S. K. இராமராசன் அவர்கள்,

தலைமைத் தமிழாசிரியர்,
கந்தசாமிக் கண்டர் உயர்நிலைப்பள்ளி, வேலூர் - (சேலம்.)

புண்ணியநற் றமிழ்த்தாயின் மகுட மாகிப்
பொலிவுதரும் உயிராகிச் செங்கோ லாகி
எண்ணரிய புகழ்பெற்ற முப்பால் தன்னில்
எப்போதும் உள்ளத்தை வைக்கும் நம்பி
தண்ணியநற் குணமுடைய இராம சாமி
சால்புடனே வழங்கியநன் னூலைக் கண்டேன்
மண்ணகத்தில் இணையில்லாக் களிப்புக் கொண்டேன்
மனமார வாயார வாழ்த்து கின்றேன்.

பொற்புடைய நறும்பொழிலிற் புகுந்திட் டோமோ?
பொலிவுதரும் ஏழிசையில் நுழைந்திட் டோமோ?
கற்பனைகள் கண்மூடி யுணர்விற் கண்ட
கனவுகளில் மிதந்தோமோ? அமுத வெள்ளம்
நற்கனியாய்ப் பழுத்ததுவோ? என்று கற்றோர்
நல்லுளத்திற் பலநினைவுச் சூழல் எய்தப்
பற்பமலர்க் குவையல்போல் நன்னூல் தந்த
பண்பனுக்கு நல்வாழ்த்து வழங்கு கின்றேன்.

கயல்தந்த சினையினிலும் சிறியவித்தைக்
ககனத்தைத் துழாவுபெரு மரமாய்ச் செய்யும்
செயல்வல்ல நிலம்போல, வள்ளு வன்றன்
சீரான வுவமைகளை விரித்துக் காட்டி
நயமாக விளக்கியுயர் தமிழ்த்தாய் பாத
நன்மலரிற் சமர்ப்பித்தான்; குன்றம் போல்எம்
புயமுயரச் செய்திட்டான்; இராம சாமி
பொலிவுடனே பல்லாண்டு வாழி! வாழி!

# தேன் கூடு.

சிந்தாமணிச் செம்மல்,

**மு. இராமசாமி அவர்கள்,**

தலைமைத் தமிழாசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி.

இராசிபுரம் - (சேலம்)

நற்றவச் செல்வன்; மாண்புறு குணத்தன்
நலந்திகழ் இராமசா மிப்பேர்

பெற்றவன் மெல்லச் சுரும்பராய் மாறிப்
பீடுறு குறட்பொழில் புக்கு

முற்றிய நறும்பா மலர்தொறும் தோய்ந்து
மூழ்கிநற் றேனினைப் பருகிக்

கற்றவர் வியப்பப் புனைந்ததேன் கூட்டைக்
கண்டனம்; மகிழ்ந்தனம்; வாழி!

# அணிந்துரை

தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்,
துணைவேந்தர், மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை.

"திருக்குறள் தரும் உவமை இன்பம்" என்ற நூலை ஒரு முறை ஓதினேன். திருவாளர் ஆ. வே. இராமசாமி அவர்களின் முயற்சி பாராட்டுதற்குரியது. திருவள்ளுவர் கையாண்ட உவமைகளின் பெருமையினை உணர்வதற்கு இந்த நூல் உதவும்.

தெ. பொ. மீனாட்சி சுந்தரன்

# பாராட்டுரை

வித்துவான்

## உயர்திரு அ. சாம்பசிவம் அவர்கள்,

(சட்டமன்ற உறுப்பினர், ஆத்தூர், சேலம்.)

இந்நூலாசிரியர், புலவர், வே. இராமசாமி அவர்களை நான் நன்கறிவேன். தமிழில் ஆழ்ந்த பற்றும் புலமையும் கொண்ட இவர் தமிழுக்குயிராகவும் தமிழர்க்குயர்வு தருவதாகவும் அமைந்த திருக்குறளை எளிதில் எல்லோரும் கற்று இன்புறவேண்டும் என்ற பேரார்வத்தால் ஊக்கப்பட்டு இந்நூலைத் தமிழர்க்குப் படைத்து உதவ முன்வந்துள்ளார்.

திருவள்ளுவரின் உவமைநயங்களைக் காலத்தோடொட்டிய கருத்துக்களைக் கொண்டு விளக்கம் செய்துள்ளமுறை போற்றத்தக்க புதிய முயற்சியாகும். நலந்தீங்கறியாது தடுமாறிநிற்கும் தற்கால சமுதாயத்திற்கு இந்நூல் ஓர்நல்ல வழிகாட்டியாயமைந்து, கற்போரை நேர்வழியில் நடக்கத் தூண்டு மென்பதில் ஐயமில்லை. தமிழார்வமிக்க அன்பர்கள் அனைவரும் இந்நூலைப் படித்துப் பயன்பெற வேண்டுமென்பது எனது அவா.

இந்நூலாசிரியருடைய நன்முயற்சியைப் பாராட்டுவதுடன் இவர் எழுத்துத் துறையில் உயரிய இடம் பெற்றுத் திகழ இறைவன் திருவருள் துணைபுரிவதாக என்று வாழ்த்துகிறேன்.

# சிறப்புரை

உயர்திரு

## தெ. ஞானசுந்தரம், எம். ஏ., அவர்கள்,

தமிழ்த்துறை, கந்தசாமிக் கண்டர் கல்லூரி,

வேலூர் (சேலம்)

'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்'

**தவப் புதல்வர்**

தமிழணங்கின் தவப்புதல்வர் வள்ளுவர்; அவர் அறிஞர்க்கெல்லாம் அறிஞர்; பிறிதின் நோய் தன்நோய் போல் போற்றும் பெருந்தகையாளர்; உலகியல் உணர்ந்த ஒப்புயர்வற்ற மெய்ஞ்ஞானி; அன்பும், அருளும், தூய்மையும் இழை இழையாக மணக்கும் அப்பெருந்தகையாரின் உள்ளமே திருக்குறளாகும்.

**திருக்குறளின் தனிச்சிறப்பு:**

திருக்குறள் தலையாய நீதிநூல்; தமிழில் அறங் கரையும் நூல்கள் பல உள. அவற்றினின்றும் திருக் குறள் தனிச்சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றது. அதற்குக் காரணங்கள் பல உள்ளன. ஆசாரக் கோவை, ஆத்திச் சூடி முதலிய சில நூல்களில் காலத்திற் கொவ்வாக் கருத்துக்கள் இருத்தலைப்போல் குறளில் இல்லை. எக்காலத்திற்கும் பொருந்திய கருத்துக்கள் அதன்பால் பொதிந்துள்ளன. செம்மாந்த வாழ்க்கைக்கு மேற் கொள்ளவேண்டிய எல்லாக் கருத்துக்களையும் திறம்பட உரைக்கின்றது. வையத்து வாழ்வாங்கு வாழ வழி காட்டுகிறது; இலக்கிய நயங்கள் செறிந்துள்ள நீதி நூலாக விளங்குகின்றது.

உவமை:

திருவள்ளுவர் அறநெஞ்சும், உலகியலறிவும் பெற்றிருந்ததோடு அழகுணர்ச்சியும் உடையவராய்த் திகழ்ந்தமையால் அவர் நூல், கலைமணம் கெழுமியதாய் அமைந்தது. அவருடைய செவ்வாயினின்று வரும் திரு மொழிகள் அழகு என்னும் ஆடையுடுத்தி, உவமை என்னும் அணிபுனைந்து எழிலார்ந்து இலங்குகின்றன. அரிசி மணி மிகச் சிறியது; அதில் கைதேர்ந்த கலைஞன் ஒருவன் ஆனந்தக் கூத்தனின் தெய்வீக வடிவினை அமைக்கிறான். அவ்வரிசி மணி சிறிதாக இருந்தாலும் கலைஞன் தில்லைக்கூத்தன் திருமேனியின் பேரழகினை முழுமையாகக் காட்டத் தவறுவதில்லை. அதில் குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும் தெரிகின்றன. கொவ்வைச் செவ்வாய் மட்டுமா? குமிண் சிரிப்புமல்லவா புலனாகின்றது. பனித்த சடையும் பவளம்போல் மேனியும் காட்டுகிறான். அவற்றைமட்டுமா? சடையில் தங்கும் கங்கை, மேனியில் துதைந்த பால் வெண்ணீறு ஆகியவற்றையெல்லாம் காட்டுகிறான். என்னே கலைஞனின் கை வண்ணம்! அவனைப்போலவே நம் வள்ளுவப் பெருந்தகை ஏழு சீர்களுக்குள் எவ்வளவு வியத்தகு வேலைப்பாடுகளை எல்லாம் காட்டுகிறார்! அவற்றை ஆய்தொறும் நன்கு விளங்கும்; அறிதொறும் நம் அறியாமை புலப்படும்.

கவிதை நிலத்தில் ஆழமாக வேர்விட்டு நிற்பது உவமையணி. கவிஞனின் முருகியல் உணர்வினைக் காட்டி, அவன் நூலுக்கு அழகு சேர்த்துக் கற்போர்க்குக் கழிபேர் உவகை தருவன உவமைகளே. உவமை தரும் இன்பம் உலப்பிலா இன்பம் என்னலாம்.

**உவமையின் செயல்:**

ஒரு சூழ்நிலையைப் பல சொற்களால் விளக்கிச் சொல்லும்பொழுது இல்லாத தெளிவினை ஒரு சிறு உவமை தரவல்லது. கவிஞனின் உணர்ச்சி அனுபவத்தையும் கற்பனை அழகினையும் சிதையாமல் அப்படியே கற்போர் உள்ளத்தில் பதியுமாறு செய்வது உவமையேயாகும். அமைச்சர் அரசருடன் பழகும் முறையை வள்ளுவர் விளக்குகிறார். அங்கு ஓர் உவமையைக் கையாளுகிறார். அங்கு உவமை யில்லாமலேயே அந்தக் கருத்தினை விளக்கிவிடலாம். ஆனால் உவமையால் விளக்கும்பொழுது புதிய மெருகும் தெளிவும் உண்டாவதை உணரலாம். அரசனோடு மிகவும் நெருங்காமலும் விலகிச்செல்லாமலும் இருக்கவேண்டும் என்பது கருத்து. அதை வள்ளுவர்,

> 'அகலா(து) அணுகாது தீக்காய்வார் போல்க
> இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.'

என்று உவமையோடு குறளாக வடிக்கும்பொழுது ஓர் இனிமையும் தெளிவும் பிறத்தல் ஓர்க.

சொல்லுக்கெட்டாத் துரிய நிலையில் விளையும் அனுபவங்களை, மோனத்தவத்தில் உதித்தெழும் விளக்கங்களை மண்ணில் கால் பாவி நடக்கும் மக்களுக்கு எளிதாக எடுத்துக்காட்டும் பணியைத்தான் உவமை செய்கிறது. இத்தகைய உவமையை எவன் திறம்படக் கையாளுகிறானோ அவனே பெருங் கவிஞன். இக் கவிஞர்களுக்கெல்லாம் ஞானத் தந்தையாக விளங்குபவரல்லவா வள்ளுவப் பெருந்தகை!

**ஐவகை உவமைகள்:**

மனிதர்களைவிட கவிஞர்கள் புலன் உணர்வு மிக்கவர்கள். ஒளி படைத்த கண்ணும், கூரிய செவியும்,

நாக்கும், மூக்கும் உடையவர்கள் – ஐம்பொறிகளின் வாயிலாக அறிந்தவற்றுள் உவமை சொல்லத் தகுந்த வற்றையெல்லாம் சொல்லிக்காட்டுவார்கள். திருவள்ளு வரும் தாம் கண்ணால் கண்டவற்றையும், காதால் கேட்ட வற்றையும், நாவால் சுவைத்தவற்றையும், மூக்கால் மோந்தவற்றையும், மெய்யால் உணர்ந்தவற்றையும் உவமை காட்டிச் சென்றுள்ளார்.

*'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை*
*வீயா தடியுறைந் தற்று.'*

என்ற குறளில் வினையின் ஆற்றலை, உறுத்துவந்து ஊட்டும் திறத்தை விளக்குகிறார். ஒருவனுடைய நிழல் அவனைவிட்டு நீங்காதிருப்பதைப் போலவே வினையும் நீங்காதென்கிறார். இது கண்ணால் கண்டறிந்து அமைத்த உவமை.

பகுத்துண்டு வாழும் மேன்மக்களின் உயர்வினையும் ஆக்கத்தையும் பற்றிப் பேசுகிறார்.

*'காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்*
*அன்னநீ ரார்க்கே உள.'*

என்பது குறள். தன் இனத்தை அழைத்து உறவு கலந்துண்ணும் காக்கையின் குரலும் செயலும் உவமை யாக்கப்படுவதைக் காண்கிறோம். செவியினால் ஓர்ந் தமைத்த உவமை இது.

தலைவியின் வாலெயிறு ஊறிய நீர் தலைவனுக்கு எச்சிலாகத் தோன்றவில்லை. பேரினிமை உடையதாக உள்ளது. பாலொடு தேன் கலந்தது போலத் தீஞ்சுவை தருகிறது. - வள்ளுவர்,

'பாலொடு தேன்கலந்(து) அற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்'

என்றார். இஃது உண்டறிந்து உரைத்த உவமை.

உலகில் எல்லா மலர்களும் மெல்லியன; அவை யெல்லாம் வெயில் பட்டால் கருகக்கூடியன. காற்றில் மெல்லென அசைவன. அவற்றுள் மிக மெல்லியது அனிச்சப்பூ. அது மூச்சுக்காற்றுப்பட்டாலே வாடக் கூடியது. அதை விட மென்மையுடையது விருந்தினர் முகம். முகம் திரிந்து நோக்கினாலேயே குழையக்கூடியது அது. இதை வள்ளுவர்,

'மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து'

என உவமை காட்டி விளக்குகிறார். அவருடைய உயிர்த்தறியும் புலனுணர்ச்சியால் கண்டறிந்த உவமை இது.

வெகுளாமையைப் போற்றிச் சொல்லும் வள்ளுவர் பெரும் நெருப்புத் திரளில் கையைத் தோய்த்தால் எவ்வளவு துன்பமுண்டாகுமோ அத்தகைய துன்பத்தை ஒருவன் தந்தாலும், அவனுக்கு நன்மை செய்து நட்பாக்கிக் கொள்ளுதல் சிறப்பு என்று பேசும்பொழுது

'இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று'

என்கிறார். உற்றறிந்து அமைத்த உவமைகளுள் ஒன்று இது.

இப்படி நம்மைவிட நுட்பமாக ஐம்புலன்களால் உலகைக் கூர்ந்து நோக்கிப் பல உவமைகளை அமைத்துள்ள வள்ளுவர் அறிவுத் திறத்தாலும், கல்வி வளத்

தாலும் பல உவமைகளைப் படைத்துள்ளார். ஐம்புலன் களால் அறியமுடியாத நுண்மைப் (alytract) பொருள் களைக்கூட உவமையாக எடுத்தாளுகிறார் வள்ளுவர்.

'இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்,'

என்னும் குறள் காண்க.

இவ்வாறாக உவமைகளைப் பிரித்து ஆராய்வதும், ஆசிரியர் பால் எந்தப் புலனுணர்வுக் கூறுகள் மேலோங்கி நிற்கின்றன என்பதைக் காண்பதும் ஒரு வகை ஆராய்ச்சி. இவ்வாராய்ச்சிகளால் ஆசிரியரின் உள்ளத்தை ஓரளவே காண இயலும்.

நூலாசிரியர்

நண்பர் திரு,இராமசாமி அவர்கள் திருக்குறள் தரும் உவமையின்பத்தைத் தேர்ந்து மாந்தி மகிழ்ந்துள்ளார். அத்தோடமையாது, ஆசிரியரின் உள்ளத்தை அறிய விழைந்துள்ளார். இந்நூலில் நுழைவோர் இவ்வுண் மையை உணர்வர்.

திறனாய்வாளர்க்கு முதன்முதலில், தான் ஆராயும் நூலில் ஈடுபாடு வேண்டும். இதுதான் திறனாய் வாளர்க்கு வேண்டிய முதல் பண்பு என்பர் மேலைநாட்டு அறிஞர் வின்செஸ்டர். நண்பர் திரு. இராமசாமி அவர் களிடம் இப்பண்பு நிறைந்துள்ளது. 'பிறவிப் பெருங் கடல்' என்ற தலைப்பில் அவர் எழுதியுள்ள சில வரிகளே இவ்வுண்மையை நிறுவும்.

“முதன்மைப் பண்புவாய்ந்த ஆதிபகவனை-தலைவனை-பெரியோனைத் துணையாகக் கொண்டு வாழ்தலே, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும்

தெய்வமாகப் போற்றப்படும் வழியாகும். அதற்கு வான்புகழ் வள்ளுவர் தந்த திருக்குறளே சிறப்பு வழி காட்டி – துணை – படகு எல்லாம்." — பக் 18 - 19.

இத்தகைய பரிவோடும் பணிவோடும் நூலுக்குள் செல்லும் அவர் தம் சீர்மையும் நீர்மையும் நேர்மையாளர் பாராட்டிற்குரியன.

உவமைகளைக்கொண்டு வள்ளுவர் நெஞ்சைக் காணத்துடிக்கும் நண்பர், பிற சான்றோரின் கருத்துக்களோடு வள்ளுவத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறார். இராமாயணம், பாரதம், சிலம்பு முதலிய காப்பிய நிகழ்ச்சிகளும், நாலடியார் கருத்துகளும், பாரதியார் மணிமொழிகளும் ஆங்காங்கே தெளிவு நோக்கி எடுத்தாளப்பட்டுள்ளன. ஆசிரியர் பல இடங்களில் நிறைமொழி மாந்தராம் வள்ளுவரின் மறைமொழியை உலகியலோடு இணைத்துக் காட்டியுள்ளார்.

ஆழம், அழகு, தெளிவு:

நண்பரின் இவ்வரிய நூல் ஆழமும், அழகும், தெளிவும் நிறைந்து விளங்குகின்றது.

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை."

என்ற குறளை நோக்குவோம்.

இக்குறளில் வள்ளுவர் இரண்டு பண்புகளை விளக்குகிறார். இகழ்வாரைப் பொறுத்தல் நல்லவர் கடன். இத்துடன் வள்ளுவம் நிற்கவில்லை. மேலும் உயர்ந்து செல்கிறது. பொறுத்தலோடு இகழ்ந்தவரைத் தாங்குதலும் வேண்டும். எனவே தாங்குதல், பொறுத்தல் இரண்டு பண்பும் வேண்டும். வள்ளுவர் இவ்விரண்டு பண்புகளையும் உவமையில் ஒன்றினையும்

பொருளில் மற்ருென்றினையும் வைத்து விளக்குகிருர். இகழ்வாரைத் தாங்கும் பண்பினை உவமையிலும், பொறுத்துக்கொள்ளும் பண்பினைப் பொருளிலும் வைத்துள்ளார். அஃதாவது அகழ்வாரைப் பொறுத்துத் தாங்கும் நிலம்போல இகழ்வாரைப் பொறுத்துத் தாங்கல் தலை என்று விரித்துக்கொள்ள வேண்டும். இந் நுட்பத்தினை உணர்ந்த நூலாசிரியர்,

"நிலம் உலக மக்களைத் தாங்கி வாழ்வளிக்கிறது. மக்கள் யாது செய்கின்றனர்? நில மங்கையின் உடலைக் கீறி உழுகின்றனர்! கொத்துகின்றனர்! வெட்டுகின்றனர்! பிளக்கின்றனர்! தோண்டுகின்றனர்! ஏதேதோ செய்கின்றனர். இவ்வளவு துன்பம் செய்யும் மக்களையும் பொறுத்துக்கொண்டிருக்கிறது! பொறுப்பதோடல்லாது சுடச்சுட ஒளிவிடும் பொன்போல எவ்வளவுக்கெவ்வளவு மக்கள் நிலத்தை அகழ்கிருர்களோ, அவ்வளவுக் கவ்வளவு அவர்களுக்குப் பெரும் பயன் தந்து வாழ வைக்கிறது. அதனுல்தான் நிலத்தைத் தாய்போல் கருதுகின்றனர் மக்கள்." — பக் 39.

"இவ்வுவமை, துன்பம் செய்வோரைப் பொறுப்பதோடல்லாமல் அவர்களுக்குத் தக்க நன்மைகளையும் செய்யவேண்டும் என உணர்த்துகிறது" —பக் 40

என்று தெளிவாக்கியுள்ள திறம் ஓதி மகிழ்தற்கு உரியது.

ஒரு சில குறட்பாக்களுக்கு இவர் கொடுத்த விளக்கங்கள் புதிய சிந்தனை வளர்ச்சியைக் காட்டுகின்றன. தோண்டிய அளவு ஊறுவது மணற்கேணி. ஊறிய நீரை இறைக்க இறைக்கத்தான் நீரில் தூய்மையும் தெளிவும் உண்டாகும். இறைக்காவிட்டால் குறைந்து

கெட்டு தீயநாற்றம் வீசும் என்ற கருத்தைக் கல்வி யோடு இணைத்துக்காட்டும் பாங்கு நன்றாக உள்ளது.

"ஊறிய நீரை இறைக்காமல் விட்டுவிட்டால் ஊற்றின் அளவும் குறைந்து, நீரும் கெட்டுத் தீய நாற்றம் வீசும். அதைப்போல, கற்ற அறிவைப் பிறருக்கு வழங்காமல் தேக்கிவைத்தால், அறிவு வளர்ச்சி குன்றிக் கெட்டுவிடும்". —பக் 79.

இக்காலப் புதிய வுரைகளையும் தழுவிச் செல்லும் நோக்கினர் நூலாசிரியர் என்பது, 'தெய்வந் தொழாள்' என்று தொடங்கும் குறளில் 'பெய்யெனப் பெய்யும் மழை' என்ற ஈற்றடியை எடுத்துக்காட்டுவமையணி எனக் கொள்வதிலிருந்து போதரும்.

கருத்துக்களை நிரல்படத் தெளிவாக விளக்குவதில் ஆசிரியர் சிறந்து நிற்கிறார். கொழுநனைத் தொழுது எழும் பெண்ணை மழைக்கொப்பாகச் சொல்லுபவர், கண்ணகியின் வெவ்வேறு நிலைகளை மழையின் வெவ்வேறு நிலைகளோடு ஒப்பிட்டுக் காட்டுமிடம் கட்டுரை வன்மைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

"புகார்க் காண்டத்துக் கண்ணகி, பெய்யெனப் பெய்யும் மழைபோல் இருந்தாள்.மதுரைக் காண்டத்துக் கண்ணகி பொற்கொல்லனின் சூழ்ச்சியாலும் பாண்டி யனின் ஆராயாத செயலாலும் சினங்கொண்டு, பெரும் புயலோடு கூடிய மழைபோலும் எரிமலைபோலும் ஆனாள்." —பக் 22, 23.

அழகுணர்ச்சி உடையவர்களால்தான் காமத்துப் பாலின் ஈடும் எடுப்புமற்ற கவிதைச் சிறப்பினை உணர்ந்துகொள்ள முடியும். நண்பர், திரு இராமசாமி அவர்கள் நல்ல முருகியல் உணர்வினர்.

தலைவியைக் காணும் தலைவன் அணங்கோ, மயிலோ, மாதோ என ஐயமுற்றுத் தெளிவடைந்ததை நல்ல சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார்,

"உடம்பொ(டு) உயிரிடை யென்ன மற்(று) அன்ன
மடந்தையொ(டு) எம்மிடை நட்பு'

என்ற குறட்பாவிற்கு உணர்ச்சி மிக்கநடையில் விளக்கம் தந்துள்ளமை நன்ருக அமைந்துள்ளது.

ஆசிரியர், 'அழுக்காறு' (பக் 36) என்பதற்குக் கொடுத்துள்ள விளக்கம் சிந்தனைக் குரியதாம். 'அழுக்காறு' என்பது ஒரு சொல் நீர்மைத்து' என்கிருர் பரிமேலழகர். நண்பர், அழுக்கு, ஆறு என இரண்டு சொற்களாகக் கொண்டு எழுதும் விளக்கம் அறிஞர்களின் ஆராய்ச்சிக்குரிய கருத்தாகும்.

**தமிழகம் ஏற்றிப் போற்றுவதாக:**

தமிழ்ப்பணியையே வாழ்வாக மேற்கொண்ட நண்பரின் அரிய முயற்சியான இந்நூலைத் தமிழ்கூறு நல்லுலகம் போற்றிப் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. அவர், தமிழ்த்தாயின் அருட்பார்வை வெள்ளத்தில் நனைந்து நல்லநல்ல இறவாத புதுநூல்கள் இன்னும் பல ஆக்கித்தருமாறு வேண்டுகிறேன்.

# முன்னுரை

வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு நம் நாடு. வள்ளுவன் தந்த தெள்ளமுதாம் திருக்குறளை அறிந்தோர் பலர்; உணர்ந்தோர் சிலர்; முழுப் பெருமையும் உணர்ந்தோர் மிகச் சிலர்.

எளிய அறிவுடையோரும் திருக்குறளைக் கற்றுப் பயன்பெற வேண்டும். கற்றோரும் நுண்பொருள் உணர்ந்து இன்புறவேண்டும். திருக்குறள் உவமைகளில் பொதிந்து கிடக்கும் பொருள் நயத்தை யாவரும் உணர்ந்து இன்புறவேண்டும். இந் நோக்கங்களுக்காக உருவானதே இந்நூல்.

எளியவர்களுக்காக எளிய நடையில் எழுதியுள்ளேன். கற்றோரும் இன்புறுவதற்காக உவமை நயத்தை விளக்கியுள்ளேன். கல்லூரி நூல் நிலையம், உயர்நிலைப் பள்ளி நூல் நிலையம், பொது நூல்நிலையம் ஆகியவைகளுக்குப் பயனுடைய நூல். திருக்குறள் கற்க விரும்பும் ஒவ்வொருவருக்கும் மிகப் பயனுடைய நூல்.

1961-ஆம் ஆண்டில் இந்நூலை உருவாக்கினேன். அன்றைய அரசியல் செய்திகள் சிலவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல' என்ற தலைப்பில் உள்ள கட்டுரையில், கியூபா நாட்டுத் தொடர்பாகக் கென்னடியும் குருசேவும் அன்று போர்முரசு கொட்டிக்கொண்டிருந்ததால், அன்றைய சூழ்நிலையை வைத்து, அவர்களைப் 'போர் வெறிகொண்ட கொடியவர்கள்' என்று எழுதி

னேன். பின்னர் அவர்களே சமாதானப் பெரியார் களாக உலகப் புகழ்பெற்றனர். இதைப்போன்ற சில கருத்துக்கள் மாறுபட இருக்கலாம். குறைகள் இருப்பின் அறிஞர்கள் பொறுத்தருள்க.

கம்பராமன் எஸ். கே. இராமராசன் அவர்களும், சிந்தாமணிச் செம்மல் மு. இராமசாமி அவர்களும் கம்ப ராமாயணம், சீவகசிந்தாமணி போன்ற இலக்கியங்களில் நுண்மாண் நுழைபுலமும், காரைக்குடிக் கம்பன் கழகம் போன்றவற்றுடன் நீங்காத் தொடர்பும் கொண்டவர்கள்; தமிழ்நாடு மட்டுமின்றி, பம்பாய், கல்கத்தா போன்ற பெரு நகரங்களின் தமிழ்ச் சங்கங்கள் மூலமாகவும் பைந் தமிழின் புகழ்பரப்பும் பெரியார்கள். இத்தகைய பெரியார்கள், எனது எழுத்துப்பணிக்கு அடிக்கடி ஊக்க மூட்டி வருவதோடு, இந்நூல் அச்சாவதற்கும் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார்கள். இந் நூலுக்கும் எனக்கும் வாழ்த்துப்பாக்களும் வழங்கிச் சிறப்பித் துள்ளார்கள். அவ்விரு பெரியோருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தை உரித்தாக்குகின்றேன்.

மதுரைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர், பன் மொழிப் புலவர் உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் அன்புடன் வழங்கியிருக்கும் அணிந்துரை எனக்குப் பெருமையும் ஊக்கமும் அளிக்கிறது. அவர் களுடைய பேரன்பிற்கு மிகவும் நன்றி கலந்த வணக் கத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வேலூர் கந்தசாமிக்கண்டர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றும் திரு. தெ. ஞான சுந்தரம், எம். ஏ. அவர்கள் பைந்தமிழ்ப்பற்றும், ஆழ்ந்த இலக்கியக் கல்வியும், கேட்டார்ப் பிணித்துக் கேளாரும்

வேட்கும் வண்ணம் சொற்பொழிவாற்றும்நாவன்மையும் பெரும்பண்புடைமையும் பூண்டவர்கள். அவ்வறிஞர் இந்நூலுக்குச் சீரார் சிறப்புரை வழங்கிச் சிறப்பித் துள்ளதால் அவருக்கும் என் நன்றிகலந்த வணக்கம் உரித்தாகுக.

புலவர் அ. சாம்பசிவம், சட்டமன்ற உறுப்பினர், அவர்கள் வள்ளுவம், காந்தியம், அருட்பா ஆகிய வற்றில் ஆழ்ந்த பற்றும் நெறிதவரு வாழ்வும் கொண்டு அரசியலிலும் நேர்மையாளர் உளர் என்பதற்குச் சான்ருகத்திகழ்பவர்கள்.அப்பெரியார் எனது நூலுக்குப் பாராட்டுரையும் எனது எழுத்துப் பணிக்கு வாழ்த் துரையும் வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அவர்களுக் கும் என் நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்து கிறேன்.

சிறந்த தமிழ் நூல்களை வெளியிடுவதன் மூலம் தமிழ்த் தொண்டாற்றி வரும் காரைக்குடிச் செல்வி பதிப்பக உரிமையாளர் திரு, பெ. சிவ. வீர. சிவராமன் செட்டியார் அவர்கள் இந்நூலையும் வெளியிட்டு உதவி யுள்ளார்கள். அவர்களுக்கும் என் நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

குறுகிய காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த காரைக்குடி தென்இந்திய அச்சகத்தாருக்கும், அச்சுப் பிழைகள் திருத்தி உதவிய புலவர். வை. சு. ஆறுமுகம் அவர்களுக்கும் என் அன்பார்ந்த நன்றி.

என்னுடன் பணியாற்றும் ஆசிரிய நண்பர்கள் திருவாளர்கள், பெ. சுந்தரராசன், பி. ஏ. பி.டி., ஆசிரியர் இரா. வேங்கடசாமி, ஆசிரியர் பொ. பங்காருசாமி முதலியோர், யான் இந்நூலை உருவாக்குங்கால் அவ்

வப்போது படித்து ஊக்குவித்து வந்தனர். அவர்களுக்கும் என் உளம் கனிந்த நன்றி.

ஓர் இளம் எழுத்தாளனின் முன்னேற்றம், அவனது நூலைப் படித்து ஊக்குவிக்கும் அறிஞர்களின் கையில் உள்ளது. எனவே, நற்றமிழ் அறிஞர்கள் இந்நூலைப் படித்து என்னை மேன்மேலும் இப்பணியில் ஊக்குவிக்குமாறு வேண்டுகிறேன்.

இப்பணியில் என்னை ஈடுபடுத்திய தமிழ்த்தாயின் திருவருளை வியந்து மன, மொழி, மெய்களால் வழுத்துகின்றேன்.

வைரிசெட்டிப்பாளையம்<br>6—1—67

ஆ. வே. இராமசாமி.

# திருக்குறள் தரும் உவமை யின்பம்

## உவமை

அறியாதோருக்கும் அறியக் காட்டும் கருவியாகவும், கற்போருக்கும் கேட்போருக்கும் இன்பம் மிகப் பயக்கும் அணியாகவும் பயன்படுவதே உவமை. புலியைக் கண்டறியாத சிறுவனுக்குப் "புலியானது பூனையைப் போன்ற வடிவத்தில் பெரிதாக இருக்கும்" என்று கூறினால், அச்சிறுவன் எப்பொழுதும் கண்டு பழகிய பூனையின் வடிவத்தைக் கற்பனையில் பெரிதாக்கி, மனக் கண்ணால் புலியைக் காண்பான் திரைப் படத்திலோ, விலங்குக் காட்சிசாலையிலோ, முதன் முதலாகப் புலியைக் காணும்போது, முன்பே கேட்டறிந்த உவமையை நினைவுறுத்தி 'இதுதான் புலி' என உணர்வான். இது அறியாதோரையும் அறியக்காட்டும் உவமையாகும்.

'தாமரை போன்ற அழகிய முகத்தாள்', 'திங்கள் போல் ஒளிவீசும் முகத்தாள்', 'தேன்போல் இனிக்கும் மொழியாள்' என்பன போன்றவை கற்போருக்கும் கேட்போருக்கும் இன்பம் பயக்கும் உவமை அணியாகும்.

உவமானம், உவமேயம், உவம உருபு, பொதுத் தன்மை என உவமையின் உறுப்புகள் நான்காம். 'பவளம் போன்ற செவ்வாய்' என்ற உவமையில், பவளம் — உவமானம்; வாய் — உவமேயம்; போன்ற — உவமஉருபு; செம்மை — இரண்டிற்கு முரிய பொதுத் தன்மை. இவ்வுறுப்புகளில் ஒன்ரே, இரண்டோ மறைந்து சுருங்கி வருவதுமுண்டு. 'பவளம் போன்ற வாய்' — இதில் பொதுத்தன்மை மறைந்துள்ளது. 'பவள வாய்' இதில் பொதுத்தன்மையும், உவமஉருபும் மறைந்துள்ளன. உவமைக்குரிய நான்குறுப்புகளில் குறைந்து வருவனவற்றைத் 'தொகை உவமை' என்றும், 'உவமைத் தொகை' என்றும், நான்குறுப்பு களேயும் பெற்றுவருவனவற்றை 'விரியுவமை' என்றும் இலக்கண நூலார் இயம்புவர். 'தேன்மொழி' என்பது தொகை உவமை. 'தேன் போன்ற இனியமொழி' என்பது விரியுவமை.

இத்தகைய உவமையைப் பற்றி, ஒல்காப் பெரும் புகழ் தொல்காப்பியனுர் கூறுவனவற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

"பொருளின், தொழில், பயன், வடிவம், நிறம், ஆகிய நான்கையும் உவமை புலப்படுத்தும். ஒரே உவமையில் ஒரு பொருள் தோன்றுவதன்றி, இரண்டும் பலவும் தோன்றுவதுமுண்டு. உயர்ந்த பொருள்களேயே உவமையாகக் காட்டவேண்டும். சிறப்பு, அழகு, காதல், வலிமை ஆகிய நான்கையும் அடிப்படையாகக்

கொண்டே உவமை தோன்றும். அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப, இவற்றைப் போல முப்பத்தாறுக்கு மேற்பட்டவை உவம உருபுகளாக இலக்கியத்தில் பயின்று வரும்.''

இவை போல இன்னும் பல கருத்துக்களைத் தொல்காப்பியப் பொருளதிகார உவமை யியலில் தொல்காப்பியர், விரிவாகக் கூறுகிருர். விரிவஞ்சிச் சுருக்கமாக எழுதினேன்.

## சிறப்பு

இத்தகைய உவமையணியை அடிப்படையாகக் கொண்டே, எடுத்துக்காட்டுவமை, இல் பொருளுவமை, ஐயவுவமை, உருவகம், பிறிதுமொழிதலணி, வேற்றுமை, என்பன போன்ற பல பல அணிகள் பிற்காலத்தே தோன்றின. இலக்கியங்களில் பயின்று வரும் அணிகளுக்கெல்லாம் 'உவமை' என்னும் ஒப்பற்ற அணியே அடிப்படையாகும். 'உவமை யென்ற சிறந்த நாட்டியக்காரி, பல வகை வேடங்களை அணிந்து இலக்கியம் என்னும் அரங்கில் தோன்றிப் பலவகை அணிகளாம் நாட்டியங்களாடி, புலவருள்ளத்தை மகிழ்விப்பாள்' என்ற கருத்தை,

> "உவமை என்னுந் தவலருங் கடத்தி
> பலவகைக் கோலம் பாங்குறப் புனைந்து
> காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
> யாப்பறி புலவர் இதய (ம்)
> நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே"

என்று வடமொழி அப்பைய தீட்சிதர் தமது சித்திர மீமாஞ்சையில் கூறியுள்ளார்.

இப்பெற்றித்தாய உவமையணியை, தமிழால் தாமுயர்ந்து, தம்மால் தமிழையுயர்த்தி, உலகிற்கே ஒப்பற்ற இலக்கியத்தைத் தந்துதவிய தெய்வப்புலவர் திருவள்ளுவனார், தம் திருக்குறளில் நன்கு பயன் படுத்தியுள்ளார்.

உவமை என்னும் அணங்கு உவமை வடிவிலேயே மிகப் பல விடங்களிலும், எடுத்துக்காட்டுவமை, பிறிது மொழிதல், உருவகம் முதலிய வடிவங்களில் சில விடங் களிலும் தோன்றியாடிக் கற்போருள்ளத்தையும் கேட் போருள்ளத்தையும் களிபேருவகை கொள்ளச்செய்து, மிகச்சிறந்த கருத்துக்களை யுணர்த்தும் படியாகத் திரு வள்ளுவர் மிகத்திறம்படத் திருக்குறளை யாத்துள்ளார். குறள் தரும் உவமை இன்பத்தைக் கூடுமான வரையில், எளிய அறிவு படைத்தோரும் துய்த்து இன்புறுமாறு எடுத்து விளக்குவதே இக் கட்டுரைத் தொகுப்பின் நோக்கம்.

## 1. அகரமுதல எழுத்தெல்லாம்

எப்பாலோரும் போற்றும் முப்பாலில், முதல் அதி காரத்தில், முதல் குறளிலேயே திருவள்ளுவர் உவமை யைக் கையாண்டுள்ளார். முதற்குறள், உவமையும், எழுத்துக்களுக்கெல்லாம் முதலாகிய அகரத்தில் தொடங் கப்படுவது நூலுக்கே தனிச்சிறப்பாகும். “அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு” என்ற முதற்குறளில், முதலில் அமைந்துள்ள ‘அகரமுதல எழுத்தெல்லாம்’ என்பது உவமானமாகும். இவ்வுவ மானத்தின் சிறப்பை யுணர முதலில் அகரத்தின் சிறப்பை யுணர வேண்டும்.

‘அ’ என்ற எழுத்தே ‘அகரம்’ எனப்படும். எல்லா எழுத்துக்களும் அகரத்தை முதலாக உடையன. அதா

வது எல்லா எழுத்துக்களுக்கும் 'அ' என்ற எழுத்தே முதன்மையும் தலைமையும் வாய்ந்த தாகும்.

எவ்வகை உயிருள்ளும் மக்களுயிர் சிறந்து விளங்கவும், முன்னேறவும் கருவியாக அமைந்திருப்பது மொழியே. மொழியின் இயக்கத்திற்குக் கருவி எழுத்துக்களே. எழுத்துக்களின்றேல் மொழியில்லை! அறிவில்லை! ஆராய்ச்சியில்லை! இலக்கியங்களில்லை! விஞ்ஞானமில்லை! சந்திரமண்டில ஆராய்ச்சியில்லை! மக்கள் முன்னேற்றமில்லை! மக்களும் பகுத்தறிவற்ற விலங்குகளே! எழுத்தும் மொழியுமின்றேல் சிந்தனையும் பகுத்தறிவு வளர்ச்சியுமேது? என்னே எழுத்துக்களின் சிறப்பு!

இவ்வளவு சிறப்பு வாய்ந்த எழுத்துக்களுக்கெல்லாம் முதன்மையாக விளங்குவதே அகரம். ஒலி வடிவம் வரிவடிவம் என எழுத்துக்களுக்கு இருவடிவங்களுண்டு. ஒலிக்கப்படுவது ஒலி வடிவம். எழுதப்படுவது எழுத்து வடிவம். காலத்தையும் தூரத்தையும் கடந்து நிலைத்த பயனைத் தரும்படியாக எழுதப்பட்டதால் எழுத்து எனப் பெயர் பெற்றது. வரி வடிவத்தில் எல்லா எழுத்துக்களுக்கும் முதலில் திகழும் அகரம் ஒலி வடிவத்திலும் முதன்மை பெற்று விளங்குகிறது. எங்ஙனம்?

வாயைத் திறந்தவுடன் உண்டாகும் ஒலி 'அ' என்பதாகும். வாயைத் திறக்காமல் எவ்வெழுத்தையும் ஒலிக்க இயலாது. வாயைத் திறந்த உடன் உண்டாகும் அகர ஒலியின் மூலமாகவே எல்லா எழுத்துக்களும் ஒலிக்கப்படுகின்றன. எனவே, அகர ஒலி எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாக இருப்பதோடன்றி, எல்லா எழுத்துக்களுக்கும் உயிராகவும் நின்று இயங்குகிறது.

தமிழ் மொழியில் பட்டுமல்லாமல் எல்லா மொழிகளிலும் அகரம் முதன்மை பெறுகிறது. தமிழின் சேய்

மொழிகளான, மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலியவற்றிலும், தமிழுக்கு நிகராகப் பண்டைய காலத்தில் விளங்கிய வடமொழியிலும், அதன் சேய் மொழிகளான இந்தி முதலியவற்றிலும் அகரமே முதன்மை பெறுகிறது.

உலகப் பொது மொழியெனப் போற்றப்படும் ஆங்கிலத்தின் முதல் எழுத்தாகிய 'A' என்பது அகரத்தின் மறுவடிவமாகும். 'அம்மா' என்ற சொல்லை அப்படியே ஆங்கிலத்தில் எழுத வேண்டுமானால் 'Amma' என்று எழுத வேண்டும். இங்கு அகரத்தின் மறுவடிவமே 'A' என்று உணரலாம்.

மேற் கூறியவற்றால் எல்லா மொழிகளிலும் எல்லா எழுத்துக்களுக்கும் அகரமே தலைமையாகவும் உயிராகவும் முதன்மையாகவும் விளங்குவதை அறியலாம். என்னே அகரத்தின் சிறப்பு! என்னே திருவள்ளுவர் காட்டிய முதலுவமையின் சிறப்பு!

இனி, உவமேயத்தின் சிறப்பை நோக்குவோம். 'ஆதிபகவன் முதற்றேயுலகு'–முதன்மையான பண்பு வாய்ந்த இறைவனை உலகம் முதலாக உடையது.

எவ்வுயிர்க்கும் முதன்மையாய்த் தலைமை தாங்கல் தூய அறிவு,அன்பர்களின் இதய மலரில் தங்கல், விருப்பு வெறுப்பற்ற சமநிலை யெய்தல், இருவினை சாராதிருத்தல், ஐம் பொறிகளைத் தீய நெறியில் செலுத்தாது அடக்கல், தனக்குவமை யில்லாத உயர்நிலை யெய்தல், அறக்கடலாய்த் திகழ்தல் ஆகிய எட்டுப் பண்புகளையும் எய்தியவனே முதன்மையான பண்புவாய்ந்த இறைவன் ஆதிபகவனாவன். இத்தகைய தலைவனே, அகரத்தைப் போன்று, உலகிற்கெல்லாம் முதல்வனாகவும் உலகத்

தையே இயக்குபவனாகவும் உள்ளான். இப்பொழுது உவமையின் சிறப்பை நோக்கி உவமை தரும் இன்பத்தை நுகருங்கள்.

உவமானம்:- அகரம் எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாக இருந்து எல்லா எழுத்துக்களையும் இயக்குகின்றது. (அதைப்போல)

உவமேயம்:- முதன்மையான பண்பு வாய்ந்த தலைவன், உலக உயிர்களுக்கெல்லாம் முதன்மையாக இருந்து, உலகத்தை யெல்லாம் இயக்குகிறான்.

> அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே யுலகு. (குறள்-க)

இக்குறளில் 'அதைப்போல' என்ற சொல்லுக்குரிய உவம உருபுஇல்லை. இங்ஙனம் உவம உருபு இல்லாமல், உவமான உவமேயங்களை மட்டும் அமைத்துப் பாடுவதற்கு, 'எடுத்துக்காட்டு உவமை அணி' என்று பெயர்.

இங்ஙனம் குறளரங்கில், உவமையென்னும் அணங்கு முதன்முதலாக, 'எடுத்துக்காட்டுவமை' என்ற உடையுடன் நடித்து இன்பமூட்டுகிறாள். இனி, ஏனைய நாட்டியங்களைக் காண்போம்.

## 2. பிறவிப் பெருங்கடல்

முதல் அதிகாரத்திலேயே எட்டாவது குறளிலும் பத்தாவது குறளிலும் உவமையணங்கு 'உருவகம்' என்னும் வேடத்தில் தோன்றுகிறாள். 'தாமரை போன்ற முகம்' என்பது உவமை. 'முகமாகிய தாமரை' என்பது உருவகம். உவமையில் உவமானம் முதலிலும் உவமேயம் பின்னும்வர, உருவகத்தில் உவமேயம் முதலிலும் உவமானம் பின்னும் வந்துள்ளன. உவமை

யில் இரண்டும் தனித் தனிப் பொருள்கள். உருவகத்தில் இரண்டும் ஒன்றே. ‘முகமாகிய தாமரை’ என முகமே தாமரையாக மாற்றி உருவகஞ் செய்யப்பட்டுள்ளது. அதாவது உவமானத்தின் தன்மையை உவமேயத்தின் மேலேற்றிக் கூறப்பட்டுள்ளது. ‘தாமரை முகம்’ என உவமைத் தொகையாக வருவதுபோல, ‘முகத்தாமரை’ என உருவகமும் தொகையாக வரும். இதில் ஆகிய என்னும் உருவக உருபு இல்லை. எனவே உவமையின் மாறிய வடிவமே உருவகமாகும் என்பதில் ஐயமில்லை.

பிறவி: வாழ்க்கை. ‘பெருங்கடல் போன்ற வாழ்க்கை’ என்பது உவமை. வாழ்க்கையாகிய பெருங் கடல் என்பது உருவகம். ‘பெருங்கடல் கடல் வாழ்க்கை’ என்பது உவமைத்தொகை. ‘வாழ்க்கைப் பெருங்கடல்’ என்பது உருவகத்தொகை.

படகின் உதவியின்றி, கடலில் நீந்த முயல்வோர், அலையால் அலைப்புண்டு, உடல் தளர்ந்து, சுறு, முதலை முதலியவற்றிற்கு இரையாவர். வாழ்க்கையும் ஒரு பெருங்கடலே. வாழ்க்கைக் கடலில் அறியாமை, பொறாமை, சூழ்ச்சி, வறுமை, பிணி முதலிய பெருந் தொல்லைகளுள்ளன. இவற்றினின்றும் தப்பி இன்பக் கரை யடையத்தக்கதோர் படகு வேண்டும். தக்கதோர் படகு யாது? இறைவனடியே தக்கதோர் படகு. அதாவது முதன்மைப் பண்பு வாய்ந்த தலைவனைத் துணையாக– வழிகாட்டியாகக் கொண்டு, அவன் காட்டுகின்ற இறை வழி–அறவழி பிறழாது வாழ்க்கைப்படகைச் செலுத்து தலே, துன்பங்களினின்றும் தப்பி, இன்பக்கரையை எளிதில் எய்தும் வழியாகும்.

முதன்மைப் பண்பு வாய்ந்த ஆதிபகவனை–தலைவனை -பெரியோனைத் துணையாகக் கொண்டு வாழ்தலே,

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகப் போற்றப்படும் வழியாகும். அதற்கு வான்புகழ் வள்ளுவர் தந்த திருக்குறளே சிறந்த வழிகாட்டி–துணை–படகு எல்லாம்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் (குறள்–கo)

இறைவனடியாகிய படகைச் சேர்ந்தோர், வாழ்க்கையாகிய பெருங்கடலை எளிதில் கடப்பர். அப்படகைச் சேராதோர் வாழ்க்கைக் கடலை எளிதில் கடக்க இயலாது பெருந்துன்பங்களுள் அழுந்தி வருந்துவர்.

இக்குறளில் பிறவியைக் கடலாக உருவகம் செய்தது போல், இறைவனடியைப் படகாக உருவகஞ் செய்ய வில்லை. இங்ஙனம் ஒன்றை உருவகஞ் செய்து, மற்றொன்றை உருவகஞ் செய்யாமல், கற்போர் உய்த்துணரும்படியாகப் பா இயற்றுவது 'ஒற்றை உருவக அணி' எனப்படும். எனவே இக்குறளில் உவமையழகி,' 'ஒற்றையுருவகம்' என்னும் உடையில் தோன்றி ஆடி.நம்மை மக்களிப்பித்துள்ளாள்.

## 3. வையத்திறந்தாரை யெண்ணிக் கொளல்

உலகம் தோன்றிய நாள் இதுவென யாராலும் அறுதியிட்டுக்கூற இயலவில்லை. அந்நாள் தொட்டு நாள்தோறும்எண்ணற்றோர் பிறந்துகொண்டும் இறந்து கொண்டும் உள்ளனர். போரினாலும், பூகம்பம், எரிமலை, வெள்ளப்பெருக்கு, தொத்துநோய் முதலியவற்றாலும் மக்கள் கூட்டம் கூட்டமாக மடிகின்றனர். இங்ஙனம் இறந்தோரின் எண்ணிக்கையை அளவிட்டுக் கூற இயலுமா! சந்திரமண்டலத்தில் மக்களைக் குடியேற்றவும்,

நச்சுக்குண்டினால் உலகையே அழிக்கவும் முயலும் விஞ்ஞானிகளால்தான் இறந்தாரின் எண்ணிக்கையை அளவிட்டுக்கூற இயலுமா? இயலாது! இயலாது!! எவராலும் அளவிட்டுக் கூற இயலாத அளவுக்கு இறந்தாரின் எண்ணிக்கை பெருமையுடையது. அதைப் போலவேதான் துறந்தாரின் பெருமையையும் அள விட்டுக்கூற இயலாது என வள்ளுவர் கூறுகிறார்.

துறவிகளென்றால் யார்? சடைவளர்த்தும், மொட்டை யடித்தும், காவியுடுத்தும், உலகை ஏமாற்றி கூடா ஒழுக்கத்தின் மூலம் இன்பந்துய்த்து வாழும் போலித் துறவிகளா? அன்று! அன்று!! பிறர்நலம் பேணாது தன்னலங்கருதி, ஐம்புலன்களையும் அடக்கி ஒறுத்து வாழ்வாரோ? அவருமன்று!

நன்மை தீமைகளின் கூறுபாட்டை யறிந்து, தீமை களை நீக்கி, ஒழுக்க நெறியில் உறுதியாக நின்று, ஐம் புலன்களையும் தீய நெறிக்கண் செலுத்தாது அடக்கி, தன்னலம் கருதாது பிறர் நலத்திற்காகச் செயற்கரிய தொண்டுகளாற்றி எல்லா உயிர்களிடத்தும் அருள் காட்டும் அந்தணராக வாழ்வாரே உண்மைத் துறவி களாவர். புத்தர், இயேசு, முகம்மது நபி, காந்தியடிகள் போன்ற பெரியோர்களும், வ. உ. சிதம்பரம் போன்ற விடுதலை வீரர்களும், பாரதியார் போன்ற விடுதலைக் கவிஞர்களும், திருவள்ளுவர், இளங்கோ, கம்பர் போன்ற புலவர்களும் உண்மைத்துறவிகளாவர். இத்தகையோர் பெருமையே, உலகத்துப் பிறந்து இறந்தவரின் எண் ணிக்கை யளவைப்போல, அளவு கடந்ததாகும்.

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று (குறள் உஉ)

உண்மைத் துறவிகளின் பெருமைக்கு அளவுகூற வேண்டுமானல், உலகத்தில் இறந்தவரின் அளவை எண்ண முயல்வது போலாகும்.

'அற்று' என்பது உவம உருபு. ஆதலால், இக் குறளில் உவமையழகி, தனது உண்மையான வடிவத் தில் தோன்றியாடி, மிகச்சிறந்த கருத்தை யுணர்த்தி யிருக்கிருள்.

## 4. பெய்யெனப் பெய்யும் மழை.

பொய்யா மொழியார், கடவுள் வாழ்த்துக்கு அடுத்து இரண்டாவதாக 'வான் சிறப்பு' என்ற அதிகாரத்தை வைத்திருப்பதே மழையின் பெருமையை நன்குணர்த் தும். உண்டு வாழ்பவருக்கு நல்ல உணவை விளைவித்து, தானும் உணவாகிச் சிறப்புறுவது மழை! மழையின்றேல் உழவு மடங்கும்! உலகைப் பசி வருத்தும்! புல்லின் நுனியையும் காண இயலாது! அறச்செயல்கள் நடை பெரு! வளமிக்க பெருங்கடலும் வளங்குன்றிப் போகும்! உலகில் ஒழுக்கங் கெடும்!

இத்தகைய மழை, மக்களை வாழவும் வைக்கும்! தாழ வும் வைக்கும்! தக்ககாலத்தில், தக்க இடத்தில் தக்க அளவுடன் பெய்தால் உலகம் மேன்மையுற்று வாழும்! தக்க காலத்தில் பெய்யாமல் காய்ந்தாலோ அன்றி அளவுக்கு மிஞ்சி பெய்தாலோ, உயிர்கள் அல்லலுறவும் அழியவும் நேரும்.

> கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றுங்கே
> எடுப்பதூஉம் எல்லாம் மழை (குறள்-கரு)

இப் பெற்றித்தாய மழை மக்கள் வேண்டுங்காலத்து, வேண்டுமிடத்து, வேண்டுமளவு, பெய்யென்றவுடன்

பெய்து, நில்லென்ற உடன் நிற்குமே யானல், அதன் பெருமையும் பயனும் அளவிட்டுக் கூற இயலுமா! அதைப் போலவே கற்புடைய பெண்ணின் பெருமையும் பயனும்!

மனையறத்திற்குரிய மாண்புகளைப் பெற்று, கணவனின் வருவாய்க்கேற்ற செலவு செய்து, தன்னைக் கற்பொழுக்கத்தில் நிறுத்தி, கணவனின் உள்ளத்தையுல் உடலையும் பேணி, குடும்பத்தின் புகழைக் காத்து, இவற்றில் இடையூறு நேர்ந்த காலத்து சோராது பிற தெய்வங்களை எண்ணுது, தன் கணவனையே தெய்வம் போல் எண்ணி உள்ளத்தே எழுச்சி கொண்டு செயலாற்றும் பெண்ணுல், அவளுடைய கணவனுக்கும் குடும்பத்திற்கும், அத்தகைய, பெண்களால், அவர்கள் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும், 'பெய்யெனப் பெய்யும் மழை' போலப் பெரும் பயனும் பெருமையும் உண்டாகும்.

தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை (குறள்-௫௫)

கொழுநன் தொழுது எழுவாள் – கணவனையே தெய்வமாக எண்ணி உள்ளத்தே எழுச்சி கொண்டு செயலாற்றுவாள்.

இக்குறளை 'எடுத்துக்காட்டு உவமையணி' யாகக் கொள்ளுதலே சிறப்புடைத்தாகும்.

கற்புடைய பெண்கள், தம்மைப் போற்றுவோர்க்குப் பெய்யெனப் பெய்யும் மழையாகவும், சினம் மூட்டுவோருக்குப் பெரும் புயலோடு கூடிய மழையாகவும் எரிமலையாகவும் தோன்றுவர். புகார்க் காண்டத்துக் கண்ணகி, பெய்யெனப் பெய்யும் மழைபோல் இருந்தாள். மதுரைக் காண்டத்துக் கண்ணகி, பொற்கொல்லனின் சூழ்ச்சி

யாலும் பாண்டியனின் ஆராயாத செயலாலும் சினங் கொண்டு, பெரும் புயலோடு கூடிய மழைபோலும் எரிமலை போலும் ஆனுள்.

'பெண்ணின் பெருமையைப் போற்ருத சமுதாயம், பெரும் பயனை இழப்பதோடல்லாமல் பெருந்துன்பத்தை யும் அடையும்' என்ற எச்சரிக்கையான கருத்தைப் பெய்யெனப் பெய்யும் மழை' என்ற உவமை யுணர்த்து வதையும் நோக்குங்கள்.

வாழ்க பெண்ணின் பெருமை!

## 5. வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தல்.

வற்றல் மரம்–ஈரம் வற்றிக் காய்ந்து பட்டுப்போன மரம் – எங்காவது துளிர்விட்டுத் தழைப்பதுண்டா? எந்தத் தாவரநூல் அறிஞராலாவது, எந்த அறிவியல் அறிஞராலாவது காய்ந்து பட்டியமரத்தைத் தழைய வைக்க முடியுமா? முடியவே முடியாது. நீர்வளம் மிக்க நிலத்திலேயே தழையச்செய்ய முடியாத வற்றல்மரத்தை, ஈரப்பசை சிறிதுமற்ற–கொடிய வெப்பம் நிறைந்த பாலை நிலத்தில் தழையச்செய்ய முடியுமா?

பாலை நிலத்தில் எங்ஙனம் வற்றல் மரம் தளிர்க் காதோ அங்ஙனமே நெஞ்சத்தில் அன்பு இல்லாதவ னுடைய உயிர் வாழ்க்கையும் செழிப்புருது.

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்<br>வற்றல் மரந்தளிர்த் தற்று (குறள்-எஅ)

வன்பாற்கண் – கொடிய பாலைநிலத்தில்.

அன்புடையார் தம் உடல், பொருள், ஆவி ஆகிய மூன்ருலும் பிறர்க்குதவியாளராக வாழ்ந்து, நட்பும்

சுற்றமும் பெருக்கிப் பெருவாழ்வு பெற்று அழியாப் புகழை அடைவர்.

அன்பாம் ஈரம் சிறிதுமற்ற வற்றிய நெஞ்சமுடைய கொடியோர், எல்லாவற்ருலும் தமக்கே உரியவராகி, பிறருக்குச் சிறு உதவியும் செய்யாது, பிறரை வஞ்சித்து வயிற்றை நிரப்பிக் காலத்தைக் கழிப்பர். இத்தகைய அற்பரைச் சமூகம் வெறுக்கும்; யாருமே விரும்பார்; துன்பக்காலத்தில் எவரும் உதவ முன்வரமாட்டார். அன்பற்ற அற்பர் துன்பம் வந்துற்றபோது, வெய்யிலி லிட்ட புழுபோல் துடிப்பர்.

எலும்பில்லாத மூட்டைப்பூச்சி, புழு போன்ற உயிர் கள் சாதாரண வெயிலாளுல் வாழவும்முடியாமல் சாகவும் முடியாமல் துடிதுடித்துப் பெருந்துன்பமடையும். கொடும் வெயிலாளுல் துடிதுடித்துச் சாகும். அதுபோலவே அன்பில்லாத மாக்களை அறக்கடவுள் காயும். அதாவது சமூகத்தார் வெறுத்து ஒதுக்குவர். துன்பக்காலத்தில் யாரும் உதவிசெய்ய முன்வராமையால் ஆதரவற்றுப் பெருந் துன்பமெய்தி வருந்தி மடிவர்.

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் (குறள்-எஎ)

என்பு : எலும்பு.

எலும்பில்லா உடலை வெயில் காய்வது போல, அன்பில்லாதவரை அறம் சுடுவதால், சமூகம் வெறுத்து ஒதுக்குவதால், பாலைநிலத்துள்ள வற்றல் மரம்போல, அன்பில்லார் வாழ்வும் செழிக்காமல் பயனின்றி அழிந்து போகும்.

அன்பில்லா அற்பருக்குச் சமுதாயத்தில் உள்ள இழிந்த நிலையை, 'என்பிலதனை வெயில்' வன்பாற்

கண் வற்றல் மரம் தளிர்த்தல்' என்ற இரண்டு உவமைகள் மூலம் திருவள்ளுவர் தெளிவாக விளக்கியிருக்குந் திறம் போற்றத்தக்கது.

## 6. மோப்பக் குழையும் அனிச்சம்.

தமிழருக்குரிய தலைசிறந்த பண்புகளுள் விருந்தோம்பலும் ஒன்று. பண்டைய தமிழர், 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற முறையில் மக்களுள் வேற்றுமை நீக்கி, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனக்கொண்டு, கிடைத்தற்கரிய அமிழ்தமே கிடைப்பினும் தனித்துண்ணாது பகுத்துண்டு பல்லுயிரும் ஓம்பி வந்தனர். உண்டாரை நீண்டநாள் வாழ்விப்பதும், கிடைத்தற்கரியதும், அரும்பாடுபட்டு பெற்றதுமாகிய ஒற்றை நெல்லிக்கனியைத் தான் உண்ணாது ஔவையாருக்குக் கொடுத்து உண்பித்து அழியாப்புகழ் பெற்றான் அதியமான்.

தமிழரின் தலைசிறந்த பண்புகளுள் ஒன்றாகிய விருந்தோம்பல் இல்லறத்தாரின் தலைசிறந்த கடமைகளுள்ளும் ஒன்றாகும். இத்தகைய விருந்தோம்பும் பண்பு இப்பொழுது வரவரக் குறுகிவருகின்றது. விருந்து—புதுமை. விருந்தினர்—புதியவர். தன்னை நாடி வரும் புதியவரை அன்புகொண்டு, இன்முகம் காட்டி, இன்சொல் கூறி வரவேற்று, உணவிட்டுச் சிறப்பிப்பதே விருந்தோம்பலாகும். ஆனால் இப்பொழுது, சுற்றத்தினர்க்கும் நண்பர்கட்கும் அளிக்கும் உணவே 'விருந்து' எனக் கருதுகின்றனர். உண்மையான விருந்தினரைப் பேணுவது மிகக் குறைந்து விட்டது. இது வருந்தத்தக்கதே.

விருந்தினர் திண்ணையிலிருக்க, தான்மட்டும் வீட்டினுள் தனித்துண்ணுவது சாவுக்குச் சமமாகும். அமிழ்த

மேயானாலும் தனித்துண்ணாது பகுத்தே உண்ண வேண்டும். தனித்துண்ணுவது விரும்பத்தக்கதல்ல.

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா(ம்)
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. (குறள்-அ௨)

விருந்தோம்புவோர் வாழ்க்கையும் குடியும் தழைத்து ஓங்கும், புகழ் பெருகும்.

விருந்தினரைத் தூரத்தே காணும்போது இனிய முகங்காட்டி, பக்கத்தே வந்தபோது இனிய சொல்கூறி வரவேற்று, அன்புடன் வேண்டியன செய்ய வேண்டும். அன்புடன் வரவேற்காவிட்டால் விருந்தினர் உள்ளம் வாடிவிடும்; அது மிக மென்மையானது. அதற்குத் தக்க உவமையை நாயனார் காட்டுகின்றார்.

'அனிச்சம்' என்பது ஒரு வகை மலர். அது மிக மிக மென்மையானது. அதை முகர்ந்து பார்ப்பதற்காக மூக்கிற்கு அருகில் கொண்டு சென்றால், மூக்கின் வழியாக வெளிவரும் மூச்சுக்காற்று பட்டவுடனேயே அது வாடிவிடும். ஆனால் விருந்தினரை அன்புடன் வரவேற்காமல் முகஞ்சுழித்துப் பார்த்தால், அப்படிப் பார்த்தவுடனேயே, அவர்கள் உள்ளம் வாடிவிடும்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து (குறள்-௯0)

குழையும்–வாடிவிடும்.

இக்குறள் உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் சிறிது வேற்றுமை உண்டாகும்படி அமைக்கப்பட்டிருப்பதால் இதை வேற்றுமையணி எனலாம்.

## 7. கனியிருப்பக் காய் கவர்தல்

அன்பில்லாக் கொடியோர், இன்சொல் பேசத் தெரியாமல், யாவரிடத்தும் எப்பொழுதும் துன்பந்தரும் கொடிய சொற்களையே சொல்லித் திரிவர். அத்தகையோருக்கு நட்பும் சுற்றமும் சுருங்கும்; பகை பெருகும்; துன்பம் ஓங்கும்; இன்பம் நீங்கும்; வறுமை வளரும்.

இனிய சொற்களையே தேர்ந்தெடுத்துப் பேசுவோர் முகத்தில் மகிழ்வும் அழகும் திகழும்-ஆதலால் அடக்கத்துடன் பேசும் இன் சொல்லே ஒருவனுக்குச் சிறந்த அழகு தரும் அணியாகும். அத்தகையோன் எளியனுயினும் யாவரும் விரும்புவர். பல வகை அணிகளைப் பூண்ட செல்வன் ஒருவன் கொடுஞ் சொற்களைச் சொல்லித் திரிவானேயானுல் அவனை யாரும் விரும்பார்; வெறுப்பர். ஆதலால் மற்றைய அணிகள் அணிகளாகா.

நன்மை பயக்கும் இனிய சொற்களை ஆராய்ந்து சொல்பவர்க்குத் தீமைகள் தேய்ந்து நன்மைகள் பெருகும்; நட்பும் சுற்றமும் ஓங்கும்; துன்பந்தரும் வறுமை நீங்கும்; வாழ்வு செழிக்கும்; புகழ் தழைக்கும். இத்தகைய இனிய சொற்களை விட்டுவிட்டு இன்னுத–கொடிய சொற்களைச் சொல்வோருக்குத் தெய்வப்புலவர் மிகச் சிறந்ததோர் உவமையைக் காட்டுகிருர்.

நாவிற்கு இனிமையும் உடலுக்கு ஆக்கமும் தரக்கூடிய இனிய கனிகள் கையிலே இருக்கின்றன. அவற்றை விட்டு விட்டு, ஒருவன், பிறருடைய தோப்பிற்குள் வேலிகடந்து நுழைந்து, நாவிற்குக் கசப்பும் உடலுக்குத் தீமையும் பயக்கும் காயை அறுத்துத் தின்று வருந்தி, தோப்புக்குரியவரிடம் உதையும்பட்டுத்திருட்டுப்

பட்டமும் பெற்று வெளியேறினல் அவனை என்ன வென்று கூறுவது? பைத்தியம் என்று கூறலாமல்லவா? அதைப்போலவே, மனிதப் பண்புக்குரிய-கேட்போருக்கு இனிமையும் சொல்வோருக்கு எல்லா நன்மைகளையும் பயக்கக் கூடிய இனிய சொற்கள் உள்ளத்தே இருக்க, அவற்றை விட்டு, மனிதப் பண்பற்ற-விலங்குத்தன்மை யுள்ள அற்பருக்கே உரிய கொடிய சொற்களை ஒருவன் கவர்ந்து சொல்லி, அதனுல் அவனும் கொடியனுகி, நட்பிழந்து, பகைபெருக்கி, வறுமையேற்றுத் துன்புறுவான். எனவே அவனும் பைத்தியமாவான்.

இனிய உளவாக இன்னுத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று (குறள்-க00)

இனிய–இன்பந்தரும் இனிய சொற்கள்.
இன்னுத–துன்பந்தரும் கொடிய சொற்கள்.

'கவர்தல்' என்ற சொல்லுக்கு நுகர்தல், விரும்புதல், திருடுதல் முதலிய பல பொருள்கள் இருப்பினும், இங்கு திருடுதல் என்ற பொருள் கொள்வதே உவமைக்கு ஏற்றந் தருவதாகும்.

## 8. ஒருமையுள் ஆமை.

அடக்கம் என்ற பணிவுத் தன்மை எப்பொழுதும் யாருக்கும் நன்மை பயப்பதாகும். வறியவர்களிடத்தில் இயற்கையாகவே அந்தத் தன்மை இருக்கும்; பணிவு இல்லாத ஏழைகள் பல தொல்லைகளுக்கு ஆளாக நேரும். செல்வந்தர்களிடத்துப் பணிவு காண்பது அரிது; அவர் களிடத்தில் பணிவுத்தன்மை அமைந்து விடுமானல், யாவரும் வியந்து போற்றுவர்; ஆதலால் பொருட் செல்வத்தோடு புகழ்ச் செல்வமும் சேர்ந்து விளங்கும்.

அடக்கம் இன்றி, ஆடம்பரமாக உடுத்து, ஆடம்பர மாகப் பேசி ஆடம்பரமாக வாழ்வோர், பிறருக்கும் இடை யூறு தந்து, இறுதியில் தாமும் துன்புறுவர்.

அடக்கம் என்னும் பண்பைப் பெற்ருேரிடத்தில் தன்னலம் அடங்கிப் பொதுநலம்ஓங்கும். அத்தகையோர் யாவரும் போற்றும் உயர் நிலேயெய்துவர். காந்தியடிகள் எளிய ஆடையுடுத்து, எளிய உணவு உண்டு, பணிந்த சொல் பேசி, எளிய வாழ்வு வாழ்ந்தார். தன்னலம் அடக்கிப் பிறர் நலம் பேணினர். அவரால் இந்தியர்கள் அடைந்த மேன்மைகள் பற்பல; மக்களினமே மாண் புற்றது. ஆதலால் அவர் இறந்தும் இறவா நிலேயெய்தி யாவரும் போற்றும் அமரரானர். யாருக்கும் எதற்கும் அடங்காது திரிவோர், பிறருக்கும் துன்பம் இழைத்துத் தாமும் மிகப் பெருந் துன்பத்தையும் பழியையும் அடை வர். காந்தியடிகளேச் சுட்டு வீழ்த்திய விஞயகக் கோட்சே அடங்காப் பேதையாக வாழ்ந்து பழகியவன் போலும். இன்றேல் உலகப்பெரியாரை–தன்னே வணங்கிய பெரியாரைச் சுட்டு வீழ்த்தும் மனமும் வருமோ? அவ னுடைய அடங்காச் செயலால் அந்தோ! பெரியார் காந்தியை இழந்து பாரெலாம் கண்ணீர் வடித்தது! அப்பேதையும் சிறையில் வதைந்து, தூக்கில் தொங்கி, அழியாப் பழியைப் பெற்ருன்.

தேவரையும் அடிமைகொண்டு ஆடம்பர வாழ்வு நடத்திய இராவணன் அடக்கமில்லாத் தன்மையால், பொற்பின் செல்வி-கற்புக்கரசி–சீதை அசோகவனத்தே எண்ணற்ற துயரடைய, பெரும் போரில் எண்ணற்ருேர் மடிய, இறுதியில் இராவணனும், யாவரையும் இழந்து, எல்லாம் இழந்து தன்னந்தனியனுய்ப் போர்க்களத்தே மடிந்தான்.

அடக்கஞ்சான்ற இராமனும் சீதையும் அழியாப் புகழ்நிலே—அமரநிலே யெய்த, அடக்கமிலா இராவணன் அழியாப்பழி யெய்தினன்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும் (குறள்-கஉக)

இத்தகைய அடக்கம் என்பது என்ன? மனம், மொழி, மெய்களேத் தீ நெறியில் செலுத்தாது அடக்கி ஆண்டு நன்னெறியில் செலுத்துதலே அடக்கமாகும்.

தீயவற்றைச் சிந்திக்காமல், நல்லவற்றைச் சிந்திக் கச்செய்து, பொங்கி யெழும் சினத்தை அடக்கிக் கட்டுப் படுத்துவதே மன அடக்கமாகும். மன அடக்கமில்லா தவன், காட்டாற்று வெள்ளம் போல மனம் போன போக்கெல்லாம் சென்று, எதிர்ப்பட்டோர் நலனேயழித் துத் தானும் ஒரு பயனும் இன்றி அழிந்தொழிவான்.

தீய சொற்களேயும், பிறர் மனதைப் புண் படுத்தும் வன்சொற்களேயும் சொல்லாது பயனுடைய நல்ல சொற்களேயே சொல்லும்படியாக நாவையடக்கி யாளு தலே மொழியடக்கமாகும். தீப்புண்ணேவிட நாப் புண்ணே கொடிது. தீயினல் சுட்டபுண், சுடப்பட்ட வரை மட்டும் பாதிக்கும்; அதுவும் சில நாட்களில் ஆறி விடும். நாவினல் சுட்ட கடுஞ்சொல்லால் உண்டான புண்ணே, எளிதில் ஆருமல், சுடப்பட்டவர் உள்ளத்தே வடுப்போல் பதிந்து, பழிவாங்க வேண்டும் என்னும் எண்ணத்தை எழுப்பிப் பகையைப் பெருக்கி, சுட்டவரை யும், அவரைச் சார்ந்தோரையும், சுடப்பட்டவரையும், அவரைச் சார்ந்தோரையும் பாதிக்கும்.

தீயினல் சுட்டபுண் உள்ளாறும் ஆருதே
நாவினல் சுட்ட வடு. (குறள்-கஉக)

இக்குறள் மேற்கூறிய கருத்தை விளக்கி, தீப்புண் ணுக்கும் நாப்புண்ணுக்கும் உள்ள வேற்றுமையைக் காட்டுவதால் வேற்றுமையணியாகும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறி களையும் தீய நெறியில் செலுத்தாமல் அடக்கி நல்ல நெறியில் செலுத்துதலே மெய்யடக்கம் ஆகும்.

ஆமையின் உடலமைப்பு வியத்தற்குரியதாகும்; அதன் முதுகுஓடு கல் போன்று உறுதியான எலும் பாலானது; அது இயங்கும்போது, நான்கு கால்கள், தலை ஆகிய ஐந்துறுப்புக்கள் மட்டும் முதுகோட்டிற்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும்; தனக்கு மக்க ளாலோ, பிற பிராணிகளாலோ தீங்கு நேரும் என அறிந்தால், அது தனது ஐந்துறுப்புக்களையும் வலிய முதுகோட்டிற்குள் சுருட்டி யடக்கிக் கொள்ளும்; அப் பொழுது தூரப்பார்வைக்கு, அது ஒரு கல்போலவே தோற்றமளிக்கும். ஆதலால் ஆமையின் பகை, அதை ஒரு 'கல்' என எண்ணி விலகி விடும். சிறுவர்கள் கல்லையே ஆமையின் மீது எறிந்தாலும், அதற்குத் தீங்கு நேராது. பகை விலகிய உடன், ஆமை தனது உறுப்புக்களை ஓட்டிற்குள் அடக்கி முடங்கிக் கிடக்காமல் வெளியே நீட்டி இயங்கும்.

அதைப் போலவே, ஒரு மனிதன் தனது ஐம்பொறி களையும் தீய நெறியில் செலுத்தாமல், அடக்கி நல்ல நெறியில் செலுத்தி வாழ்வானேயானால், அவனை யெப் பொழுதும், எந்த விதத் தீங்கும் சாராமல், அவனது மெய்யடக்கமே சிறந்த காவலாக அமையும்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து (குறள் ௧௨௬)

ஒருமை-ஒருகூடு. எழுமை-பலகாலத்தும் பலதீமை. ஏமாப்பு-காவல்.

அடக்கம் என்ற பெயரால் தமக்குரியவற்றையும் நன்னெறியிலும் அனுபவிக்காமல் புலன்களை அடக்கி ஒடுக்கித் துன்புறுத்தும் கொடுமையும் கூடாது என்பதை இவ்வுவமை விளக்குகிறது. ஆமை, தனக்குத் துன்ப மில்லாத போதும் தனது உறுப்புக்களை அடக்கி ஒடுங் கிக் கிடப்பதில்லையன்றோ?

தீயவற்றைப் பார்க்காமல், தீயவற்றைக் கேட்காமல் தீயவற்றைச் சொல்லாமல், தீயவற்றை முகராமல், தீய வற்றை அனுபவிக்காமல் இருப்பதே உண்மையான மெய்யடக்கமாகும்.

இக்கருத்தையே நாலடியாரும், 'பிறர் இரகசியங் களைக் கேட்பதில் செவிடனாகவும், பிறர் மனைவியை நோக்குவதில் குருடனாகவும், புறங்கூறுவதில் ஊமைய னாகவும் ஒருவன் வாழ்ந்தால், அதுவே அவனுக்குப் பெரும் அறமாகும்; அவனுக்கு வேறு அறநெறி கூற வேண்டியதில்லை,' என்று இயம்புகிறது.

"பிறர்மறை யின்கண் செவிடாய்த் திறனறிந்(து)
ஏதிலார் இல்கண் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாதும்
அறங்கூற வேண்டா அவற்கு (நாலடியார்)

மறை-இரகசியம். இல்-மனைவி-மூங்கை-ஊமை.

ஆதலின் மனம், மொழி, மெய்களைத் தீய நெறியில் செலுத்தாமல் அடக்கி நன்னெறியில் செலுத்தி யின்பந் துய்த்து, பிறர்க்கும் பணியாற்றிப் பெருவாழ்வு வாழ்ந்து அழியாப் புகழ்நிலையாம் அமரநிலை யெய்துவோமாக. தன் வாழ்வால் நமக்கு நல்வழி காட்டும் ஆமை வாழ்க!

## 9. அழுக்காறுடையான் கண் ஆக்கம்

பண்டைத் தமிழர் உலக உயிர்களை, 'உயர்திணை,' அஃறிணை என இரு பிரிவுகளாகப் பிரித்தனர். திணை—ஒழுக்கம். பகுத்தறிவின் துணை கொண்டு நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து தீமையை நீக்கி நன்மையேற்று நல்லொழுக்க நெறியில் வாழும் மக்களை 'உயர்திணை' என்றும், இத்தகைய உயர்ந்த ஒழுக்கமும் அதற்குக் காரணமாகிய பகுத்தறிவும் பெருத உயிர்களையும் உயிரற்ற பொருள்களையும் (அல் + திணை) அஃறிணையென்றும் பகுத்தனர்.

எனவே மக்கட் பிறவியின் ஏற்றத்திற்கு ஒழுக்கமே காரணமாகும். அரம்போல கூர்மையான அறிவுடையவராயினும் ஒழுக்க நெறியில் வாழாவிட்டால், அவர்கள் மரத்திற்கு ஒப்பாவர். ஏனென்ருல், பல நூல்களைக் கற்றிருந்தாலும், சான்ருேர் வாழும் ஒழுக்க நெறியை ஒட்டி வாழத் தெரியாதவர் அறிவில்லாதவரே. மனத்தைச் சென்ற விடத்தில் எல்லாம் செல்லவிடாமல், தீ நெறியினின்றும் நீக்கி நன்னெறியில் செலுத்துவதே அறிவு. அத்தகைய அறிவைப் பெற்றிருந்தும், பயன் படுத்தாது, தீ நெறி ஒழுகுவோரை, எங்ஙனம் அறிவுள்ள மக்கள் இனத்தில் சேர்ப்பது? ஆதலால் ஒழுக்கமிலார் விலங்காகவும் மரமாகவுமே கருதப்படுவர்.

நல்லொழுக்கம் என்றும் நன்மையையே பயக்க, தீயொழுக்கம் என்றும் தீமையையே பயக்கும். ஒழுக்கம் உடையவனையே உயர்குடிப் பிறப்பாகக் கருதுவர். ஒழுக்கம் இல்லாதவன் இழிந்த பிறப்பினனுவான்.

இராவணன் பல மறைகளையும் பல கலைகளையும் கற்றறிந்த பேரறிஞன். ஆயினும் பிறன் மனைவியை

விரும்பும் பேதையாயிருந்ததால் அரக்கன் என இழித்தொதுக்கப்பட்டான். அவன் தம்பியராகிய கும்பகர்ணனும் விபீடணனும் நல்லொழுக்கம் பேணியதால் உயர்ந்தோராய் மதிக்கப்பட்டனர். 'ஒழுக்கமே உயர் குடிப்பிறப்பு' என்பதற்கு இதனினும் வேறு என்ன சான்று வேண்டும்?

இத்தகைய ஒழுக்கத்திற்கு உவமையாக எதைக் கூறலாம்? உலகிலேயே உயர் பிறவி மக்கட் பிறவி. அவர்களுக்கு உயர்வு அளிப்பது ஒழுக்கம். எனவே அத்தகைய ஒழுக்கத்திற்குக் கூறப்படும் உவமையும் உலகிலேயே உயர்ந்ததாயிருக்கவேண்டும். உயர்பிறப்பினராகிய மக்கள், எதை உயர்வாகக் கருதி அதிகம் விரும்பிப் போற்றுகிறுர்கள்? உயிர்! ஆம்! உயிரை விரும்பிப் பேணுதவர் யார்? எவ்வளவு துன்பத்தில் உழல்வோரும் உயிரையே விரும்பிப் பேணுகின்றனர். உயிர் விட்டுத் துன்பம் நீக்க விரும்புவதில்லை. ஆதலால் இத்தகைய உயிரை, ஒழுக்கத்திற்கு ஒப்பாக – உவமையாகக் கூறலாமா? இரண்டையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும்.

ஒழுக்கத்தை ஒரு துலாத் தட்டிலும் (தராசுதட்டு) உயிரை மற்றொரு தட்டிலும் வைக்க முடிந்து, வைத்துப் பார்த்தால் ஒழுக்கமுள்ள தட்டுதான் கீழே யிருக்கும். ஆதலின் ஒழுக்கமே உயர்ந்தது. ஒழுக்கத்தைக் காப்பதற்காகச் சான்றோர் உயிரையும் விடுவர், உயிரைக் காப்பதற்காக ஒழுக்கத்தை விடார். ஒழுக்கத்தை யிழந்தவர் தலையை விட்டு நீங்கிய மயிருக்கு ஒப்பாகக் கருதப்படுவர். இழந்த உயிரை மீண்டும் விஞ்ஞானத்தால் (பெற்றாலும்) பெறலாம். விஞ்ஞானிகள் முயல்கின்றனர். ஆனல் தலையை விட்டு நீங்கிய மயிரை மீண்டும் தலையில்

ஒட்டவைக்க எந்த விஞ்ஞானியும் முயல்வதில்லை. முயன்ருலும் முடியாது. அதைப்போலவே, மனிதன் கைவிட்ட ஒழுக்கத்தை மீண்டும் பெற இயலாது.

பாண்டியன் நெடுஞ்செழியன், தான் கோவலனைக் கொன்றது தவறென்று உணர்ந்த உடன் உயிர்விட்டுப் புகழ் நிறுத்தினன். எனவே சான்ருேர்கள் ஒழுக்கங் காக்க உயிர் விடுவர். அற்பர் உயிர் காக்க ஒழுக்கம் விடுவர்.

அதனுல்தான் திருவள்ளுவர், உயிரைப் போல ஒழுக்கத்தைப் பேண வேண்டும் என்று கூருமல்; உயிரைவிடச் சிறந்ததாகக் கருதிப் பேண வேண்டும் என்ற பொருளில் 'உயிரினும் ஓம்பப்படும்' என்று கூறினர்.

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும் (குறள்–கஙக)

விழுப்பம்– உயர்வு; மேன்மை.

ஒழுக்கமே மனிதனுக்கு விழுப்பம் தருவதால், ஒழுக்கமில்லாதவனுக்கு உயர்வு இல்லை. எதைப் போல?

தீய குணங்களில் தலை சிறந்தது பொருமை எனப் படும் அழுக்காறு! ஆ!! அழுக்கு நிறைந்த ஆறுதான் அது. அந்த அழுக்காறிலிருந்துதான், வஞ்சனை, பொய், சினம், கொலை முதலிய பெரும் பெரும் தொத்துநோய் போன்ற குற்றங்கள் தோன்றுகின்றன. பொருமை என்னும் ஆருனது எண்ணற்ற சிறு சிறு குற்றங்களா கிய நச்சுக்கிருமிகளை வெள்ளம் போல் அடித்துக் கொண்டுவந்து, பாய்கின்ற இடங்களிலெல்லாம், பெருங்

குற்றங்களாகிய தொத்து நோய்களைப் பரப்புவதால்தான் 'அழுக்கு ஆறு' எனப் பெயர் பெற்றது போலும்.

இத்தகைய அழுக்காறு தன்னைச் சார்ந்தோரையும் சார்ந்தோரைச் சார்ந்தோரையும் வாழ்க்கையில் முன்னேறவிடாது, அழித்துவிடும். அழுக்காறு கொண் டவன் பலபல குற்றங்களைச் செய்து, பகையைப் பெருக் கித் தான் கெடுவதோடு, தன் சுற்றத்தினரையும் தனக் குத் துணையாகக் கெடுப்பான். அழுக்காறு கொண்ட பேயனுக்குச் சுற்றத்தினராக இருப்பவர், அவனிடம் உள்ள உறவின் காரணமாக, அவனுக்கு உதவுவதற்கு முன்சென்று, அவன் செய்த குற்றங்களைத் தாங்களும் ஏற்று அவனோடு சேர்ந்து கெடுவர். உடுக்க உடையும் உண்ண உணவுமின்றிக் கெடுவர்.

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். (குறள் கசுசு)

அழுக்காறு கொண்டவன் சுற்றத்தினர் உடையும் உணவும் இன்றிக் கெடுவார்கள் என்றால், அவனுடைய கேடு எவ்வளவு பெரிய கேடாக இருக்க வேண்டும்!

எனவே அழுக்காறு கொண்டவனுக்கு நல்வாழ்வே யில்லை. அதைப்போலவே தான் நல்லொழுக்க மில்லாத வனுக்கும் உயர்வே யில்லை.

அழுக்கா றுடையான்கண் ஆக்கம் போன் றில்லை-
ஒழுக்கம் இலான்கண் உயர்வு (குறள்-கங்கு)

இவ்வுவமைச் சிறப்பினால், 'அழுக்கறுப்பான் சுற்றம் போல் ஒழுக்கமிலான் சுற்றமும் உயர்வின்றிக் கெடும் என்பதை வள்ளுவர் விளக்குந் திறம் போற்றத் தக்கது. ஆக்கம்-செல்வம்; நல்வாழ்வு

நல்லொழுக்கமில்லா காரணத்தால்தான், இராவணன், துரியோதனன் முதலியோர் சுற்றத்தோடும் குடியோடும் அழிந்தனர்.

## 10. அகழ்வாரைத் தாங்கும் நிலம்

பெரியார் யார்? பேராற்றலுடையோர் பெரியார்.எது பேராற்றல்? 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்பார்கள். அதனுல்தான் 'அழி பசி' என்று வள்ளுவனுரே கூறுகிருர். இத்தகைய அழிபசியைப் பொறுத்துக் கொண்டு உண்ணுது நோற்பவர் பேராற்றல் படைத்த பெரியார். நாட்டு நலனுக்காக, முதுமைக் காலத்திலும் மிகப்பல நாட்கள் உண்ணுது நோற்ற காந்தியடிகள், சங்கரலிங்க நாடார், தாராசிங்போன்ருேர் பெரியார்கள். ஆனுல்,

பசியைக்கூடப் பொறுத்துக்கொள்ளலாம். பிறர் சொல்லும் கொடிய சொல்லேக் கேட்டு, உள்ளத்தே பொங்கி யெழும் சினத்தை அடக்குவது மிக மிக அரிது. முற்றுந்துறந்த முனிவர்களால் கூட சில நேரங்களில் சினத்தை அடக்க முடியாதென்ருல், சினத்தை அடக்குவோரின் ஆற்றலே என்ன வென்பது! பிறர் கொடிய சொற்களால் தாக்கிப் பேசும்போது யாருக்கும் சினம் வருவது இயல்பே. ஆதலின், அறிந்தோ, அறியாமலோ, பிறர்சொல்லும் இன்னுச் சொல்லேப் பொறுத்துக்கொள்பவரே, உண்ணுது நோற்பாரை விடப் பெரியார்! உலகிலேயே மிகப் பெரியார்.

உண்ணுது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும்
இன்னுச்சொல் நோற்பாரின் பின் (குறள் ௧௬0)

பசியைப் பொறுப்போர் பெரியவராவது, பிறர் உரைக்கும் கொடுஞ் சொல்லேப் பொறுத்துக் கொள்பவருக்கும் பின்பே யாகும்.

திட்டியோரையும் தீங்கு செய்தோரையும் பொறுத்துக்கொள்ளாமல் திருப்பிச் செய்தோரை உலகோர் ஒரு பொருளாக மதிக்க மாட்டார்கள். பொறுத்துக்கொண்டவரைப் பொன்போலப் போற்றுவர். திருப்பித் துன்பம் செய்தவருக்கு அந்த ஒரு நாள் மட்டுமே 'பழிக்குப்பழி வாங்கி விட்டோம்' என்ற எண்ணத்தால் இன்பம் உண்டாகும். ஆனால் அடுத்த நாளே ஒறுக்கப்பட்டவர் (தண்டிக்கப்பட்டவர்) தனக்குத் துணை சேர்த்துக் கொண்டு, அடிபட்ட நாகம்போல் வந்து சீறுவார். இந் நிலை வளர்ந்து முற்றிய பகையாகி வாழ்க்கையில் அமைதி நீங்கித் துன்பம் ஓங்கும். பகைத்தீ பரவிச் சார்ந்தோரையெல்லாம் சுட்டெரிக்கும். வீட்டுப்போர்! சாதிப்போர்! கட்சிப் போர்! நாட்டுப் போர்! உலகப்போர்! அம்மம்ம! கொடுமை! கொடுமை!! அமெரிக்காவின் சார்பாகக் கென்னடியும், உருசியாவின் சார்பாகக் குருசேவும் மோதிக்கொள்கின்றனர். வகை வகையான நச்சுக் குண்டுகளை வெடிக்கின்றனர்! உலகெலாம் நச்சுக் காற்று பரவுகின்றது! உலகெலாம் அமைதி நீங்கி நடு நடுங்கிச் சாகின்றது. இவர்களும் நாளும் ஒருவரை யொருவர் அஞ்சி அஞ்சிச் செத்துச் செத்துப் பிழைக்கின்றனர். இக்கொடியோர்களுக்கு வள்ளுவரின் குறளை உணர்த்துவது யார்? இவர்களுணர்வது என்று? உலகம் அமைதி பெறுவது என்று? ஒறுத்தார்க்கு ஒரு நாளை யின்பம்" மற்ற நாளெல்லாம் துன்பமே.

திருப்பித் துன்பம் செய்யாமல் பொறுத்துக்கொண்டு இன்முகங் காட்டி இன்சொல் பேசி, அன்பு காட்டினால், துன்பஞ் செய்தவரே உணர்ந்து, திருந்தி, வருந்தி நண்பராவர். இத்தகையோருக்குப் பகைவரே இன்றி யாவரும் நண்பராவர். ஆதலால் என்றும் இன்பம்! உலகம் அழியும் வரையில் புகழ்!

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ் (குறள்—கருக)

ஒறுத்தார்க்கு — தண்டித்தவர்க்கு. பொன்றுந்துணையும்— உலகம் அழியும் வரையிலும்.

ஆம்! பொறுத்துக்கொண்டவர் புகழ் உலகம் உள்ளளவும் அழியாது! இயேசுநாதரும், காந்தியடிகளும் எவ்வளவோ துன்பங்களைப் பொறுத்தனர். இறுதியாகத் தங்களைக் கொன்றவர்களையே பொறுத்துக்கொண்டு, மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டு இறந்தனா. அவர்கள் புகழ் அழியவில்லை! என்றும் அழியாது!

ஆதலால் பிறர் செய்யும் இடையூறுகளைப் பொறுத்துக் கொள்வோரே மிகப் பெரியார்! பொறுமையே மிகப் பெரும் பண்பு! தலைமையான பண்பு! தலைமையான அறம்! 'பொறுமை கடலினும் பெரிது, 'பொறுத்தார் பூமியாள்வார், பொங்கினுர் காடாள்வார்" என்ற பொன் மொழிகளும் பொறுமையின் பெருமையை உணர்த்துவனவே.

நிலம் உலக மக்களைத் தாங்கி வாழ்வு அளிக்கிறது. மக்கள் யாது செய்கின்றனர்? நில மங்கையின் உடலைக் கீறி உழுகின்றனர்! கொத்துகின்றனர்! வெட்டுகின்றனர்! பிளக்கின்றனர்! தோண்டுகின்றனர்! ஏதேதோ செய்கின்றனர். இவ்வளவு துன்பம் செய்யும் மக்களையும் பொறுத்துக்கொண்டிருக்கிறது! பொறுப்பதோடல்லாது, சுடச் சுட ஒளி விடும் பொன் போல, எவ்வளவுக்கு எவ்வளவு மக்கள் நிலத்தை அகழ்கிருர்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்குப் பெரும் பயன் தந்து வாழ வைக்கிறது. அதனுல் தான் நிலத்தைத் தாய்போல் கருதுகின்றனர் மக்கள். தம்மைத் தாங்கி வாழ்வளிக்கும் நாட்டைத் தாய்நாடு என்கின்றனர். அதைப்போல,

பிறர், அறியாமையாலோ, செருக்கினாலோ, தனிப் பட்ட மனிதருக்குச் செய்யும் தீங்குகளைப் பொறுத்துக் கொள்வது தலைமையான பண்பாகும்.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (குறள்–கடுக)

அகழ்வாரை–தோண்டுவாரை

இவ்வுவமை, துன்பம் செய்வோரைப் பொறுப்ப தோடல்லாமல் அவர்களுக்குத் தக்க நன்மைகளையும் செய்யவேண்டும் என உணர்த்துகிறது. நிலம் தன்னை அகழ்வாரைப் பொறுத்துக்கொண்டு, அவர்களுக்கு, இரும்பு, தங்கம் போன்ற பலப்பல கனிப்பொருள்களை யும், தண்ணீரையும், பலவிதமான உணவுப் பொருள் களையும், ஈந்து, இன்னும் இவை போன்ற எண்ணற்ற உதவிகளைச் செய்கிறது. அத்தகைய நிலத்தை மக்கள் தாயெனப் போற்றுகின்றனர். அதைப்போல, தீமை செய்தாரைப் பொறுத்துக்கொண்டு, அவர்களுக்குப் பல நன்மைகளை அன்போடு செய்தால் அவர்கள் திருந்தி வருந்தித் தெய்வம் எனப் போற்றுவர்! ஏன்! பொறுத்து நன்மை செய்யும் பெரியோரை உலகமே தெய்வமெனப் போற்றும்! புத்தர், இயேசுநாதர், முகம்மதுநபி, காந்தி யடிகள் போன்றோர் இத்தகைய சான்றோரே!

சீதையை இராவணன் வஞ்சனையாகக் கவர்ந்து சென்றான். துணைவியைப் பிரிந்து வருந்தித் தேடிச் சென்ற இராமன் உண்மையை உணர்ந்தும், இராவண னைக்கொல்லும் ஆற்றல் இருந்தும் உடனே போர் தொடுக்காமல் தூது விடுக்கின்றான்! தூது பயனற்று விட்டதால் போர் மூள்கிறது! ஒரு நாள் இரு நாள் போரல்ல! பதினெட்டுத் திங்கள் கடும் போர் நடை

பெறுகின்றது. எண்ணற்ற உயிர்கள் மடிகின்றன! எண்ணற்ற தொல்லைகளை, இராவணன் இராமனுக்கும் ஏனையோருக்கும் கொடுத்துவிட்டான்! இராவணனுடைய மிகப்பெரும் படையும், மிகப்பெரும் சுற்றமும், மிகப்பெரும் வலிமையும் போர்க்களத்தில் அழிந்துவிட்டன! இன்னும் அவன் உணரவில்லை! அக்கொடியோன் இறுதியாக, போர்க்களத்தில் யாவும் இழந்து, கைப்படை யிழந்து தன்னந்தனியனாய் இருக்கின்றான்! இராமன் கையில் வில்லும் அம்பும் இருக்கின்றன! இப்பொழுது இராமன் எண்ணினால் நொடிப்பொழுதில் இராவணனை வீழ்த்திவிடலாம்! ஆனால் இராமன் செய்தது என்ன? 'இப்பொழுதும் நீ சீதையை விட்டு விட்டால், யானும் உன்னை உயிருடன் விட்டுவிடுகிறேன்; இன்றேல் இன்று சென்று நாளை படையுடன் வருக!' என்று இராமன் கூறினான் என்றால் அவனுடைய பொறுமையின் பெருமையை என்னென்பது! இராமனுடைய இந்தப் பெருமையைப் போற்றும் புலவர்கள் எத்தனை பேர்! மேடைகள் எத்தனை! மக்கள் தொகை எவ்வளவு!

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போல" என்ற உவமையால் திருவள்ளுவர் உணர்த்திய கருத்தின் பெருமையும், திறமையும், இகழ்வாரைப் பொறுத்தல் போன்றே பெருமையும் தலைமையும் வாய்ந்ததாகும்! துன்பம் செய்தவருக்கும் திருப்பித் துன்பம் செய்யக்கூடாது என்றால், அவர்கள் வெட்கித் தலைகுனியும்படியாக நன்மை செய்வதே அவர்களை ஒறுக்கும் (தண்டிக்கும்) வழியென்றால், துன்பம் செய்யாதவருக்குத் துன்பம் செய்யலாமா? 'ஆதலால் யாரும் யாருக்கும் தீங்கு செய்யக்கூடாது' என்பதே பொய்யாமொழியார் உணர்த்தும் நீதி. இந் நீதியை உலகெல்லாம் ஏற்று

வாழ்ந்தால் ! வேற்றுமையொழியும்! துன்டம் நீங்கும்! இன்பம் ஓங்கும்!

ஏ உலகமே! என்று நீ வள்ளுவரின் வாய்மொழியை யேற்றுத் திருந்துவாயோ, அன்றுதான் உன் வாழ்வு மலரும் நாள்! பொன்னுள்! திருநாள்! இன்ப நன்னுள்!

வளர்க வள்ளுவம்!

## 11. நிழல் தன்னை வீயாது அடியுறைதல்

உலகப் பிறவிகளில் மனிதப் பிறவி உயர்ந்த பிறவியாகக் கருதப்படுவதேன்? ஏனைய பிறவிகளுக்கு இல்லாப் பகுத்தறிவை மனிதப் பிறவி பெற்றிருப்பதுதான் காரணம். பகுத்தறிவென்ருலென்ன? மனம்போன போக்கெல்லாம் போகவிடாமல், நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து, தீயவழியினின்றும் நீக்கி நல்லவழியில் செலுத்துவதே பகுத்தறிவு. அத்தகைய உயர்ந்த பகுத்தறிவைப்பெற்ற மனிதன், நன்மை தீமைகளை யுணர்ந்தும், தீவினைசெய்து வாழ எண்ணி, வாழ்வதற்குப்பதிலாக, அதிகமான தீவினைகளைப் பெறுவானேயானுல் அவனை என்னென்பது? பகுத்தறிவற்ற விலங்கினும் இழிந்தவனுகத்தான் கருதவேண்டும்.

வயலில், செழித்து வளர்ந்துள்ள நெற்பயிர், அருகே புற்றரையில் மேயும் மாட்டைக் கவர்கிறது. 'நெற்பயிரைத்தின்பதால், உழவனுக்கு இழப்புண்டாகும்; அது குற்றம்' என்ற அறிவு மாட்டிற்கு இல்லை. அதனுல் அது நெற்பயிரைக் கடித்துத் தின்கிறது. நெற் பயிர் வளர்ச்சிக்காக மாட்டுடன் சேர்ந்து பல நாட்கள் உழைத்த உழவன், அதைக் காணும்போது வயிறு எரிந்து மாட்டையடித்துத் துரத்துகிருன். மாடு அறி

யாமல் செய்த தீவினைக்காக, அதற்கு இரண்டடி கிடைக்கிறது. அவ்வளவே. உழவன் இரக்க உள்ளம் படைத்தவனுயிருந்தால், மாட்டை யடிக்காமலேகூட ஓட்டி விடுவான்.

ஆனால் அதே தவறை மனிதன் செய்தால் என்ன ஆகும்? 'பிறன் வயலில் விளைந்த நெல்லை, தெரியாமல்—திருட்டுத்தனமாக அறுத்துச் செல்வது குற்றம். அதனால் உடையவனுக்கு இழப்பு ஏற்படும்' என்றெல்லாம் தெரிந்திருந்தும், திருட்டுத்தனமாக அறுக்கிறான். அகப்பட்டுக்கொண்டால் உதை படுகிறான்! திருட்டுப் பட்டத்தையும் சுமக்கிறான்! அதனால் சமுதாயத்தால் வெறுத்து ஒதுக்கப்படுகிறான். எனவே, அறியாமல் தவறு செய்து இரண்டடி வாங்கும் மாட்டைவிட, அறிந்தும் தவறுசெய்து அதிக தீமை அநுபவிக்கும் மனிதன் இழிந்தவன் தானே!

நரியானது, தந்திரமாக—வஞ்சகமாக, தன்னைவிட எளிய பிராணிகளைக் கொன்று தின்கிறது. அங்ஙனம் செய்வது தவறு என்ற உணர்வோ அறிவோ அதற்குக் கிடையாது; ஆனால் மனிதன், பண வலிமையாலோ, உடல் வலிமையாலோ, அறிவு வலிமையாலோ, அதிகார வலிமையாலோ, பிற மனிதர்களை வஞ்சித்து வாழ எண்ணி, அதன் பயனாக, உலகோரால் வெறுத்து ஒதுக்கப்படுவானேயானால், அறக் கடவுளாம் நீதியால்—சட்டத்தால் ஒறுக்கப்படுவானேயானால் அவன் நரியை விட இழிந்தவனல்லவா?

உழவன் எதை விதைக்கிறானோ அதையே அறுவடை செய்வான். தினையை விதைத்து வந்தால், பின்னால் அதிகமாக விளைந்திருக்கும் தினையை அறுப்பான். நெல் விதைத்து வந்தால் அதிக நெல்லறுப்பான்.

அதைப்போல மனிதன் பிறருக்குச் சில தீமைகளைச் செய்தால், அதனால் பல தீமைகளை அடைவான். சில நன்மைகளைச் செய்தால், பல நன்மைகளை அடைவான். "தினை விதைத்தவன் தினை அறுப்பான்; வினை விதைத்தவன் வினையறுப்பான்" என்ற பழமொழி மேற்கூறிய கருத்தையே விளக்குகிறது.

தீவினை செய்தோர் தீவினையை அடைந்தே தீர வேண்டும். ஆதலால் 'தீவினையியற்றல், பகுத்தறிவுக்கு ஒவ்வாததாயிருந்தாலும், அது பின்னால் பயக்கும் பெருந் தீவினைக்கு அஞ்சியாவது, தீவினை யியற்றாது இருத்தல் வேண்டும்' என்ற கருத்தில், தீவினையச்சம் என்ற அதிகாரத்தில் திருக்குறள் போன்ற அறநூல்கள் தீவினைகளின் கொடுமைகளை உணர்த்துகின்றன.

தீயானது தொட்டால்தான் சுடும்; விட்டு விலகினால் சுடாது. சுட்ட புண்ணிருப்பினும் நாளடைவில் ஆறி விடும். ஆனால் ஒருவன் ஒரு தீவினையைச்செய்து விட்டு விட்டு, 'இனித்தீவினை செய்வதில்லை' என்று இருந்தாலும், ஓடி ஒளிந்தாலும், அவன் செய்த தீவினை அவனைப் பின் தொடர்ந்து சுட்டே தீரும். ஆதலால் தீயை விடக் கொடிதாக தீவினையை எண்ணி அஞ்சவேண்டும்.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (குறள்-உ0உ)

தீயவை—தீய செயல்கள்; தீய வினைகள். பிறருக்கு இன்னா முற்பகல்—முன்னால் செய்த ஒருவனுக்குப் பிற்பகல்—பின்னால் பல இன்னாக்கள் வந்தே தீரும். கொலை போன்ற கொடுந் தீவினைசெய்த ஒருவன் எங்கு ஓடி ஒளிந்தாலும், அரசாங்கம் அவனைத் தேடிப்பிடித்து ஒறுத்தே தீரும். இனி, தீவினையே செய்வதில்லையென்று

அவன் விட்டு விட்டாலும், விடுபட்ட தீபோல சும்மா இராது, அவ்வினை அவனைப் பின் தொடர்ந்து சுட்டே தீரும். அதனால்தான் "தீயினும் அஞ்சப்படும்" என்றார்.

வேறு எந்தப்பகையினிடமிருந்தும் தப்பித்துக்கொள்ளலாம். தீவினையாகிய பகையிடமிருந்து தப்பவே முடியாது. தீவினைப் பகை, நிழல் போல, நீங்காமல் பின் தொடர்ந்து சென்று வருத்தியே தீரும். ஒருவன் எங்குச் சென்றாலும், அவனுடைய நிழலானது, அவனை விட்டு நீங்காமல் பின் தொடர்ந்து செல்லும். அவன் வேறொரு நிழலுக்குள் சென்று மறைந்தாலும், அவன் நிழலும் அந்நிழலுக்குள் மறையும். அவன் அந்நிழலை விட்டு வெளியேறும்போது, அவன் நிழலும், அந்நிழலை விட்டு வெளியேறி, அவனைப் பின்தொடர்ந்து செல்லும். மாலையில் வானத்தில் கதிரவன் சாயச் சாய நிழல் நீளமாகிக்கொண்டே செல்லும். நிழல் எவ்வளவு நீண்டுச் சென்றாலும், அவனுடைய அடியை விட்டு நீங்காது. என்னே! நிழலுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு! அதைப்போலவேதான் மனிதனுக்கும் தீவினைக்குமுள்ள தொடர்பும்!

தீவினை செய்தவன் எங்கு, எப்படி, ஓடி ஒளிந்தாலும், அவ்வினையானது, நிழல் போல் அவனை விட்டு நீங்காமல் பின் தொடர்ந்து சென்று வருத்திக் கேடு தரும்.

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வியா தடியுறைந் தற்று. (குறள்-உ0அ)

வியாது—நீங்காமல்.

இதே கருத்தை நாலடியார், "முற்பிறவியில் பறவைகளைக் கூண்டிலடைத்து வாழ்வோர், மறுபிறவியில்

பகைவரால் சிறைபிடிக்கப்பட்டு அடிமை வேலை செய்வர்'' என்றும், முற்பிறவியில் நண்டின் ஊனை விரும்பி அதன் கால்களை ஒடித்த கைவிரல் மறுபிறவியில் குட்ட நோயால் பீடிக்கப்பட்டு அழுகிக் குறையும்'' என்றும் நகையும், இழிவரலும் பொருந்த உரைக்கிறது.

மற்றும், தீ வினை செய்தாரை, நிழல்போல் தீ வினை பின் தொடர்ந்து வருத்துதலை வேறு சில இலக்கியங்கள் மூலமும் காணலாம்.

'நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரம்' இளங்கோவடிகளால் இயற்றபட்டதற்கு, அவரால் கூறப்படும் முப்பெருங் காரணங்களுள் 'ஊழ்வினை வந்து உருத்தூட்டும் என்பதும் ஒன்று.

கோவலன், முற்பிறவியில், குற்றமற்ற ஒரு வாணிகன்மீது 'பகை நாட்டு ஒற்றன்' என்ற குற்றம் சாட்டித் தன்னுட்டு மன்னனுல் கொலை செய்வித்தான். அத்தீவினையே அவனை நிழல் போல் பின் தொடர்ந்து வந்து இப்பிறவியில் 'கள்வன்' என்ற குற்றம் சாட்டிக் கொல்விக்கிறது. முற்பிறவி மறுபிறவி நம்பிக்கையில்லாதோர் பின் வருமாறுங் கொள்ளலாம். கோவலன் கற்புக்கரசியாகிய கண்ணகியை விட்டுப் பிரிந்து, மாதவியுடன் இன்பந் துய்த்து கண்ணகியின் வாழ்வைச் சிதைத்தான். புகார் நகரில் தான் செய்த தீ வினையை யுணர்ந்து, வருந்தித் திருந்தி, அத்தீவினையினின்றும் தப்ப மதுரை செல்கின்ருன். அக்கொடுமையைக் கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகி பொறுத்துக் கொண்டாலும், தீ வினையானது கோவலனை விடாமல் பின்தொடர்ந்து மதுரை சென்று பொற்கொல்லன் வாய்ச்சொல் மூலம் துன்புறுத்துகின்றது! கொல்கின்றது! தீயானது, தன்னைச்சார்ந்த பொருள்களைச்

சுட்டெரிப்பது போல, தீ வினை யாளனைச் சார்ந்தோரை யும், தீயினும் கொடிய தீவினை துன்புறுத்தும் அதனால் தான் குற்றமற்ற கண்ணகியும் கோவலனைச் சார்ந்த காரணத்தால் பல இன்னல்களுக்கு ஆளாகிறாள்.

தருமன் செய்த இராச சூய யாகத்திற்கு வந்த துரி யோதனனின் உள்ளம் வருந்தும்படியாகத் துரௌபதி சிரிக்கின்றாள்: இச்சிறு தீ வினையே பெரிதாய் வளர்ந்து துரியோதனன் அவையில் துரௌபதியின் துகிலை (ஆடையை) உருவுகின்றது! பாண்டவர்களின் நாட் டைக் கவர்ந்து காட்டிற்கு ஓட்டுகிறது! பாரதப் போரை மூட்டுகிறது! துரௌபதி செய்த தீவினையின் பயனை அவளும் அவளைச் சார்ந்தோரும் அனுபவித்து விட்டார் கள். துரௌபதி செய்த சிறு குற்றத்திற்கு இவ்வளவு பெரிய ஒறுத்தலா? இவ்வளவு தீங்கிழைத்தல் துரியோ தனனுக்கு அடுக்குமா? அளவுக்கு மீறி மிக அதிகமாகச் செய்துவிட்டான். அவன் செய்த வினையை அவன் அனுபவிக்க வேண்டாமா? தீ வினை அவனை மட்டும் விட்டுவிடுமா? அவனைச் சார்ந்தோரையும் அழித்து அவனையும் அழித்துவிடுகிறது. அனைவரும் போர்க் களத்தில் பட்டொழிகின்றனர்.

இராமன் தன் சிறுவயதில், அம்பின் நுனியில் களி மண் உருண்டையைச் செருகிக் கூனியின் முதுகில் அடித்து, வருத்தி, எள்ளி விளையாடினான். ஒரு நாள் அல்ல! பலநாட்கள்! இராமன் வளர்ந்தான். அவன் கூனியின் பால் செய்த தீவினையும் வளர்ந்து, முடிசூட்ட ஒட்டாமல் காட்டிற்குத் துரத்தியது! அவனைச் சார்ந்த காரணத்தால் 'சீதையும் இலக்குவனும் அவனுடன் காட்டிற்குச் சென்று வருந்தினர்! தீ வினையும் அவர் களைத் தொடர்ந்து காட்டிற்குச் செல்கிறது! சீதையைப்

பிரித்துப் பிரிவுத்துயரால் இராமனை வதைக்கிறது' இராமனுடைய மனைவி என்ற காரணத்தால் சீதையும் அசோக வனத்தில் சிறை வைக்கப்பட்டு வதைகிருள்.

கைகேயி, கூனியின் சூழ்ச்சியால் அறிவு திரிந்து அடாத வரங்களைக்கேட்டாள்! பிடிவாதமாகக் கேட்டாள் அத்தீவினை, அவளையும் அவளைச் சார்ந்தோரையும் மாங்கலியம் இழக்க வைக்கிறது! பெற்ற மகனே அவளை வெறுத் தொதுக்கும்படிச் செய்கிறது!

சூர்ப்பணகை, சீதைக்குரியவனைத் தனக்கு உரிய வனுக்க முயற்சிக்கிருள். அத்தீவினை உடனே அவளு டைய மூக்கையும் முலைகளையும் அறுத்து எரிகிறது! அவளுக்குதவ வந்த கர தூடணர்களைக் கொல்கிறது.

இராவணன், தன்னைச் சார்ந்தோருக்குப் பெருந் தீங்கிழைத்தவர்களுக்குத் தக்க பாடம் புகட்டுவதை விட்டு விட்டு, பிறன் மனையாளாகிய சீதையின் மேல் காமங் கொண்டு, வஞ்சனையாகக் கவர்ந்து, சிறைவைத்து வருத்தித் தனக்குரியவளாக்க முயற்சிக்கிருன். இக் கொடுந் தீவினை, அவன் பேரரசை அழிக்கிறது. அவனைச் சார்ந்தோரை அழிக்கிறது. முப்பெருங் கடவுள் களையும் வெல்லும் அவனுடைய பெரும் ஆற்றலை அழிக் கிறது! பெருத்த வலிமையை அழிக்கிறது! இறுதியாக அவன்பெற்ற முக்கோடி வாழ்நாளையும் அழித்து அவனை யும் அழித்து விடுகிறது!

தீயினும் கொடிய தீவினை, நிழல்போல் பின் தொடர்ந்து வருத்தாமல் யாரை விட்டது? இன்னும் எத்தனையோ இலக்கியச் சான்றுகளைக் காட்டலாம். விரிப்பின் பெருகும். "நிழல்தன்னை வீயாது அடி உறைந் தற்று" என்ற குறள் உவமை எத்தனை யெத்தனை இலக்

கியங்களை விளக்கிக் காட்டுகிறது! இவ்வளவு உணர்ந்த பிறகும் தீ வினை செய்யலாமா? ஒழிக தீவினை!

ஓங்குக நல்வினை!

## 12. மருந்தாகித் தப்பா மரம்

உலகம் முதன் முதலில் தோன்றிய காலத்தில் உலகப் பொருள்கள் யாவும் பொதுவுடமையாகவே இருந்தன. நாளடைவில் அறிவு வளர வளர மனிதன், பொதுவுடமையை ஒதுக்கித் தனியுடமையைப் பெருக்கிச் சட்டமென்னும் காவலையும் அமைத்துக்கொண்டான். பரம்பரை காரணமாகவோ, அறிவு காரணமாகவோ, சூழ்ச்சி காரணமாகவோ அறிவினுலாய முயற்சி காரணமாகவோ, சிலர் செல்வத்தைக் குவித்துத் தனியுடமை யாக்கி ஆடம்பரவாழ்வு வாழ, பலர் உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாது வாடும் நிலை ஏற்பட்டது. சிலர் எலும்பொடிய உழைத்தும் வயிருர உண்ண முடியாத நிலை ஏற்பட்டது. இதனுல் பொய், களவு, கொலை முதலிய குற்றங்களும் சமுதாயத்தில் மலிந்தன.

அதனுல்தான் இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் வாழ்ந்த தமிழ்ப் பெரியார் நக்கீரனுர் "செல்வத்தின் பயனே ஈதல், துய்ப்போம் எனினே தப்புன பலவே" என்ருர்; அதாவது "செல்வம் மிகுதியாகப் பெற்றதன் பயன், ஏழைகளுக்குக் கொடுத்துதவுவதாகும். அங்ஙனம் உதவாமல், செல்வர்கள், 'நாம் மட்டும் அனுபவித்து வாழ்வோம். பிறர் எப்படி வருந்தினுல் நமக்கென்ன?' என்று வாழ்வார்களேயானுல், அதனுல் சமுதாயத்தில் பொய், களவு, கொலை முதலிய குற்றங்கள் மலியும்! புரட்சி ஓங்கும்! அமைதி நீங்கும்!" என்ற கருத்தைப் புறநானூற்றின்மூலம் தெரிவித்தார்.

இவ் வுயர்ந்த கருத்தை யுணர்ந்த மிகச் சில பெரியோர்கள் தீ வழியை வெறுத்து, நல்வழியில் பொருள் ஈட்டி, ஒப்புரவுசெய்து – வறியார்க்குக் கொடுத் துதவி – வாழ்தலின் மேம்பாட்டையுணர்ந்து, அமிழ்தமே கிடைப்பினும் தனித்துண்ணுது, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பி, ஒப்புரவு செய்து வாழ்ந்தனர்! வாழ்கின்றனர்! இத்தகைய சான்றேர்களால்தான் உலகம் நிலேத்திருக் கிறது! இன்றேல் உலகம் என்றே களவும் கொலேயும் மலிந்து அழிந்திருக்கும்.

உலகை அழியாது காத்து வரும் ஒப்புரவாளர் களுக்கு – பேருதவியாளர்களுக்கு, வள்ளுவர் கூறும் உவமைகளே நோக்குவோம். உயிர் வாழ்வதற்கு அடிப் படையானது உணவு; நல்ல உணவை உண்டாக்கித் தானும் உணவாக இருப்பது நீர்! இத்தகைய நீரைக் கொடுப்பது மழை! ஆம்! மழையே உலகை வாழ்விக் கிறது! இத்தகைய மழைக்கு உலகம் என்ன பதிலுதவி செய்கிறது? ஒன்றும் இல்லே. மழைக்கு எவ்வுதவியும் தேவையில்லே. உலகம் ஏதாவது செய்தாலும் மழை ஏற்றுக்கொள்ளாது. எந்தப் பதிலுதவியும் கருதாமலே மழை உலகை வாழ்விக்கிறது. அதைப்போலவேதான் ஒப்புரவறிந்த சான்றேர்களும், எந்தக் கைம்மாறும் – பதிலுதவியும் கருதாமல் ஏழைகளுக்கு உதவுகின்றனர்.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னுற்றுங் கொல்லோ உலகு. (குறள் - உகக)

கடப்பாடு–ஒப்புரவாளர் செய்யும் உதவிகள்.
கைம்மாறு–பதிலுதவி. மாரி–மழை.

இக்கருத்தையே, 'பெய்யவேண்டிய மழை பெய்யா விட்டாலும், சான்றேர் செய்யவேண்டிய அறங்களேச்

செய்யாவிட்டாலும் உலக உயிர்கள் வாழ்வது எவ்வாறு?; என்ற வினவின்மூலம் நாலடியார் உணர்த்துகிறது.

மாரிபோலக் கைம்மாறு கருதா ஒப்புரவாளரைத் திருவள்ளுவர், பேரறிவாளன், நயனுடையான், பெருந்தகையான் என மூன்று வகையினராகப் பிரித்து அவர்களுக்கு முறையே, ஊருணி, பயன் மரம், மருந்து மரம் ஆகியவற்றை உவமையாகக் காட்டுகின்றார். முதல் உவமையை நோக்குவோம்.

ஊரின் நடுவே குடிநீர்க்கிணறு நீரால் நிரம்பியிருக்கின்றது. நீரும் உவர்ப்பு இல்லாத நல்ல நீர். அக் கிணற்றில் யார் வேண்டுமானாலும் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் சென்று நீர் இறைத்துக்கொள்ளலாம். யாவருக்கும் நீர் கொடுத்துதவும் அக் கிணறு இல்லாவிட்டால்–ஒருவரும் சென்று இறைக்காவிட்டால், கிணறு பாசான் பிடித்து, நீர் கெட்டுவிடும்; தீ நாற்றம் அடிக்கும். அவ்வழியே செல்வோர், மூக்கைப் பிடித்துக் கொண்டு காரி உமிழ்ந்து செல்வர். இத்தகைய இழிநிலை ஏற்படாதிருக்க, தண்மை நிறைந்திருக்கும் நல்ல நீரை யாவருக்கும் கொடுத்து உதவுகிறது கிணறு; கோடைக்காலத்துத் தன் கொடையைச் சுருக்கிக்கொள்கிறது. சிறிதும் மழையற்ற வறண்ட காலமானல், கிணறு காய்ந்து நீர்க்கொடையையே நிறுத்திவிடுகிறது.

அதைப்போலவே பேரறிவாளரும், தம்மிடத்தில் செல்வம் சேர்ந்தால், தம் இயற்கை யறிவாலும், செயற்கை யறிவாலும், 'செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்போம் எனினே தப்புன பலவே' என்பதையும்! விதமற்றும், ஈந்து உ வாழாவிட்டால், தம்மை யாரும், மதியாமல், 'கஞ்சன்' என்று தூற்றுவர் என்பதையும் உணர்ந்து, அந் நிலைகள் வராதிருக்க, புகழ் விரும்பி

யாவருக்கும் கொடுத்து உதவுவர். செல்வம் சுருங்கும் காலத்து உதவியும் சுருங்கும். வறுமையுற்ற காலத்து அவர் உதவியும் நின்றுவிடும். இங்ஙனம் ஊருணியின் தன்மைகள் யாவும் பேரறிவாளரிடம் நிறைந்திருக்கும்.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள்-உகரு)

ஊருணி—ஊரார் நீருண்ணுங்குளம்.

உலகு அவாம் உலகம் இனிது வாழ்தலை விரும்பும். திரு—செல்வம்.

ஊரின் நடுவில் யாவருக்கும் பொதுவான இடத்தில், சுவை மிக்க கனிதரும் மரம் ஒன்று பழுத்து இருந்தால், அம்மரம் தன்பால் நிறைந்துள்ள கனிகளை யாவருக்கும் கொடுத்து உதவும்; தன் உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய தழைகளைமட்டும் தனக்கு வைத்துக்கொண்டு, நிறைந்துள்ள கனிகளில் தனக்கு என்று ஒன்றையும் வைத்துக்கொள்ளாமல், தன் பால் வருபவர் யாவருக்கும் கொடுத்து உதவும். கனிகளேயன்றி, காய்களையும் விரும்புவோருக்குக் கொடுக்கும். காய்ப்பவற்றையெல்லாம், பழுப்பவற்றையெல்லாம் கொடுத்துக்கொண்டே இருக்கும்.

அதைப்போலவே, நல்ல நீதியும் பண்புமுணர்ந்தவரிடம் செல்வம் சேர்ந்தால், தம் எதிர்காலத்திற்கு என்று சேர்த்துவைக்காமல், தம் பால் மிகுதியாக இருக்கும் செல்வத்தைத் தம்மிடம் வந்து இரப்போர்க்கு எல்லாம் கொடுத்து உதவுவர்.

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின். (குறள்-உகசு)

நயன் உடையான் - நீதியும் பண்பும் உடையான்.

படின் – சேர்ந்தால்.

புகழ் விரும்பிக் கொடுக்கும் பேரறிவாளரைவிட, புகழ் நோக்காது, மிகுந்துள்ளதைக் கொடுக்கவேண்டும் என்ற உணர்ச்சியோடு கொடுக்கும் நயனுடையார் சிறிது உயர்ந்தவர்.

'தம் ஈகைப் பண்பால், பலரும் தம்மை விரும்பிச் சூழ்ந்திருக்கும்படி வாழ்வோர் நடு ஊரில் இருக்கும் மேடையால் சூழப்பட்ட பெண் பனைமரத்திற்கு ஒப்பாவர்' என்றும், செல்வம் மிக்க காலத்தும் பகுத்துண்ணு அற்பர் சுடுகாட்டில் இருக்கும் ஆண் பனைக்கு ஒப்பாவர்' என்றும் நாலடி நானூறு உணர்த்துகிறது.

"நடுவூருள் வேதிகைச் சுற்றுக்கோள் புக்க
படுபனை அன்னர் பலர்நச்ச வாழ்வார்;
குடிகொழுத்தக் கண்ணும் கொடுத்துண்ணு மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றைப் பனை" (நாலடியார்)

படுபனை–பெண் பனை. ஏற்றைப்பனை–ஆண்பனை.

இனிப் பெருந்தகையாளருக்குக் காட்டப்பட்ட உவமையை நோக்குவோம். இலை முதல் வேர் ஈருக எல்லா உறுப்புக்களாலும் நோய் தீர்க்கும் மருந்தாகப் பயன்படும் மரமும் உண்டு. அம்மரத்தின் எப்பாகத்தைத் துணித்துச் சென்றுலும் மருந்தாகப் பயன்படும். இலையைப் பறிப்பாருக்கும், கிளையை வெட்டுவாருக்கும், பட்டையை உரிப்பாருக்கும், வேரைத் தோண்டுவாருக்கும், தப்பாமல் மருந்தாகிப் பயன்படுகிறது மருந்துமரம். இங்ஙனம் தன்னைத் துன்புறுத்துவோருக் கெல்லாம், நோய் நீக்கிப் பெரும் பயன் அளிக்கிறது.

அதைப்போல, மிகப்பெரும் பண்பு வாய்ந்த பெருந்தகையாளரிடம் செல்வம் சேர்ந்தால், அவர், யாவருக்கும் எல்லாவற்றையும் கொடுத்துதவுவர்; தாம் வறுமையுற்றாலும், எங்ஙனமாவது கொடுப்பர்; உடலையும் உயிரையும் கொடுப்பர்; இங்ஙனம் உடல், பொருள், ஆவி, மூன்றாலும் சமுதாயத்துக்குப் பயன்படும் பெருந்தகையாளர், பேரறிவாளரையும், நயனுடையாரையும் விட மேலானவரன்றோ?

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின் (உகஎ)

இங்ஙனம், ஒப்பிலாத் தெய்வப் புலவர், உலக இயல்பை நுணுகி ஆராய்ந்து ஒப்புரவாளரை மூவகைப் படுத்தி அவர்கள் தரத்திற்கு ஏற்ப, ஊருணியையும், பயன்மரத்தையும், மருந்து மரத்தையும் உவமை காட்டியிருக்கும் திறன் வியந்து வியந்து போற்றற் குரியதாகும்

ஓங்குக ஒப்புரவு!

## 13. பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை

'அன்பேசிவம், 'அன்பே தெய்வம்' என்பன ஆன்றோர் மொழிகள். அன்பு இன்றேல் உலகமே இல்லை! அன்பினால் உலகையே தன்வயப்படுத்தலாம்! இத்தகைய அன்பின் முதிர்ச்சியே 'அருள்' என்பது. பெற்றோர், உடன்பிறந்தார், மனைவி, மக்கள், உறவினர், நண்பர் என்று ஏதேனும் ஒரு தொடர்புடையாரிடம் செலுத்தும் பற்றுதலே 'அன்பு' எனப்படும். இத்தகைய தொடர்பு ஏதுமின்றி எல்லோரிடத்தும், எல்லா உயிர்களிடத்தும் உண்டாகும் பற்றுதலும், இரக்க உணர்வும் 'அருள்' எனப்படும்.

அன்பின் முதிர்ச்சி அருள். எல்லாம் 'எனக்கு, எனக்கு' என்றிருந்த இளைஞன், மணம் ஆனபின், 'நமக்கு, நமக்கு' என, மனைவியையும் தன்னுடன் சேர்த்துக் கூறுகிறான். தனக்குக் கிடைத்த எதையும் மனைவிக்கும் பகுத்துக் கொடுக்கிறான். அங்ஙனமே பெண்ணும். உண்மையான அன்பு திருமணத்திற்குப்பிறகு உண்டான இல்லற வாழ்க்கையில் தான் தோற்றமாகிறது. பின்னர், தம் பிள்ளைகள், தம் பிள்ளைகளுக்கு விளையாட உதவும் அடுத்த வீட்டுப் பிள்ளைகள், தம் வீட்டுக்கு வரும் விருந்தினர்கள், தம் நண்பர்கள், தம் தோழிகள், தம்உறவினர்கள், தம் ஊரினர், தம் மொழியினர், தம் நாட்டினர்—என்று இவ்வாறாக இல்லறத்தில் தோன்றிய அன்பு விரிந்துகொண்டே செல்கிறது. இங்ஙனம் விரிந்த அன்பே, மொழி, நாடு என்ற எவ்விதத் தொடர்புமின்றி எம்மொழியினர் பாலும், எந்நாட்டினர் பாலும், எவ்வுயிர் பாலும் செலுத்தப்படும் அருளாக மாறுகிறது.

இங்ஙனம் அன்பின் வளர்ச்சி-முதிர்ச்சியாக, அன்பிலிருந்து தோன்றிய அருளை, அன்பின் குழந்தையாகக் கூறலாம். அருளுக்கு, அன்பு, ஈன்ற தாயாக இருப்பது போல, பொருள், வளர்க்கும் செவிலித்தாயாக விளங்குகிறது. வறுமையாலும், பட்டினியாலும், பிணியாலும், பிற தொல்லைகளாலும் வருந்தும் பிற உயிர்களின் துயர் துடைக்க, பொருள் தேவை. அருள் உள்ளத்தை வளர்த்துச் செயல்படச் செய்வது பொருளே. 'அன்பு ஈன்ற குழந்தையாகிய அருளை வளர்க்கும் செவிலித் தாயாக பொருள் விளங்குகிறது' என்ற கருத்தை,

அருள்என்னும் அன்பீன் குழவி பொருள்என்னும்
செல்வச் செவிலியால் உண்டு. (குறள்-எடுஎ)

என்ற குறள் உணர்த்துகிறது.

இறைவனின் வடிவமாகிய அன்பின் குழந்தையை வளர்க்கும் செவிலித்தாய் பொருள்! என்னே பொருளின் சிறப்பு! அறம், பொருள், இன்பம் என்ற மூன்றில், நல்வழியில் ஈட்டிய பொருள் பெற்றவரே, அறம், இன்பம் ஆகிய ஏனைய இரண்டையும் எளிதில் பெறமுடியும். எவ்வகைப் பகையையும் அறுத்தெறியும் கூரியவாள், பொருளைப்போல் வேறொன்றில்லை. பொருளில்லார் இவ் வுலகில் வாழவே இயலாது. பொருளிலா ஏழையை வறுமை வாட்டும்! பசி பாழ்படுத்தும்! பிணி பிய்த்துத் தின்னும்! கவலைத் தேள் கொட்டும்! மானம் மாய்க்கும்! எனவே பொருள் இல்லார்க்கு இவ்வுலகில் அமைதி வாழ்வு – இன்பவாழ்வு இல்லவே யில்லை!

அதைப்போல, அருள் இல்லார்க்கு இவ்வுலகில் அமைதி வாழ்வு – இன்ப வாழ்வு இல்லவே யில்லை!

அதைப்போல, அருள் இல்லார்க்கு–அருள் உள்ளங் கொண்டு தன்னலம் விட்டுப் பொதுப்பணியாற்றார்க்கு–, அவ்வுலக இன்பம்– இறப்புக்குப்பின் உளதாகிய புகழ் இல்லவே இல்லை.

அருள்இல்லார்க் கவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு (குறள்-உசஎ)

இல்லாகி யாங்கு – இல்லையானாற் போல.

பொருள் பெற்று இன்ப வாழ்வு வாழ்வோர் அவ் வழியும் பொருளால் அருளை வளர்த்து, அதற்கு ஈடாக, அவ்வருள் கொடுக்கும் அழியாப்புகழைப் பெற முயல் வதே அறிவுடமையாகும். பொருள் மிகப் பெருதோரும், அழியும் உடலால் சமூகத்திற்கும் நாட்டிற்கும் உலகிற்கும் நற்பணியாற்றி, அழியாப்புகழ்பெற முயலவேண்டும்.

புத்தர், இயேசு, காந்தியடிகள் போன்றோர் பொருளின்றி உடலால் மக்களுக்கு உழைத்தே அழியாப்புகழ் பெற்றனர். இவ்வகைக்கு நோயற்ற உடல் வேண்டும். நோயற்ற உடலும் ஒரு பொருளே! எனவே பொருள் பெற்றோர் பொருளையும், நல்லுடல் பெற்றோர் நல்லுழைப்பையும், அறிவுபெற்றோர் அறிவையும், செவிலித் தாயாகக் கொண்டு அருளை வளர்த்து, அவ்வுலக இன்பமாகிய அழியாப் புகழைப் பெறுவாராக!

ஓங்குக பொருளும் அருளும்!

## 14. பெற்றம் புலியின் தோல்போர்த்து மேய்தல்

தன்னலத்தைத் துறந்துவிட்டுப் பிறர் நலத்திற்காகப் பாடுபடுபவரே உண்மையான துறவியாவர். அத்தகையோரின் புகழ், உலகத்தில் இறந்தோரின் எண்ணிக்கையைப்போல அளவு கடந்தது. இத்தகைய உண்மைத் துறவிகள், சடை வளர்த்தல், மொட்டையடித்தல் போன்ற எவ்வித வேடங்களையும் விரும்பார். மற்றும் இவர்கள் இல்லற இன்பந்துய்த்து, காம உணர்ச்சி அடங்கியபிறகே, துறவு வாழ்க்கையில் ஈடுபடுவர். அப்பொழுதுதான் ஒழுக்கநெறி பிறழாது, துறவறத்தைக் கையாளமுடியும். இதுவே முறை. அதனுல் திருவள்ளுவரும் இல்லறத்தை முதலில்கூறி, துறவறத்தைப் பின்பு கூறினுர். தொல்காப்பியர் போன்ற சான்றோர் கருத்தும் இதுவே.

"காமஞ்சான்ற கடைக்கோள் காலை
ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே."

(தொல்காப்பியம்-கூ0)

பொருள்:– தலைவனும் தலைவியும், இன்பந்துய்த்து, காமம் அடங்கிய முதுமைக் காலத்தில், நல்ல மக்களொடும், அறஞ்செய்தற்குரிய சுற்றத்தினரோடும் பொருந்தி, சமூகத்திற்குரிய அறப்பணியாற்றுதலே பிறவிப் பயனாகும்.

இங்ஙனம் முறையாகவன்றி, இளமையிலேயே இயற்கை நெறிக்கு மாறுபட்டு, இளமையிலேயே துறவு பூணுவோர் நல்லொழுக்க நெறியில் நிற்க இயலாது, கூடாவொழுக்கம் மேற்கொண்டு, போலித் துறவிகளாய்ச் சமூகத்துக்குத் தீங்கே இழைப்பர். விவேகானந்தர் போன்ற மிகச்சிலரால்தான் இளமையில் துறவு பூண்டு நல்லொழுக்க நெறியில் நின்று பணியாற்ற முடியும்.

பெரும்பாலோர், மனைவி மக்களைப் பேணச் சோம்பி, தன்னலம் ஒன்றே கொண்டு, போலித் துறவுபூண்டு, கூடா ஒழுக்கம்–தீய ஒழுக்கம்–பேணிப் பிறரை வஞ்சித்து வாழ்வர். இத்தகைய அற்பர்களின் கூடாஒழுக்கத்தையே, திருவள்ளுவர் 'கூடா ஒழுக்கம்' என்ற அதிகாரத்தில் சில நல்ல உவமைகளால் கண்டிக்கிறார்.

"போலித் துறவிகள் புலித்தோலைப் போர்த்த மாட்டை ஒத்தவர்; புதரில் மறைந்துகொண்டு, வலை வைத்துப் பறவைகளைப் பிடிக்கும் வேடர்களைப்போல துறவி வேடத்தில் மறைந்து தீயொழுக்கமே புரிந்து வாழ்பவர்; புறத்தே செம்மையும், மூக்கில் கருமையும் உடைய குன்றி மணியைப்போல, புறத்தே துறவிக் கோலமும், அகத்தே வஞ்சனையும் கொண்டிருப்பர்; மனத்தில் மாசுகளை நிரப்பிக்கொண்டு, மாண்புடையவர் போல நாள்தோறும் நீராடி நீராடி ஏமாற்றி வாழ்வர்;

அம்பு வடிவத்தால் நேர்மையுடையதாயினும் செயலால் கொடுமைமிக்க கொலைக் கருவியாய் இருத்தல்போல, வடிவத்தால் துறவியராகவும், செயலால் கொடியவராக வும் இருப்பர். இத்தகையோரின் வேடத்தைக்கண்டு ஏமாறக்கூடாது," எனத் திருவள்ளுவர் பல உவமைகள் மூலம் போலித்துறவை வெளிப்படுத்தி எச்சரிக்கிறார். அவற்றுள் முதல் உவமையை நோக்குவோம்.

பசித்தாலும் புல்லைத் தின்னாமல், ஊனையே—பிற உயிர்களின் உடலையே தின்று வாழும் கொடிய விலங்கு புலி. ஆதலால் அதைக் காணும் மக்கள் அஞ்சுவர். அது நெற்பயிரில் புகுந்தாலும், 'அப்பயிரைத் தின்னாது' என்ற எண்ணத்தாலும், அச்சத்தாலும் உழவன் ஒதுங்கி விடுவான்.

செழித்த நெற்பயிர் உள்ள வயலுக்கு அருகே உள்ள புல் தரையில் மேய்கின்ற மாடு, தனக்குரிய புல்லை விட்டுவிட்டு தனக்குரிமையற்ற நெற்பயிரைத் தின்ன விரும்பி, உழவன் தன்னைக்கண்டு அஞ்சி ஓட்டா மல் ஒதுங்கி விடுவதற்காக, புலியின் தோலை மேலே போர்த்துக்கொண்டு, புலிபோன்ற தோற்றத்துடன் நெற்பயிரில் புகுந்து மேய்வதைப்போன்றதாகும்; தன் மனத்தை அடக்கி நல்வழிச் செலுத்தும் ஆற்றல் இல் லாத ஒருவன், தனக்குரிய மனைவியையுந்துறந்து பிறர் ஐயப்படாதபடியும் அஞ்சும்படியும், வலிய துறவுக் கோலம்பூண்டு, பிறர்க்குரிய பெண்களை விரும்பி வாழ்தல்,

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. (குறள்-உஎங)

வல்லுருவம் – போலிவேடம். பெற்றம் – மாடு.

இத்தகைய போலித் துறவிகளைக்காணும் மக்கள், வெளிவேடத்தில் மயங்கி, 'துறவியார் தீமைசெய்யார்,' என்று நம்பியும், 'ஐயுற்ருல் துறவியார், துறவின் ஆற்ற லால் சபித்துவிடுவார்' என்று அஞ்சியும் ஒதுங்கி, புலித் தோல்போர்த்த மாட்டைக்கண்டு அஞ்சும் உழவனைப் போல மோசம்போகின்றனர்.

மாடு புலித்தோலைப் போர்த்து மேயும் வழக்கம் உலகிலில்லை. உலகில் இல்லாத ஒரு பொருளை உவமை யாகக் காட்டுவதற்கு, இலக்கியத்தில் 'இல் பொருள் உவமையணி' என்று பெயர். எனவே இக்குறள் இல் பொருள் உவமையணியாகும்.

இந்த இல்பொருள் உவமையணியால், போலித் துறவிகளின் ஏமாற்றுத் தன்மையையும், சமுதாயத்தில் நடைபெறும் இழிந்த தீய ஒழுக்கங்களையும் திருவள்ளு வர் நன்கு வெளிப்படுத்தினர். இறுதியாக,

மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்தது ஒழித்து விடின் (குறள்-உஅ0)

என்ற குறள் மூலம், 'தீச் செயல்களை ஒழித்து நல் வழியில்வாழும் உண்மைத்துறவிக்கு,மொட்டையடித்தல், சடை வளர்த்தல் போன்ற வேடங்கள் வேண்டா என்ற கருத்தை உணர்த்தி, 'இங்ஙனம் உண்மைத் துறவிகள் வேண்டா வேடங்களை நீக்கி விட்டால், போலிகள் வேடத்தால் ஏமாற்ற முடியாது' என்பதையும் உணர்த்தி, போலித் துறவே உலகை விட்டு ஒழிவதற் குரிய வழியையும் குறிப்பாக உணர்த்திய திருவள்ளு வரின் திறம் வியந்து போற்றற்குரியதாகும்!

## 15 புறந்தூய்மை நீரானமையும்

உண்மை, வாய்மை, மெய்ம்மை ஆகிய மூன்று சொற்களும் ஒரே பொருளை யுணர்த்துவன போல் தோன்றினும், ஒவ்வொன்றிற்கும் நுண்ணிய வேறுபாடு உண்டு. உள்ளத்தின் தூயதன்மை உண்மை; வாய்ச் சொல்லின் தூய தன்மை வாய்மை; மெய்ச்செயலின் தூய தன்மை மெய்ம்மை. மனம், மொழி, செயல் ஆகிய மூன்றின் தூய்மையை உணர்த்துவனவே, உண்மை, வாய்மை மெய்ம்மை என்பனவாகும். மனம் மொழி, செயல் ஆகிய மூன்றாலும் தூய்மையுற்றவரே உண்மை யான முழுத் தூயோராவர்.

உள்ளம் எண்ணுகின்றது; வாய் சொல்லுகின்றது; மெய் செய்கின்றது. உள்ளத்தில் தோன்றும் எண்ணமே சொல்வடிவமாகவும் செயல் வடிவமாகவும் மலர்கின்றது. ஆதலின் உள்ளத்திலே தூய்மை ஏற்பட்டால் ஏனைய தூய்மைகள் தாமே அமைந்துவிடும். இக்கருத்தையே, உலகப்பெருங்கவி பாரதியார்,

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்
வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவுமாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்
தெள்ளுற்ற தமிழமுதின் சுவை கண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்"

என்ற கவிமூலம் தெரிவிக்கின்றார்.

ஆயினும், உண்மை, வாய்மை, மெய்ம்மை ஆகிய மூன்றனுள் இடையே இருக்கும் வாய்மை, ஏனைய இரண்டையும் தன்னுடன் இணைத்துக்கொண்டும், தன்னுள் அடக்கிக்கொண்டும் இருக்கிறது எனலாம். நுண்ணிய கேள்வி அறிவுடையோர் வணங்கிய–பணிந்த–தூய்மையான வாய்மைச் சொற்களை யுடையோராயிருப்பர். அத்தகைய வாய்மை யோரிடத்தில் உண்மையும் மெய்ம்மையும் நிரம்பியிருக்கும், எனவே மனம், மொழி, செயல் தூய்மைகளைத் தன்னுள்ளே அடக்கிக்கொண்டு திகழும் ஒரு சிறந்த சொல்லே 'வாய்மை' என்பது. ஆதலால் திருவள்ளுவரும் 'வாய்மை' என்ற அதிகாரத்தைப் படைத்து உண்மை முதலியவற்றை விளக்குகிறார்.

'வாய்மை' என்றால் என்ன? அதன் இலக்கணம் யாது? யாருக்கும், எந்தக் காரணத்தாலும், எந்தவிதத் தீங்கும் பயவாத தூய்மையான சொல்லைச் சொல்லுதலே வாய்மையாகும்.

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல் (குறள் உ௯௧)

எவ்வுயிருக்கும் தீமை பயவாத சொற்கள் எல்லாம் வாய்மையே. நடந்தது நடந்தபடியே கூறுவதுதான் வாய்மை யென்பதில்லை. நடந்த நிகழ்ச்சியை அப்படியே கூறுவதால் பிற உயிருக்குக் கேடுண்டாகுமானால், அது பொய்ம்மையே. நடந்த நிகழ்ச்சியை மாற்றிக் கூறுவதாலோ, நடவாததை நடந்ததாகக் கூறுவதாலோ, எவ்வுயிருக்கும் தீங்கின்றி நன்மையே உண்டாகுமானால் அவையும் வாய்மையே.

குடிகாரன் ஒருவன் குடிவெறியும் சினமும் கொண்டு குற்றமற்ற தன் மனைவியை அடிப்பதற்குத் துரத்திக்

கொண்டு வருகிறுன். குடியன் மனைவி ஏதோ ஒரு வீட்டினுள் நுழைந்துகொள்கிருள். அவ்வீட்டுக்காரனுக்கு மட்டும் அந்நிகழ்ச்சி தெரியும். அவ்வழியாகத் தேடிக் கொண்டு வந்த குடியன், அவ்வீட்டுக்காரனை விசாரிக்கிருன். இப்போது அவன் என்ன கூறுவது? உள்ளதை உள்ளபடியே கூறிவிட்டால், அவள் உயிருக்கே ஆபத்தாக நேரலாம். எனவே அது பொய்மையே. 'எனக்குத் தெரியாது' என்ற பொய்யைக் கூறினல், அவளைக் காப்பாற்றிவிடலாம். குடியனுக்குக் குடிவெறி தணிந்தவுடன் சினமும் தணிந்துவிடும். எனவே, தீமையின்றி நன்மையே பயக்கும் இத்தகைய பொய்ம்மையும் வாய்மையே.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின் (குறள்-உகஉ)

வாய்மையிடத்த–வாய்மையே, புரைதீர்ந்த–குற்றமற்ற.

வாய்மையின் இலக்கணத்தை இவ்வளவு சிறந்த முறையில், திருவள்ளுவரைத் தவிர வேறு எந்தப் புலவரும் கூறியதில்லை! கூறவும் இயலாது! இங்ஙனம் சில அறங்களுக்கு வள்ளுவர் கூறும் இலக்கணம் மிகச்சிறந்த முறையில் அமைந்துள்ளது.

தீமை பயக்கும் பொய்மையை நீக்கி, நன்மை பயக்கும், வாய்மையே பேசி வாழும் ஒருவனை, உலகச் சான்ருேரெல்லாம் எப்பொழுதும் போற்றுவர். வாய்மையைவிடச் சிறந்த புகழுமில்லை; சிறந்த அறமும் இல்லை. இத்தகைய வாய்மையால் அகம்–உள்ளம் தூய்மையடையும். இதற்கு வள்ளுவர்கூறும் உவமையை நோக்குவோம். 'புறந்தூய்மை நீரான் அமையும்.'

உடல், உடை ஆகியவற்றின் தூய்மையே புறத் தூய்மையாகும். கூழானாலும் குளித்துக் குடிக்கவேண்டும் கந்தையானாலும் கசக்கி – துவைத்து – கட்டவேண்டும். புறத் தூய்மை யின்றேல், உடலிலும் உடையிலும் அழுக் குப் படிந்து நாற்றமெடுக்கும்; காண்போர் வெறுத் தொதுக்குவர்; நட்பும் சுற்றமும் குறையும். உடலில் நோய் பெருகும்; துன்பம் மிகும். இவ்வளவையும் நீக்கும் புறத்தூய்மை பெற வேண்டுமானால் நீர் வேண்டும். நீரின்றிப் புறஅழுக்கைப் போக்க இயலாது.புறத்தூய்மை கொடுக்கும் நீர் எத்தகையது? நீரின்றேல் உழவு இல்லை' உழவின்றேல் உணவில்லை! உணவின்றேல் உயிர் வாழ்க்கையில்லை! உயிர் வாழ்க்கைக்கு உணவைத் தரும் நீரே உணவாகவும் இருக்கின்றது! எனவே நீரின்றேல் உலகமே இல்லை! என்னே நீரின் பெருமை! இத்தகைய நீர் போன்றதே, அகத் தூய்மையைக் கொடுக்கும் வாய்மையும். நீரால் புறத்தூய்மையும் வாய்மையால் அகத்தூய்மையும் ஏற்படுகின்றன.

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். (குறள்-உகூஅ)

இக்குறள் எடுத்துக் காட்டுவமையாக அமைந்துள்ளது.

'நீரின்றேல் புறத்தூய்மையில்லை; புறத்தூய்மை யின்றேல் பல இன்னல்கள் நேரும்; என அறிந்தோம். அதைப்போல, வாய்மையின்றேல் அகத்தூய்மையில்லை. உண்மையும் மெய்ம்மையும் தன்னுளடக்கி நிற்பது வாய்மை யெனக் கண்டோம். வாய்மை யில்லாதவனிடத் தில் எந்தத் தூய்மையும் இருக்காது. எனவே அவனுள் ளத்தில் –அகத்தில், அழுக்காறு, வஞ்சனை, பொய், களவு கொலை போன்ற குற்றங்கள் – அழுக்குகள் – மண்டிக்

கிடக்கும். இத்தகைய மனமாசுடையோனை யார் விரும்புவர்? அவனுக்கு ஏது இன்பம்? ஏது புகழ்?

புறத்தூய்மையும் அகத்தூய்மையும் அற்றவனை உலகம் வெறுக்கும்! நீராலும் வாய்மையாலும், இரு தூய்மைகளையும் பெற்றவனையே உலகம் விரும்பும்! போற்றும்! புகழும்!

அகப்பொருள், புறப்பொருள் என்ற பாகுபாடு எப்படித் தமிழ்மொழிக்கே தனிப் பெருமையைத் தருகின்றதோ, அப்படியே புறத்தூய்மையும் அகத்தூய்மையும் மனித இனத்திற்கே தனிப்பெருமையை அளிக்கின்றன. இத்தகைய ஒப்புயர்வற்ற கருத்தை, 'புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்' என்ற எடுத்துக்காட்டுவமையால் விளக்கும் பொய்யாமொழியாரின் புகழ் என்னே!

## 16. நிலத்தறைந்தான் கை பிழையாமை

மிக்க சினம், மிக்க காமம், செருக்கு, கடும்பற்றுள்ளம், மாண்பு கடந்த மானம், மிக்க உவகை ஆகிய ஆறும் மக்கள் வெறுத்து ஒதுக்கவேண்டிய குற்றங்களாகும். இவற்றுள்ளும் சினம் மிகக் கொடியதாகும். சினத்தால் எப்பொழுதும் தீமையே உண்டாகும்.

கொடிய சினமானது, முகத்தில் மலர்ச்சியும், மனத்தில் உவகையும் இல்லாமல் அழித்து, நட்பை மாய்த்துப் பகையைப் பெருக்கும். ஒருவன் தனக்குத் துன்பம் நேராமல் இருக்க விரும்பின் சினம்வராமல் காக்க வேண்டும். இல்லாவிட்டால், சினம் அவனையே கொன்று

விடும். தன்னைச் சார்ந்த பொருள்களை யெல்லாம் சுட்டெரிக்கும் கொடிய நெருப்பு போன்றது சினம். அக்கொடிய சினமானது, உதவியாகவும் காவலாகவும் இருக்கின்ற, சுற்றத்தினரையும் நண்பரையும் நீக்கிப் பகையாக்கி, இன்பத்தை யெல்லாம் சுட்டுப்பொசுக்கி விடும். ஆதலால், இத்தகைய சினத்தைப் பொருளாக மதித்தவன் கெடுவதுறுதி. எங்ஙனம்?

சிறுவரிடையே ஒரு வகையான விளையாட்டுண்டு. ஒருவன் கையைத் தரையில் வைத்திருக்க, மற்றொருவன் தன்கையால், அவன் கையில் அடிப்பான். கீழே கை வைத்திருப்பவன், தன் கையில் அடிபடாமலும், அதே சமயத்தில், தன் கையில் அடிக்க ஓங்குபவன் கை நிலத்தில் அடிபடும்படியாகவும் செய்வதற்கு முயற்சிப்பான். அடிப்பவன் கண்ணை மூடிக்கொண்டு ஓங்கி அடிப்பானேயானால், கீழே வைத்திருப்பவன், திடீரெனக் கையை இழுத்துக்கொள்வான். அப்பொழுது ஓங்கியவன் கை, சிறிதும் தப்பாமல் நிலத்தில் அடிபட்டுத் துன்பமடையும்.

அதைப் போலவே,' மக்கள் வாழ்க்கையும், வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வரும் ஒரு வகை விளையாட்டே. வாழ்க்கை யென்னும் விளையாட்டில், அடிக்கடிச் சினமுண்டாகக் கூடிய செயல்கள் தோன்றிக் கொண்டேயிருக்கும். அப்போதெல்லாம் சினத்தை அடக்கவேண்டும். அடக்காவிட்டால் துன்பமுண்டாவதுறுதி. நிலத்தை அறைந்தவன் கையானது, தப்பாமல் நிலத்தில் மோதித் துன்புறுவதுபோல, சினம் மிகக் கொண்டவனும், வாழ்க்கை விளையாட்டில் தோல்வி கண்டு, துன்பம் மிகப்படுவது உறுதியே. அமைதியாகச் சிந்தித்து விளையாடுபவனுக்கு வெற்றியும், அவசரப்படுபவனுக்குத் தோல்வியும் எப்படி உறுதியோ, அப்

படியே, சினத்தை யடக்கியவனுக்கு இன்பமும் அடக்காதவனுக்குத் துன்பமும் ஏற்படுவது உறுதி.

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று (குறள் ௩0எ)

பொருள் என்று—காக்கத்தக்க பண்பு என்று.

ஆதலால், பெரும் நெருப்புத்திரளில் கையைத் தோய்த்தால் எவ்வளவு துன்பமாக இருக்குமோ அதைப் போல அவ்வளவு துன்பத்தை ஒருவன் செய்தாலும், சினங்கொள்ளாமல் பொறுத்துக்கொள்ளுதலும், துன்பஞ் செய்தவன் தன் தவறையுணர்ந்து வருந்தி வருங்கால், அவனுக்கு நன்மை செய்து நட்பாக்கிக் கொள்ளுதலும் சிறந்ததாகும்.

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று (குறள்-௩0அ)

இணர்எரி—கொத்து போன்ற பெரும் நெருப்புத்திரள். இன்னா—துன்பம். புணரின்—கூடுமானால், கூடினால். வெகுளாமை—சினங் கொளாதிருத்தல்.

இத்தகைய பொறுமையாளன் எண்ணியவற்றை யெல்லாம் எளிதில் பெற இயலும். காந்தியடிகள், கப்பலோட்டிய தமிழர் வ. உ. சி. போன்ற பெரியார்களும், அறப்போர் விடுதலை வீரர்களும், இணரெரி தோய்வன்ன இன்னாக்களைப் பொறுக்கும் ஆற்றல் பெற்றிருந்ததால் தான், அடக்குமுறைக் கொடுமைகளை யெல்லாம் பொறுத்து, மிகப் பெரும் வல்லரசையே வென்று விடுதலை பெற முடிந்தது.

கப்பலோட்டிய தமிழர் நாட்டு விடுதலையின் பொருட்டுக் கப்பலோட்டிய குற்றத்திற்காக, மாடுபோலச்

செக்கிழுத்தார்! களைத்து மயங்கி வீழ்ந்தார்! சௌக்கடி பட்டார்! அந்தோ! என்ன கொடுமை? அவ்வளவு கொடுமைகளையும் பொறுத்துக்கொண்டு, தனிப்பட்ட மனிதனை வெறுக்காது, ஆங்கில வல்லரசை எதிர்த்துப் போராடினர். இத்தகைய அவருடைய பொறுமையும் அறப்போருமே பின்னர் இந்திய விடுதலையாக மலர்ந்தது. எனவே சினங்கொள்ளாப் பெரியோர் எண்ணிய யாவையும் அடைந்தே தீருவர்.

> உள்ளிய தெல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்
> உள்ளான் வெகுளி யெனின். (குறள் ௩0௧)

இங்ஙனம் பொறுமையின்றி எண்ணியவற்றுக் கெல்லாம் மிக்க சினங்கொள்வோர், வாழ்க்கையில் தோல்வியும் துன்பமுமே அடைவர். ஆதலால், அத்தகையோர் செத்தவர்க்கு ஒப்பாவர். சினத்தை நீக்கியவர்கள் சாகாப் புகழ் பெற்றோருக்கு ஒப்பாவர்.

> இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
> துறந்தார் துறந்தார் துணை (குறள் ௩௧0)

இறந்தார்—மிக்க சினத்தோர். இறந்தார் அனையர்—செத்தாருக்கு ஒப்பாவர். துறந்தார்-நீக்கியவர். துறந்தார் துணை – அழியும் தன்மையைத் துறந்து அழியாப் புகழ்நிலை யெய்தியோருக்கு ஒப்பாவர்.

காந்தியடிகள், சிறப்பாகத் தென்னாப்பிரிக்காவிலும் ஏனைய இடங்களிலும் வெள்ளையர் செய்த மிகப் பெருங் கொடுமைகளை யெல்லாம் பொறுத்துக்கொண்டு சினம் கொள்ளாமல், அவர்கள் மீது வழக்குத் தொடங்கவும் விரும்பாமல், முடிந்தால் நன்மையே செய்ய விரும்பினர். அவருடைய புகழுக்கு இறுதியேது?

எனவே, மிக்கச் சினமுடையான், நிலத்து அறைந்தான் கையைப் போல, தப்பாமல் கேடெய்தி சாதல் தன்மை யடைதலும், பிறர் செய்த பெருந்துன்பங்களையும் பொறுக்கும் தன்மையுடையவன், எண்ணியவற்றை அடைந்து இன்புற்றுப் புகழ் எய்தலும் உறுதி, என்பதை வள்ளுவர் பல உவமைகளால் விளக்கிப் போந்துள்ளார்.

## 17. கூத்தாட்டவைக் குழாம்

உலக உயிர்களின் நிலையாமைக்குப் பல புலவர்கள், பல உவமைகளைக் காட்டிப் போந்துள்ளனர். உயிர்கள் தோன்றுவதும், வளர்வதும் தேய்வதும், மாய்வதுமாக உள்ளன. இந்நிலையாமையை நன்குணராத மக்கள், தாங்கள் எப்பொழுதும் நிலைத்திருப்பவர் போலச் செருக்கித் திரிகின்றனர். 'செல்வத்தின் பயன் ஈதலே' என்பதையும் உணராமல், அரிதில் பெற்ற செல்வத்தை எளியோருக்குக் கொடுத்து உதவாமல் சேர்த்து வைத்து இழக்கின்றனர். ஆதலால், நிலையாமை மூலம் அறத்தை யுணர்த்த, பல புலவர்கள் பலவாறு முயன்றுள்ளனர்.

'உறையூர் முதுகண்ணன் சாத்தனர்' என்ற சங்கப் புலவர், சோழன் நலங்கிள்ளிக்கு அறிவுரையும் வாழ்த்துரையும் கலந்துரைக்கின்றார்:

"தாமரை யிதழ்கள் போன்ற வேற்றுமையில்லாத உயர்ந்த குடியில் பிறந்த பல மன்னருள்ளும், புலவர் பாடும் புகழ் பெற்றோர் மிகச்சிலரேயாக, தாமரையிலை போலப் பயனின்றி மாய்ந்தோர் பலராவர். புலவர் பாடும் புகழ் பெற்றோரே, செய்தற்குரிய நல்வினைகளை முடித்து, வீட்டுலகையடைவர் என யான் கேள்விப் பட்டுள்ளேன். எந்தையாகிய நலங்கிள்ளியே! வளர்ந்த ஒன்று தேய்தலும், தேய்ந்த ஒன்று வளர்தலும், பிறந்த

ஒன்று இறத்தலும், இறந்த ஒன்று பிறத்தலும் ஆகிய உண்மையை அறியாதோரும் அறியும்படியாகக் காட்டி, தேய்பிறையாகவும் வளர்பிறையாகவும் மாறி மாறி, திங்கள் இயங்கிக் கொண்டிருக்கிற இவ்வுலகில், வறுமையால் வரும் யாவருக்கும் கொடுத்துதவுவாயாக!''

சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ...
தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகு மதி... ... ...
... ... ... ... ... ... ... (புறநானூறு-உஎ)

பிறந்தும் வளர்ந்தும் தேய்ந்தும், மாய்ந்தும் மாறி மாறி வருகிற திங்களை உவமையாகக் காட்டி, நிலையாமையை யுணர்த்தி, அறம் செய்யத் தூண்டுகிறார் முதுகண்ணன் சாத்தனார்.

இனி, திருவள்ளுவர் கூறுபவற்றையும் நோக்குவோம்: காலத்தின் வரையறையாக விளங்குகின்ற ஒவ்வொருநாளும் மக்களின் வாழ்நாளைக் குறைத்துக் கொண்டே இருப்பதால், அது நாள் போல் தோற்றமளித்தாலும் உயிரை அறுக்கும் வாளாகும். இவ்வுண்மையை உணராதோரே, 'பொழுது போகவில்லை' யெனக் கூறிக்கொண்டு வீண்பொழுது போக்குவர். 'நேற்று உயிரோடிருந்த ஒருவன் இன்று இல்லை. 'இறந்து

விட்டான்' என்று சொல்லும் அற்ப நிலையாமையையே இவ்வுலகம் பெற்றுள்ளது. உறங்குவது போலச் சாவும், விழிப்பதுபோலப் பிறப்பும் மாறி மாறி நடந்து கொண்டே யிருக்கின்றன.

பறவை வயிற்றிலிருந்து வெளிப்போந்த முட்டை யானது தக்க பருவம் வந்தவுடன், தனித்துக் கிடக்கும் படியாக அதனுள் இருக்கும் குஞ்சு வெளிப்பட்டுப் பறந்து விடுகிறது. அதைப்போல், தாய்வயிற்றிலிருந்து வெளிப்பட்ட உடலானது தனித்துக்கிடக்க, அதனுள் இருந்த உயிரும் திடீரென ஒரு நேரத்தில் நீங்கி விடு கிறது. உடம்புக்கும் உயிருக்கும் உள்ள நட்பு-தொடர்பு- இத்தகையதேயாகும்,

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்பொ டுயிரிடை நட்பு. (குறள்-௩௩௮)

குடம்பை-முட்டை. புள்–பறவை

'குடம்பை' என்பதற்குக் கூடு எனக் கொண்டு பொருள் கூறுவாரும் உளர் "சேக்கை மரன் ஒழியச் சேண் நீங்கு புள்போல" என நாலடியும் உணர்த்து கிறது.

இனி, பொருள் நிலையாமையைப் பற்றிப் பார்ப் போம். நாடகம் நடக்கும் இடத்தில், நாடகம் தொடங்கு வதற்கு ஒரு மணி முன்னுல், கூட்டம் சிறிதும் இருக் காது. சிறிது சிறிதாகக் கூட்டம் வந்து சேர்ந்து கொண்டேயிருக்கும். நாடகம் தொடங்கும் பொழுது கொட்டகை முழுவதும் மக்கள் கூட்டத்தால் நிரம்பி யிருக்கும். நாடகம் முடியும் வரையில் கூட்டம் அப்படியே இருக்கும். நாடகம் முடிந்தஉடன் திடீரென, அவ்வளவு

பெருங் கூட்டமும் கலைந்து, வெறுங்கொட்டகையாகி விடும்.

அதைப்போல, செல்வம் சேர்க்க முயலும் ஒருவனிடம், சிறிது சிறிதாக வந்து சேர்ந்து பெருஞ் செல்வமாகத் திரளும். ஆனால் அவ்வளவு செல்வமும் திடீரென ஒரு காலத்தில் அவனை விட்டு நீங்கி விடும்.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று (குறள் ௩௩௨)

போக்கும்–நீங்குதலும். அது விளிந்தற்று – கூட்டம் கலைவதைப்போல் ஆகும்.

''அகடுற யார் மாட்டும் நில்லாது செல்வம் சகடக்கால் போலவரும்'' *என்பது நாலடி.*

யாக்கையும் செல்வமும் இத்தகைய நிலையாமை பொருந்தியதாலே, நிலையாதவற்றைப் பெற்ற பொழுதே அவை அழிவதற்குள், அவற்றைக்கொண்டு நிலையான அறஞ்செய்து நிலையான புகழைத் தேடிக்கொள்ள வேண்டும், எனத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல் (குறள்-௩௩௩)

அற்கா இயல்பிற்று–நிலையில்லாத் தன்மையது.

அற்குப: நிலையான புகழ்தரும் அறச் செயல்கள்.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். (குறள்-௩௩௫)

நாச்செற்று–நாவையடக்கி.

பேசமுடியாதபடி நாவையடக்கி விக்குள் எழும்படியான மரணநிலை யெய்துவதற்குமுன் அறச்செயல்களை விரைந்து செய்யவேண்டும். அந் நிலை எந்நேரத்தில் வரும் என்று சொல்லவும் இயலாது. 'நேற்றிருந்தான் இன்றில்லை' யெனக்கூடிய பெருமையும், உறங்குவது போல இறப்பு வரக்கூடிய நிலையும் இவ்வுலக இயல்பாகையால், நாள்தோறும் இயன்ற வகையானெல்லாம் அறச்செயல்கள் செய்துகொண்டே இருக்கவேண்டும். அப்படிச் செய்யும் அறச்செயல்களே, உடல் அழியுங் காலத்து, 'அழியாப் புகழ்நிலை' நிறுத்தும் துணையாக உயிருக்கு அமையும்.

அன்றறிவாம் என்னா தறம்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை (குறள்-௩௬)

பொன்றுங்கால் – உடல் அழியுங் காலத்தில்
பொன்றுத்துணை – அழியாத துணையாகும்.

நிலையாமையின் இழிவையும், அறத்தின் மேன்மையையும் உணர்ந்து, அறம் செய்தவன் மூலம் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாய்–அகரத்தைப்போல் முதல்வனாய்த்திகழ அறத்துப்பாலின் உவமை தருமின்பம் வழிகாட்டுமாக.

# 1 தொட்டனைத்தூறும் மணற்கேணி

ஆழிசூழ் அவனி உயிர்களை அறுவகையாகப் பகுத்துள்ளனர் தமிழ்ச் சான்றோர். அவ்வறுவகை உயிர்களுள்ளும் மக்களுயிரே தலைசிறந்ததாகும். அரிதிற் பெற்ற ஆருவது அறிவு ஆகிய பகுத்தறிவே ஏனையுயிரினும் மக்களுயிரைத் தலைசிறந்ததாக்குகின்றது. இப் பகுத்தறிவை நாளும் வளர்ப்பது கல்வியே. உலகம் தோன்றிய காலத்து விலங்கோடு விலங்காய் வாழ்ந்த மனிதன், இன்று திங்கள் மண்டலத்தில் குடியேறுமளவுக்கு வளர்ந்திருக்கிருனென்ருல், அதற்குக் காரணம், அவன் அரிதிற் பெற்ற பகுத்தறிவும் கல்வியுமேயாகும்.

'கல்' என்ற பகுதியும், 'வி' என்ற விகுதியும் சேர்ந்து 'கல்வி' என்ருகும். 'கல்' என்ற சொல்லுக்குத் "தோண்டு" என்பது பொருளாகும். 'கிழங்கு கல்லியெடுத்தல்' என்பதை நோக்குக, எதைத் தோண்டுவது?

நம்முள்ளத்தே, ‘அறிவு’ என்னும் நீர், ‘அறியாமை’ என்னும் மண்ணால் மூடப்பட்டு மறைந்து கிடக்கிறது. அறியாமை என்ற மண்ணைத்தோண்டி அகற்றிவிட்டு, அறிவு என்னும் நீரை வெளிப்படுத்திப் பாய்ச்சினால் தான் ‘நல்வாழ்வு’ என்னும் பயிர் செழிக்கும். ஆழ்ந்து மறைந்து கிடக்கும் அறிவு நீரை வெளிக்கொணரப் பயன்படுவதே கல்வி.

மாரிக்காலத்துப் பெய்த மழை நீரை, மணற்பாங்கான நிலம், தன்னுள்ளே இழுத்துத் தேக்கி வைத்துக் கொண்டு, கோடைக் காலத்தில் கொடுத்து உதவும். மணற்கேணியைத் தோண்டத் தோண்ட நீர் அதிகமாக ஊறும்; எவ்வளவு அதிக ஆழம் தோண்டுகின்றோமோ, அவ்வளவுக்கு அதிக நீர் ஊறும். அப்படி ஊறிய நீரை நாம் இறைக்க இறைக்கக் குறையாமல் ஊறிக் கொண்டேயிருக்கும்.

மணற்கேணியை எளிதில் தோண்டலாம். நீரூற்று அதிகம் பெறலாம். வலிய பாறை நிலத்தை எளிதில் தோண்ட இயலாது. அரும்பாடுபட்டுத் தோண்டினாலும் நீரூற்று குறைவாகவே கிடைக்கும். அதைப்போல,

இலக்கண இலக்கிய வளமற்ற மொழிகளை விட்டு விட்டு, இலக்கண இலக்கிய வளங்கள் நிறைந்து, உயர்தனிச் செம்மொழியாகத் திகழும் தமிழ்போன்ற மொழிகளைக் கற்கக் கற்க அறிவு வளரும். எவ்வளவுக்கு அதிகம் கற்கின்றோமோ, அவ்வளவுக்கு அதிக அறிவு வளரும். கொடுக்கக் கொடுக்கக் குறையும் பொருட் செல்வத்தைப் போலன்றி, இறைக்க இறைக்க ஊறும் நீரைப்போல, பிறருக்குக் கொடுக்கக் கொடுக்க—கற்பிக்கக் கற்பிக்க – அறிவு வளரும்.

ஊறிய நீரை இறைக்காமல் விட்டுவிட்டால், ஊற்றின் அளவும் குறைந்து நீரும் கெட்டுத் தீய நாற்றம் வீசும். அதைப்போல, கற்ற அறிவைப் பிறருக்கு வழங்காமல் தேக்கிவைத்தால், அறிவு வளர்ச்சி குன்றிக் கெட்டுவிடும்.

இவ்வளவு சிறந்த–ஆழ்ந்த–நயமான கருத்துக்களைத் 'தொட்டனைத்தூறும் மணற் கேணி' என்ற உவமையால், தெய்வப் புலவர் திருவள்ளுவர் தெளிவு படுத்துகின்றார்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு (குறள்–௩௯௬)

தொட்டனைத்து–தோண்டும் அளவுக்கு. இக்குறள் எடுத்துக்காட்டுவமை யணியாகும்.

இத்தகைய கல்வியை எப்படிக் கற்கவேண்டும்? கலைபயில் தெளிவும், கட்டுரை வன்மையும், மலைபோன்ற பெருமையும், அகழ்வாரைத் தாங்கும் நிலம்போன்ற பொறுமையும், நடுநிலை கோடாத் துலாக்கோல் போன்ற நேர்மையும், மலர்போன்ற மங்கலமும், குறைவறப்பெற்ற நல்லாசிரியனைச் சார்ந்து, பணிந்து கற்க வேண்டும். ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் "உற்றுழியுதவியும், உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் வேண்டும்" என்று கூறியதை உணர்ந்து, ஆசிரியருக்குத் துன்பக் காலத்தில் உதவியும், வேண்டிய பொருள் கொடுத்தும், பணிந்து கற்றலை வெறுக்காமல் கற்கவேண்டும். இச்சீரிய கருத்தைத் திருவள்ளுவர் உவமை கொண்டு விளக்குவதை நோக்குவோம்.

மிக்க செல்வமும் கொடைப் பண்பும் வாய்ந்த செல்வரை, ஏழைகள் எப்பொழுதும் சூழ்ந்திருப்பர்: எப்படிச் சூழ்ந்திருப்பர்? கைகட்டி, வாய்புதைத்துப் பணிந்து, செல்வர் இடும் கட்டளைகளை நிறைவேற்றக் காத்திருப்பர். அதைப்போல,

நல்லாசிரியனுக்குரிய இலக்கணம் யாவும் அமைந்த நல்லாசிரியனைச் சார்ந்து, பணிந்து, அவருக்கு வேண்டியன செய்து, இடும் கட்டளையை நிறைவேற்றி, அவர் கற்பிக்கக் கற்பவரே உயர்ந்தோராக யாவராலும் மதிக்கப்படுவர். அங்ஙனமின்றி, பொய்யான மானத்திற்கு அஞ்சி, வீண் நாணங்கொண்டு, பணிந்து நிற்றலை வெறுத்துக் கல்லாதவர், மாந்தருள் கடைப்பட்டவராகக் கருதப்பட்டு ஒதுக்கப்படுவர்.

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர் (குறள்–௩௯௫)

உடையார்–செல்வர். இல்லார்–ஏழையர். ஏக்கற்று–பணிந்து தாழ்ந்து.

எனவே உடையார்முன் இல்லார் போல், நல்லாசிரியனுக்குப் பணிந்து கற்று, தொட்டனைத் தூறும் மணற்கேணி போல, சிறந்த மொழியில் உள்ள உயர்ந்த இலக்கண இலக்கியங்களையும், பல்கலைகளையும் மேலும் மேலும் கற்று, அறிவைப் பெருக்கி வையகத்திற்கு வாரி வழங்குவோமாக.

ஓங்குக கல்வி!

## 2. மண்மாண் புனைபாவை

நன்கு விளைகின்ற 'நன்செய்' ஆகிய நிலம் உழவரால் நன்கு மதித்துப் பேணப்பட்டு, உலகோர்க்குப்

பெரும் பயனைத் தரும். விளைவதற்குத் தகுதியற்ற களர் நிலம் எவர்க்கும் எப்பயனும் பயவாமையால், மக்களால் மதிக்கப்படாமல் இழித்து ஒதுக்கப்படும். அதைப்போல,

கல்வியறிவுள்ளவர், அவ்வறிவால் தாமும் பய னெய்தி, பிறருக்கும் பயன்பட்டு, யாவராலும் மதித்துப் போற்றப் படுவர். கல்வியறிவில்லா மூடர், 'உயிருடனிருக் கின்றார்' என்னும் ஒரு தன்மையைத் தவிர, தமக்கும் பயனின்றிப் பிறருக்கும் பயனின்றித் திரிவதால், மாந் தரால் மதிக்கப் படாமல், யாவராலும் எள்ளி யொதுக்கப் படுவர்.

உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர் (குறள் ௪0௬)

மாத்திரையர்—சொல்லுமளவினர்.

முலையிரண்டும் பெண்ணுக் குரிய சிறந்த உறுப்புக் களாகும். ஆடவருக்குக் காதலையூட்டி, பெண்மைக்கே உரித்தான தாய்மைப் பேற்றை நிறைவுறச் செய்வன முலைகளே! இத்தகைய முலையிரண்டும் இல்லாதவளை எந்த ஆணும் காதலித்து மணக்க மாட்டான். ஆதலால், அவளுக்குக் குழந்தைப் பேறும் இல்லை. ஒருக்கால் காதலில்லா வெறும் காமச்சேர்க்கையால், குழந்தை பெற்றாலும், பெற்ற குழந்தைக்குத் தாய்ப்பால் ஊட்ட இயலாதாகையால்-தாய்மைப் பண்பும் நிறைவெய்தாது! ஆதலின் பெண்மையும் நிறைவெய்தாது. பெற்ற குழந் தைக்குத் தன் முலைப்பால் ஊட்டாதவள் எங்ஙனம் பெண்ணாவாள்? அவளிடத்தில் ஏது பெண்மை? ஆதலின் முலையிரண்டுமில்லாதவள் பெண்மையை விரும்ப இயலாது. அப்படி விரும்பின் அது நகைக்கத் தக்கதும், இரங்கத் தக்கதுமாகும்.

அதைப்போல, கல்வியறிவில்லாத ஒருவன், கற்றறிந்தார் நிறைந்த அவையின் கண்ணே, ஒரு பொருளைப் பற்றிப் பேச விரும்புதலும், எள்ளத் தக்கதும், இரங்கத் தக்கதுமாகும். கல்வியறிவின்மையால், எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிய கருத்துக்கள் தெரியாமல், தெரிந்த இரண்டொரு கருத்துக்களையும் தக்கவாறு அமைத்துப் பேசத்தெரியாமல் திண்டாடி, கற்றோரால் எள்ளி ஒதுக்கப்படுவான்.

கல்லாதான் சொற் காமுறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று (குறள்-௪0௨)

காமுறுதல் – விரும்புதல். பெண் – பெண்மை.

முலையிரண்டும் இல்லாதவள் பெண்ணாகாள் போல, கல்லாதவனும் மனிதனாகான். என்னே இவ்வுவமையின் சிறப்பு.

கற்றால் மட்டும் போதாது. கற்கத் தகுந்த நூல்களை ஐயந்திரிபற, நிறையக் கற்கவேண்டும்; கற்றோர் அவைக்கண் ஒன்றைக் குறித்துப் பேசுங்கால் அவையோர் கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் தக்க பதில் கூறுமளவுக்கு அறிவு நிரம்பும்படியாக நிறையக் கற்க வேண்டும். இங்ஙனம் நிறையக் கற்காத ஒருவன், கற்றோர் நிறைந்த அவையில் ஒன்றைக் குறித்துப்பேச எண்ணுவது, சதுரங்கம் ஆடுவதற்குரிய கட்டங்களை வகுத்துக்கொள்ளாமல் சதுரங்கம் ஆட எண்ணித் தாயத்தை உருட்டிக் காயை வைக்க முடியாமல் திண்டாடும் பைத்தியக் காரச் செயலை ஒக்கும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல் (குறள்-௪0௧)

அரங்கு - ஆடுவதற்குரிய கட்டம். வட்டு - தாயக்காய். நூல்-நூலறிவு.

பலநூல்களை நுனிப்புல் மேய்வதைப் போல மேற்போக்காகப் படித்தால் போதாது. ஆழ்ந்து கற்க வேண்டும். நவில்தொறும் நவில்தொறும் நயம் பல பயக்கும் நுண்ணறிவு வாய்ந்த நூல்களை நன்கு ஆராய்ந்து கற்கவேண்டும். மண்பொம்மை செய்வதில் கைதேர்ந்த கலைஞன் ஒருவன் மண்ணினால் மிக்க அழகிய பொம்மை செய்து, அதற்குத்தக்க வண்ணங்களும் தீட்டி மிகச் சிறப்பாக உருவாக்கி யிருக்கின்றான். காண்போர் கண்ணையும், மனத்தையும் கவரும் அளவுக்கு அழகுடன் விளங்குகிறது பொம்மை. உயிர்த் தன்மையில்லாத அவ்வழகிய பொம்மையினால்யாது பயன்? பேசுமா? ஆடுமா? பாடுமா? படிக்குமா? எழுதுமா? இயக்கமற்ற அழகிய பொம்மையினால் எப்பயனுமில்லை!

அதைப்போலவே, நுண்மையும், மாண்பும் நிறைந்த சிறந்த நூல்களை நன்கு ஆராய்ந்து கற்ற அறிவு இல்லாதவனுடைய இளமையும் எழுச்சிமிக்க அழகும் பயனற்றவையாகும்.

> நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
> மண்மாண் புனைபாவை யற்று. (குறள்-சு0எ)

நுழைபுலம்-ஆராய்ந்து கற்ற அறிவு.

“உருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலுமரிது” எனத் திருத்தக்க தேவர் இயம்பியதைப் போல மிக்க அழகு வாய்ந்த உடல் பெறுவது அரிதேயானாலும் நுண்ணிய கல்வியறிவில்லாத அழகால் எப்பயனும்

இல்லையென்பது "மண்மாண் புனைபாவை" என்ற உவமையால் தெற்றென விளங்குகிறது.

## 3. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல்

கல்வி கரையிலவாகவும், கற்பவர் நாள் சிலவாகவும் மெல்ல நினைக்கிற் பிணி பலவாகவும் இருப்பதால், ஒருவர் எல்லா நூல்களையும் கற்றுத் தேற இயலாது, ஒவ்வொருவர் ஒவ்வொருவகை நூலையும், ஒவ்வொருவர் சில வகை நூல்களையும் நன்கு கற்று ஆய்ந்து தேர்ந்திருப்பர். அத்தகையோரின் சொற்பொழிவைக் கேட்பதால், பல நூல்களின் அறிவையும் எளிதில் பெறலாம். அதனுல்தான் 'கற்றலின் கேட்டல் நன்று, என்ற பழமொழியும் தோன்றியது.

இத்தகைய கேள்விச் செல்வமாகிய செவிச் செல்வமே செல்வங்கள் யாவற்றுள்ளும் தலை சிறந்த செல்வம் என்றும், செவியுணவாகிய கேள்வி யறிவுடையார், வேள்வியின் மூலம் பெறும் அவியுணவையுடைய தேவர்க்கு ஒப்பாவர் என்றும், பொய்யாமொழியார் பகருகின்ருர். 'தவலரும் தொல் கேள்வித் தன்மையுடையார், தம்முட் கூடி உரையாடி மகிழும் இன்பம் உம்பர் உலகினும் காண இயலாது'என நாலடி நவில்கிறது. 'கற்றல் கேட்டல் உடையார் பெரியார்' எனத் திருஞான சம்பந்தர் செப்புகின்றனர்.

கற்காவிட்டாலும் கேட்க வேண்டும். அப்படிக் கேட்பதால் உண்டாகும் கேள்வியறிவு, துன்பக் காலத்தில் ஊன்றுகோலாக உதவும். அப்படிக் கேட்கும் போதும் ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்லையே கேட்க வேண்டும். நல்லொழுக்கமிலார் வாய்ச்சொல் தீமையே பயக்கும்.

வழுக்கும் சேற்று நிலத்தில் நடக்கும்போது அடிக் கடி வழுக்கி விழ நேரும். கையில் ஊன்றுகோல் இருந் தால், அதன் உதவியால் வழுக்கினாலும் கீழே விழாமல் நிலைத்து நிற்கவும், எளிதில் நடக்கவும் இயலும். ஊன்று கோலின் உதவியால் வழுக்கு நிலத்தை எளிதில் கடந்து விடலாம். ஊன்று கோலில்லாவிட்டால் வழுக்கி வழுக்கி விழுந்து துன்புறுவதைத் தவிர வேறுவழியில்லை.

அதைப்போல, அறியாமை, வறுமை, வஞ்சனை, பொறாமை முதலிய துன்பங்கள் நிறைந்த வாழ்க்கை யைக் கடப்பவர்க்கு, நல்லொழுக்கம் நிறைந்த அறிஞரின் வாய்ச்சொல், தளர்ச்சியை நீக்கி, ஊக்கமூட்டி, வழி காட்டி, துன்பம் நீக்கி இன்பம் ஊட்டும். ஒழுக்கமுடை யார் வாய்ச்சொல் கேளாதவர், தக்க அறிவின்மையால், பல்வகைத் துன்பங்களுள் மூழ்கி மீள முடியாது பெருந் துன்பம் அடைவர்.

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல் (குறள்-௪௧௫)

இழுக்கல் – வழுக்குதல்.

ஒழுக்கமுடைய நல்லறிஞர் வாய்ச்சொல்லைக் கேட்ட வர், அறிவு நிரம்பி, துன்பம் நீங்கி, இன்பமெய்தி, மறந்தும் தீயவற்றைக் கூறாது, பணிந்த சொல்லினராய் நட்பும் சுற்றமும் பெருக்கி இனிதே வாழ்வர்.

## 4. எரிமுன்னர் வைத்தூறு

கல்வியாலும், கேள்வியாலும் நிரம்பிய அறிவின் பயன், நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து, தீமை நீக்கி நன்மையேற்று வாழ்வதேயாகும். யாவருக்கும் பெருந்தீங்கு பயக்கும் குற்றங்களை யுணர்ந்து நீக்க

வேண்டும். தொட்டால் சுடக்கூடிய நெருப்பைவிட, விட்டுச் சென்றாலும் பின் தொடர்ந்து சுடக்கூடிய தீவினை மிகக் கொடியதன்றோ? அத்தகைய தீவினைகள் யாவை? வீண் செருக்கு, மிக்க சினம், மிக்க காமம், பிறருக்குச் சிறிதும் உதவாத கஞ்சத்தன்மை, நன்மையின் நீங்கியமானம், அளவுகடந்த மகிழ்ச்சி ஆகிய ஆறு பெருங் குற்றங்களுமே ஏனைய குற்றங்களையெல்லாம் பயக்கக்கூடிய பெருந் தீவினைகளாகும்.

மேற்கூறிய அறுவகைக் குற்றங்களில் ஏதேனும் ஒன்றை மிகச் சிறிதளவு-தினையளவு ஒருவன் செய்தாலும், அது பனையளவாக வளர்ந்து அவன் வாழ்க்கையையும் அவனைச் சார்ந்தோர் வாழ்க்கையையுமே அழித்துவிடும். எப்படி?

மிக எளிதில் தீப்பற்றும் பொருள்களுள் வைக்கோல் தலைசிறந்தது. பெரிய வைக்கோற் போர், அதனெதிரே சிறிய தீப்பொரி கிடக்கின்றது. இக் காட்சியைக் காணும் ஒருவன் என்ன செய்யவேண்டும்? மிக விரைந்து அத் தீப்பொரியை அணைத்துவிடவேண்டும். அதற்கு மாறாக, தீப்பொரியும், வைக்கோற் போரும் இணைவதற்கு வழி செய்வானேயானால் என்ன ஆகும்? மிக விரைவில் வைக்கோற் போர் முழுவதும் பற்றி எரிந்து, தினையளவு தீ பனையளவு தீயாகமாறி, அக்கம் பக்கத்தில் உள்ள போர்களிலும், வீடுகளிலும் பற்றிப் பரவி, தக்க வாய்ப்புக் கிடைத்தால், ஊரையே எரித்துச் சாம்பராக்கிப் பெரும் அழிவை உண்டாக்கிவிடும்.

அதைப்போலவேதான் வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கையும் பாழாகும். அறுவகைக் குற்றங்களுள் ஏதேனும் ஒன்று தினையளவு மனத்தில் தோன்றினாலும், அது பனையளவாக மாறுவதற்கு முன்பு விரைந்து நீக்கி,

அக் குற்றம் மீண்டும் தன்பால் நேராவண்ணம், வரு வதற்கு முன்பே அறிந்து காவாதவனது வாழ்க்கையும் அவனைச் சார்ந்தோர் வாழ்க்கையும் கெட்டழிந்துவிடும்.

> வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
> வைத்தூறு போலக் கெடும். (குறள்–சநடு)

எரி – தீ. வைத்தூறு – வைக்கோற் போர்.

போரில் தீப்பற்றியபிறகு அணைப்பது அரிது. அதைப்போல, சிறு குற்றம் பெருங் குற்றமானபின் காப்பது அரிது. அதனுல்தான் சிறிய தீப்பொரியை எளிதில் அணைத்து விடுவதைப்போல, குற்றம் சிறிதாகத் தோன்றும்பொழுதே நீக்கிக் காத்துக்கொள்ள வேண்டும். அப்படிக் காவாதவனது வாழ்க்கையும் அவனைச் சார்ந்தோர் வாழ்க்கையும் தீப்பற்றிய போரும் போரைச் சார்ந்த ஊரும் அழிவதைப்போல எளிதில் அழிந்து விடும். இவ்வளவு நயமான கருத்துக்களையும் "எரி முன்னர் வைத்தூறுபோலக் கெடும்" என்ற உவமை தெற்றென விளக்குகின்றது.

இராவணன் பால் மிக்க காமம் தோன்றியபோதே, அவன் அடக்க முடியாமல் வளர்க்க முயன்ருன்! சீதையைச் சிறைப்பிடித்தான்! போர் மூண்டது! பெரும் அழிவுக்குப்பிறகு தனக்கு வெற்றி கிடைப்பது அரிது என உணர்ந்தும், சிறைப்பிடித்தவளை விட்டுவிடுவது தன்மானத்திற்கு இழுக்கு என மாண்பிறந்த மானத்துடன் போர் செய்து தன் குடியோடு அழிந்தான்!

இராசசூய யாகத்தில் துரியோதனனின் அறியாமையை எண்ணி விளையாட்டாகச் சிரித்தாள் திரௌபதை. அதனுல் துரியோதனன் உள்ளத்தில்

சினந் தோன்றியது! அதை அடக்காமல் வளர்த்துப் பெரும் சினமாக்கிச் சூதுப் போரினால் பங்காளிகளின் நாட்டையும் உரிமையையும் கவர்ந்து எண்ணற்ற தீமைகளை விளைத்துப் பாரதப்போரை உண்டாக்கினான்! முடிவில் துரியோதனன் தன் குடியோடு பாரதப் போரில் வீழ்ந்தான்!

இவைபோல இன்னும் எத்தனையோ இலக்கியச் சான்றுகளை வெளிப்படுத்துகிறது "எரிமுன்னர் வைத்தூறுபோலக் கெடும்" என்ற நயமான உவமை! இவ்வுவமைதரும் இன்பத்தைத் துய்த்து, அறிவுரையை யேற்று, அறுவகைக் குற்றங்களையும் நீக்கி நல்வாழ்வு வாழ்வோமாக.

## 5. முதலிலார்க்கு ஊதியமில்லை

அறுவகைக் குற்றங்களையும் நீக்கி நல்வாழ்வு வாழ வேண்டுமென்றால், பண்பும் அறிவும் மிக்க பெரியோரின் துணை வேண்டும். அத்தகைய பெரியோர், நமக்கு வந்த துன்பத்தை நீக்கி, வரப்போகும் துன்பத்தை வராமல் காப்பர். எனவே பண்பிலும் அறிவிலும் தம்மைவிடப் பெரியவரைத் தேர்ந்து நட்பாக்கித் துணையாகக் கொண்டு, அவர் காட்டுகின்ற வழியில் வாழ்தல் வலிமை யாவற்றுள்ளும் சிறந்த வலிமையாகும். தீய வழியில் செல்லுங்கால் – அறுவகைக் குற்றங்களுள் ஒன்றனாலோ பலவற்றாலோ பீடிக்கப்பட்டக்கால் – இடித்துக் கூறித் திருத்தி நல்வழிப்படுத்துவோர் சான்றோர்.

இத்தகைய பெரியோரைத் துணையாகக்கொண்டு வாழ்பவனை எப் பகைவராலும் கெடுக்க முடியாது. எவ்வளவு பெரிய மன்னனாயினும், இடித்துக் கூறித் திருத்தும் பெரியாரைத் துணையாக ஏற்காது வாழ்ந்தால்

அவன் அறுவகைக் குற்றங்களால் பீடிக்கப்பட்டுக் கெடுக்கக்கூடிய பகைவரில்லாமலேயே விரைவில் கெட்டு அழிந்துவிடுவான்.

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானுங் கெடும். (குறள்-சஃஅ)

இடிப்பாரை – தவறு செய்யுங்கால் இடித்துக் கூறித் திருத்தும் பெரியாரை. ஏமரா – காவலில்லாத.

நால்வகைப் படைகளையும் பெருஞ் செல்வத்தை யும் பெற்ற மன்னனே பெரியார் துணை பெருவிட்டால் கெட்டு அழிந்து விடுவானென்ருல், பெரியார் துணை யில்லாத எளிய மனிதனின் அறிவைப்பற்றிச் சொல்ல வேண்டுமா?

வாணிகத்தால் பொருள் ஈட்ட விரும்புவோருக்குத் தக்க முதல் கையிலிருக்கவேண்டும். ஒரு சமயம் இலாப மும் ஒரு சமயம் இழப்பும் ஏற்படுவது வாணிகத்தின் இயற்கையே. இழப்பு ஏற்படுங்கால் கலங்காமல் மேலும் தொடர்ந்து வாணிகத்தை ஊக்கத்துடன் நடத்துவதற் குரிய பெருமுதல் கையில் இருக்கவேண்டும். அத்தகைய முதல் உடையவர்தான் இடையூறின்றி வாணிகத்தை நடத்திப் பெரும் இலாபம் பெறமுடியும். பெரும் முதல் இல்லாதவர் இலாபமுமின்றி வாழ்க்கையில் பல தொல்லைகளும் பட நேரும். அதைப்போல,

உற்ற துன்பத்தை நீக்கி, உறவேண்டிய துன் பத்தை உருமல் காத்து, தீ வழி செல்லுங்கால், இடித்துக் கூறித் திருத்தும் பெரியாரைத் துணையாகப் பெருத வருக்கு நிலையான வாழ்க்கை இல்லை. பெரியார் துணை பெருதவர் நிலையான வாழ்வையிழந்து பல தொல்லை களுக்கு ஆளாவர்.

முதலிலார்க் கூதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க் கில்லை நிலை. (குறள்-சசக)

மதலையாம் சார்பு-துன்பக்காலத்துத் தாங்கும் பெரியார் துணை. இக்குறள் எடுத்துக் காட்டுவமையணி.

பெரியாரின் நட்பைக் கைவிட்டவருக்கு, பலரோடு பகைத்துக்கொள்வதால் உண்டாகும் தீமைகளை விடப் பல மடங்கு அதிகம் தீமைகள் உண்டாகும். எனவே, அறனறிந்து மூத்த அறிவுடைய பெரியாரின் நட்பைப் பெற்றுப் பெரு வாழ்வு வாழ்வோமாக.

## 6. நிலத்தியல்பால் நீர்திரிந்தற்றாகும்.

ஒரு குடம் பாலை ஒரு துளி நஞ்சு கெடுத்தல்போல், பெரியார் துணையாலாகிய பெரும் பயனைச் சிறியாரோடு கொள்ளும் சிறு நட்பு கெடுத்துவிடும். ஆதலின் அற்பரின் தொடர்பு சிறிதும் ஆகாது. பாலின் பயன் மெதுவாகப் பொறுத்துத்தான் தெரியும். ஆனால் நஞ்சின் தீய பயன் உடனே தெரிந்துவிடும். அதைப்போல நல்லோரின் அறிவுரையைவிட தீயோரின் தீயவுரையைத்தான் மனம் விரைவில் ஏற்கும். ஆதலால் தீயோரின் தொடர்பு சிறிதும் கூடாது.

நல்லோர் நட்பு அரிதாகவும், தீயோர் நட்பு எளிதாகவும் கிடைக்கும். தீயோர் நட்பு இனம்போல் விரைவில் பெருகும்; தீமையையும் விரைவில் அளிக்கும். அதனால்தான் திருவள்ளுவரும் "சிற்றினஞ் சேராமை" என்ற அதிகாரத் தலைப்பைக் கொடுத்துத் தீயோர் தொடர்பின் தீமையை விளக்குகின்றார்.

ஒருவன் எவ்வளவு நல்லவனாக இருப்பினும், அவன் சேரும் இனத்திற்கேற்பவே அவனுடைய அறிவு திரிந்து

அவன் மாறுபடுவான். ஒருவன் பழகுகின்ற இனத்தை-நட்பை-கொண்டே அவன் எத்தகையவனென அறிந்து கொள்ளலாம். அறிவு ஒருவன் மனத்து இயல்புபோல் தோன்றினாலும், அவன் சேர்ந்து பழகுகின்ற இனத்து இயல்பாகவே இருக்கும். இனம் அறிவை மாற்றிவிடும். எப்படி?

மழைநீர் வானத்திலிருக்கும்போது தனக்கு இயல்பான தன்மையைப் பெற்றுள்ளது. அது நிலத்தை அடைந்தவுடன், தன் இயல்புமாறி, சேர்ந்த நிலத்தின் நிறத்தையும் சுவையையும் ஏற்றுத் திரிகிறது. கருமண் நிலத்தைச் சேர்ந்த நீரின் நிறமும் சுவையும் கருமண்ணின் தன்மையையும், செம்மண் நிலத்தைச் சேர்ந்த நீரின்நிறமும் சுவையும் செம்மண்ணின் தன்மையையும், களர் நிலத்தைச்சார்ந்த நீரின்நிறமும் சுவையும் களர் மண்ணின் தன்மையையும் பெற்றுத்திரியும். நிலத்தில் கிணறு தோண்டுங்கால், ஓரிடத்தில் ஊறும் நீர் இனிய நீராகவும், மற்றோரிடத்தில் ஊறும் நீர் உப்பு நீராகவும், பிறிதோரிடத்தில் ஊறும் நீர் பிறிதோர் சுவையாகவும் இருக்கக் காண்கின்றோம். இவை யாவும் நிலத்தைச் சார்வதற்குமுன் வானத்திலிருக்கும்போது ஒரே வகையான சுவையைப் பெற்றவைதானே!

இங்ஙனம் ஒரே தன்மைத்தாகிய தூய மழைநீர், தான் சேர்கின்ற நிலத்திற்கேற்பத் திரிவதைப் போல, மனத்தின்கண் தோன்றிய தூய அறிவும், சேர்கின்ற இனத்திற்கேற்பவே திரியும். நல்லாரோடு சேர்ந்தால், அறிவும் நல்ல தன்மைபெற்று விளக்கமுறும். தீயாரோடு சேர்ந்தால் அறிவும் தீயதன்மைபெற்றுக்கெடும். எனவே இயல்பாகவே நல்ல அறிவுடைய ஒருவன், நல்லாரோடு சேர்ந்து பழகினால் நல்லவனாகவும், சூதாடியுடன்சேர்ந்து

பழகினல் சூதாடியாகவும், குடியனேடு சேர்ந்து பழகினல் குடியனுகவும், கள்ளனேடு சேர்ந்தால் கள்ளனுகவும், கொலைஞனேடுசேர்ந்தால் கொலைஞனுகவும் மாறுவான்.

> நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்(கு)
> இனத்தியல்ப தாகும் அறிவு (குறள்-௫௪௨)

கைகேயி இயல்பாகவே நல்லவள்தான். கணவனுக்குப் போர்க்களத்திலே சென்று கைகொடுத்து உதவும் அளவுக்கும், இராமனைத் தான்பெற்ற மகனுகவே கருதும் அளவுக்கும் மிக நல்லவள்தான். ஆனல், தீயவளாகிய கூனியின் நட்பினல், நல்லறிவு திரிந்து, இராமனைக் காட்டிற்கோட்டி, கணவனின் உயிரைப் பறிக்கும் அளவுக்குக் கொடியவளானுள்.

ஆதலின், தியாரைக் காண்பதுவும், தீயார் சொல் கேட்பதுவும் தீயார் குணங்கள் உரைப்பதுவும், தீயாரோடு இணங்கி இருப்பதுவும் தீதென உணர்ந்து, நல்லாரைக் காண்பதுவும், நல்லார் சொல் கேட்பதுவும் அவருடைய நற்குணங்களை நவில்வதுவும், அவரோடு எஞ்ஞான்றும் இணங்கி வாழ்வதுவும் நன்மைமிகப் பயக்கும் என அறிந்து, தீயோர் நட்பை அறவே ஒதுக்கி, நல்லோர் நட்பை மட்டும் ஏற்று, அதனல் மனத்தூய்மையும் செயல் தூய்மையும் எய்தி, எல்லா நன்மைகளையும் பெற்று, நற்பணியாற்றி நற்புகழ் நாட்டுவோமாக.

## 7. பீலிபெய் சாகாடும் அச்சிறும்.

பெரியார் துணைகொண்டு, சிறியார் தொடர்பு நீக்கி, தனக்கும் பிறர்க்கும் நன்மையே பயக்கக்கூடிய—பிறரால் பழித்தலில்லாத—நல்லசெயல்களையே ஆராய்ந்து செய்தல் வேண்டும். அப்படி நல்ல செயல்களைச் செய்யும்

போதும், அச்செயலின் வலிமையையும் தன் வலிமையையும், தனக்குத் துணைபுரிவார் வலிமையையும், தான் செய்யும் செயலுக்கு இடையூறு பயப்பார் வலிமையையும் நன்கு ஆராய்ந்து, செயல் வெற்றி பெறுமென உறுதியாகத் தெரிந்தால் மட்டுமே செய்ய வேண்டும்.

அங்ஙனம் ஆராய்ந்து, தம்வலிமை மிக்கிருந்தால் துணிந்து செய்யவேண்டும். வலிமை குறைந்திருந்தால் தக்க அளவு பெருக்கிக்கொண்டு செய்ய வேண்டும். அப்படி வலியறிந்து செய்வாருக்கு ஆகாத செயலில்லை. தன் உடன் வலி, பொருள் வலி, துணை வலி முதலியவற்றை ஆராயாமல் ஊக்கத்தால் பெரிய செயலைச் செய்யத் தொடங்கி இடையில் தோல்வியுற்று வருந்தியவர் பலராவர்.

மயிலிறகு பஞ்சுபோல் மிக மென்மையானது. வண்டியின் அச்சு மிகவும் வலிமையானது. ஆயினும் அவ்வலிய அச்சும் குறிப்பிட்ட அளவு சுமைதான் தாங்க முடியும். மிக மெல்லிய மயிலிறகையும் கட்டுக்கட்டாகக் கட்டி அளவுக்குமேல் வண்டியில் ஏற்றினுல், வண்டியின் வலிய அச்சும் முறிந்து விடும்.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின் (குறள்-௪௭௫)

பீலி–மயிலிறகு. சாகாடு–வண்டி.

இவ்வுவமையால், "வலிமைவாய்ந்த ஒருவன் வலிமையற்ற எளிய பலரைப் பகைத்துக்கொண்டால், அவ்வெளிய பலரும் ஒன்று சேர்ந்து வலியவனை எளிதில் வென்று விடுவர்" என்ற உவமேயம் விளக்கப்படுகிறது. குறளில் உவமானம்மட்டும் உள்ளது; உவமேயம் இல்லை.

பிறிதொன்றை உவமானமாகக்கொண்டு, அதன் மூலம், புலவன் மக்களுக்கு உணர்த்த எண்ணிய கருத்தை மறை முகமாக உணர்த்துவதற்குப் "பிறிதுமொழிதல் அணி" என்று பெயர். ஆதலால் இக்குறள் பிறிது மொழிதல் அணியாகும்.

மிக வலிய ஒருவன் எளிய செயல்களை மிகப்பல வாகச் செய்ய முயன்றாலும், தன் பெருவலிமை குன்றி, தோல்வியும் துன்பமுமே அடைவான்.

மிக உயரமான மரம்; நீண்ட கிளைகள்; அம்மரக் கிளையின் நுனிப்பகுதிக்குச் சென்றுவிட்டான் ஒருவன். இப்பொழுது அவனைத் தாங்க முடியாமல் கிளை வளை கின்றது. அதற்குமேலும் அவன் ஏற முயற்சித்தால் என்ன ஆகும்? கிளை முறிந்து அவன் கீழே விழுந்து சாவதைத் தவிர வேறு வழியில்லை.

நுனிக்கொம்பர் ஏறினர் அஃ(து)இறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும் (குறள்-௪௭௬)

இறந்து ஊக்கின்—எல்லைகடந்து முயற்சித்தால்'

இக்குறளும், பகைவன்மேல் போருக்குச் செல்பவன் தன்னால் செல்ல இயலும் எல்லை கடந்து மேலும் செல்ல முயற்சித்தால் தோற்று வீழ்ந்து விடுவான்" என்ற கருத்தை மறைமுகமாக உணர்த்துவதால், பிறிது மொழிதல் அணியாகும்.

எனவே ஒவ்வொருவரும், தத்தம் வலிமையையும் வலிமைக்குரிய எல்லையையும் அறிந்தே செயலாற்ற வேண்டும். வலிமையின் எல்லை கடந்தால் தோல்வியும் துன்பமுமே நேரும்.

வருவாய்க்கேற்ற செலவு செய்து வாழவேண்டும். மிகப் பெரிய வருவாய் உடையவனும் வருவாய்க்குமேல் செலவு செய்வானேயானுல் கடனுளியாகி வீழ்ந்து விடுவான். வருவாய் குறைவாயிருப்பினும், செலவு செய்வது வருவாயின் எல்லையைக் கடக்காமல், வருவாயின் எல்லைக்குக் கீழேயே இருக்குமானுல் துன்பமில்லை.

இங்ஙனம் அளவறிந்து வாழத்தெரியாமல், வருவாய்க்கு மேல் செலவு செய்து வாழ்பவன் வாழ்க்கை, நன்ருக நடப்பது போலவே யாவருக்கும் தோன்றும். உள்ளுக்குள் கடன் வளர்ந்துகொண்டே யிருக்கும். திடீரென்று ஒருநாள் கடன் கொடுத்தோ ரெல்லோரும் ஒன்று சேர்ந்து திருவோட்டை அவன் கையில்கொடுத்து விடுவர்.

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்ருக் கெடும் (குறள்-௪௭௯)

ஆதலின் ஒவ்வொருவரும் தன் உடல் வலி, பொருள்வலி, துணைவலி முதலியவற்றை அறிந்து அவற்றிற்கேற்ப செயலாற்றி வாழக் கற்றுக்கொள்ள வேண்டும். இன்றேல், வண்டியின் இரும்பு அச்சுபோல் மிகப்பெரும் வலிமை படைத்தோரும், சாலமிகுத்துப் பீலிபெய் சாகாட்டின் அச்சுபோல் கெட்டழிவது திண்ணம். ஆதலின் நம்வலிமை யறிந்து எல்லை கடவாது வளமான வாழ்வு வாழ்வோமாக.

## 8. கொக்கொக்க மற்றதன் குத்தொக்க.

வலிமையறிந்து செயலாற்றுவதுடன் தக்க காலமறிந்தும் செயலாற்ற வேண்டும். காலமறிந்து செயலாற்றுதல், செல்வம் நம்மைவிட்டு நீங்காமல் பிணித்து

வைக்கும் கயிறுகும். தக்க காலமறிந்து தக்க கருவி கொண்டு செய்தால் செய்ய முடியாத செயல் யாதும் இல்லை. தக்க இடத்தில் தக்க காலத்தில் செயலாற்றினால், உலகத்தையே பெறக் கருதினும் பெற இயலும். இங்ஙனம் செயலாற்றிய வெள்ளையர், உலகின் பெரும் பகுதியை ஒரு காலத்தில் கைக்கொண்டு ஆண்டன ரன்றோ? எனவே எச்செயலையும் காலமறிந்து செய லாற்றவேண்டும்.

காக்கையைவிடப் பன்மடங்கு வலிமைவாய்ந்த கோட்டானுக்குப் பகலில் கண் தெரியாது. காக்கைக்கு இரவில் கண் தெரியாது. ஆதலால் வலிமை வாய்ந்த கோட்டான் காக்கையை இரவில் துன்புறுத்தும். இரவில் தன்னைத் துன்புறுத்திய வலிமைவாய்ந்த கோட்டானை, அதற்குக் கண் தெரியாத பகலில் காக்கை எளிதில் துன்புறுத்தி வென்றுவிடும். தன்னினும் வலிய கோட் டானை வெல்வதற்குக் காக்கைக்குப் பகற்காலமே ஏற்றது.

அதைப்போலவே, பகைவரை வெல்லக் கருதுவோ ருக்கும் தக்க காலம் வேண்டும். பகைவன்மேற் படை யெடுக்கும் அரசன், தன் படைவீரர்கள் அதிக வெப்பத் தாலும், அதிகக் குளிராலும், அதிக மழையாலும், பசி யாலும் வருந்தாவண்ணம், நல்லநீரும் தக்க உணவும் கிடைக்கும் காலமும், வெப்பமும் குளிர்ச்சியும் அளவொத்து, நோய்செய்யாத காலமும், பகைவருக்கு ஒத்துவராத காலமும், அறிந்து படையெடுத்தால், வலிய பகைவரையும் எளிதில் வென்றுவிடலாம்.

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது (குறள்-சஅக)

கூகை-கோட்டான் இகல்-பகை.

இதே கருத்தை, "ஒரு காக்கை காலமறிந்து பல கூகைகளை வெல்லுவதைப்போல, இடமும் காலமும் அறிந்து செயலாற்றும் அறிவுடையார்க்குச் செய்ய முடியாத செயலில்லை" எனத் திருத்தக்கத் தேவர் சிந்தாமணியில் செப்புகின்றார்.

> இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார்
> மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டோ
> கடந்திடைக் காக்கை யொன்றே ஆயிரங் கோடி கூகை
> இடந்திடை யழுங்கச் சென்றங் கின்னுயிர் செகுத்ததன்றே,

கடத்திடை—காட்டிடை. செகுத்தது—அழித்தது.

ஆட்டுக்கிடாய்ச் சண்டையைப் பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கும்: இரண்டு கிடாக்கள் ஒன்றோடு ஒன்று முட்டிக்கொண்டு போரிடும். பின் கால்களை நிலத்தில் நன்றாக ஊன்றி, முன்கால்களை மடக்கித் தூக்கிக் கொண்டு, "மடக் மடக்" என முட்டி இடித்துக்கொண்டு போரிடும். இப்படிப் போரிடும்போது, திடீரென ஒரு கிடா பின்னோக்கிப் பின்புறமாகவே செல்லும். அப்படிப் பின்னோக்கிச் செல்வது சண்டைக்கு அஞ்சியன்று; பல அடி தூரம் பின்னோக்கிச் சென்று, அங்கிருந்து விரைவாக ஓடிவந்து வேகமாகவும் வலிமையாகவும் மற்றக் கிடாயின் தலையில் இடித்து மோதும்.

அதைப் போல, வலிமையும் ஊக்கமும் மிக்க அரசன் போரில் ஒரு முறை தோற்றுவிட்டாலும், பகைவரை வெல்லுவதற்குரிய காலம் வரும்வரையில் பின் தங்கி பொறுத்திருந்து, தக்க காலம் வந்தவுடன் படை யெடுத்து வென்றுவிடுவான். ஆதலின் தக்க காலம் வரும்வரையில் ஊக்கமுடைய அரசன் ஒடுங்கியிருப்பது, வலிவுடன் இடிப்பதற்குக் கிடா பின்னோக்கிச் செல்லு வதைப் போன்றதாகும்.

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து (குறள் ௪௮௬)

பொருதகர் – போர் செய்யும் கிடா.

தக்க காலம் வரும் வரையில் காத்திருந்து தக்க காலம் வந்தவுடன் விரைந்து செய்து முடிக்கவேண்டும். இதற்கும் திருவள்ளுவர் ஒரு சிறந்த உவமையைக் கூறுகின்றார்.

மீனாகிய இரையைத் தேடிச்செல்லும் கொக்கு, உயிரற்ற கொக்குபோல் நீர்நிலையில் அமைதியாக, ஆடாமல் அசையாமல், கண்களைப் பாதி மூடிய நிலையில் அரைப் பார்வையில் இருக்கும். அதன் எதிரில் – காலடியில் – பல மீன்கள் துள்ளித் திரிந்துகொண்டும் ஓடிக்கொண்டும் இருக்கும். மிகச் சிறிய மீன்கள் பல ஓடும். மிகப் பெரிய மீன்களும் பல ஓடும். கொக்கு அமைதியாகவே இருக்கும். கொக்கின் தொண்டை கொள்ளுமளவிற்குத் தக்க மீன் வரும்வரையில் காத்திருக்கும். தக்க மீன் வந்தவுடன், அம் மீன் மறைவதற்குள்ளாக, கொக்கு விரைந்து தன் மூக்கினால் குத்தி விழுங்கிவிடும்.

அதைப்போல வினைக்குரிய காலம் வரும்வரையில், உரிய பொருள்களைச் சேகரித்துக்கொண்டு, அமைதியாக, இருப்பது தெரியாமல் இருக்க வேண்டும். உரிய காலம் வந்தவுடன், அக்காலம் முடிவதற்குள் விரைந்து செய்து முடித்துவிடவேண்டும்.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து (குறள்-௪௯0)

கூம்பும் பருவத்து – உரிய காலம் அல்லாதபோது.
சீர்த்த இடத்து – உரியகாலம் வாய்த்தபோது.

இதே உவமையைத் தமிழ் மூதாட்டி ஔவையார் பயன்படுத்தும் விதத்தை நோக்குவோம்.

நீர் மடையில் நிற்கும் கொக்கு, ஓடுகின்ற சிறு மீன்களை ஓடவிட்டு, தனக்குத்தக்க மீன் வரும் வரையில் அமைதியாக இருக்கும். அதைப்போல, அறிவும் வலிமையும் மிக்கோர் தக்க காலம் வரும்வரையில் அமைதியாகக் காத்திருப்பர். அவருடைய அடக்கத்தைக் கண்டு, அறிவில்லாதவரென்றெண்ணி அவரை வெல்லக் கருதல் கூடாது.

அடக்க முடையார் அறிவிலா ரென்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா – மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு.

இவ்வுவமைகளின் திறத்தால் காலத்தின் அருமை அறிந்து ஒவ்வொரு வினையையும் தக்க காலமறிந்து செய்து வெற்றி யெய்தி வாழ்வோமாக.

## 9. நரியடும்

வலிமையும் காலமும் அறிதலோடு, தக்க இடத்தையும் அறிந்து செயலாற்றவேண்டும். மிக்க வலிமை வாய்ந்த அரசரும் தன் வலிமை செல்லக்கூடிய தன் அரணைச் சார்ந்து நின்று போர் செய்தலே நன்மை பல பயப்பதாகும். தக்க இடமறிந்து தம்மைக் காத்துப் போர் செய்யின் எளியவரும் வலியவரை எளிதில் வென்றுவிடலாம். வலியவரும் தம்மாற்றல் செல்லாத– பகைவராற்றல் செல்லக்கூடிய இடத்திற்குச் சென்று போர் செய்தால் எளியவரிடம் எளிதில் தோற்றுவிடுவார். இக் கருத்தைத் திருவள்ளுவர் "பிறிதுமொழிதல் அணி"

மூலம் மூன்று குறள்களால் தெளிவுபடுத்துகின்றார். அவற்றை நோக்குவோம்.

நீர்வாழ் பிராணிகளுள் முதலை மிகவும் வலிமை வாய்ந்தது. அதற்குரிய இடமாகிய ஆழமான நீர் நிலையில் அது இருக்கும்போது யானைபோன்ற பெரிய வலிய விலங்கு நீர் குடிக்கச்சென்று அதனிடம் சிக்கிக்கொண்டால், முதலை எளிதில் வென்றுவிடும். ஆனால், அதே முதலை, தனக்குரிய இடமாகிய நீர்நிலையை நீங்கி நிலப்பகுதிக்கு வந்துவிட்டால், தன்னாற்றலும் இயக்கமும் நிலத்தில் செல்லாதாகையால், நரி போன்ற சிறிய பிராணியும் அதை எளிதில் கொன்றுவிடும்.

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (குறள் ௪௯௫)

நெடும்புனல் – ஆழமான நீர் நிலை. அடும் – கொல்லும்.

இக்குறள், "படையெடுக்கும் அரசன், பகைவனுடைய வலிமை செல்லாத – தன் வலிமை செல்லக் கூடிய – தனக்குரிய இடத்தில் நின்று போரிட்டால், தன்னினும் வலிய பகைவனையும் எளிதில் வென்றுவிடுவான்," என்றும், "தன் வலிமை செல்லாத இடத்தில் சென்று போரிட்டால், தன்னினும் எளியவனிடமும் எளிதில் தோற்றுவிடுவான்" என்றும், உணர்த்துவதால் பிறிது மொழிதல் அணியாகும்.

வலிமையான உருளைகளைப் பெற்று நிலத்தின்கண் எளிதில் ஓடவல்ல நெடிய வலியதேர், கடலில் ஓட முடியாமல் மூழ்கிவிடும். கடலில் ஓடும் ஆற்றல் பொருந்திய கப்பல், படகு முதலியவை நிலத்தில் ஓட இயலாமல் நின்றுவிடும்.

கடலோடா கால்வல் நெடுந்தேர்; கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. (குறள்-சகக)

கால்வல் – வலிய உருளை. நாவாய் – கப்பல், படகு.

"பகைவரை வெல்லும் இடமறிந்து அவ்விடத்திற்கு ஏற்ற கருவிகளைக்கொண்டு போர் செய்தால் எளிதில் வெல்லலாம்'' என உணர்த்துவதால், இக்குறளும் பிறிது மொழிதல் அணியே.

வலிமை வாய்ந்த வேல் வீரர் பலரை அஞ்சாமல் எதிர்த்துக் குத்திக்கொன்ற வலிய களிறு (ஆண் யானை) ஒன்று, அது தன் பாகனுக்கும் அடங்காமல் வெறி கொண்டு திரிந்து எதிர்ப்பட்ட வேல் வீரரை மருப்பினால் குத்தி வீழ்த்தி முடிவில், கால் பதியும்படியான சேற்று நிலத்தில் போய்ச் சிக்கிக்கொள்ளுகிறது. ஒரு காலைத் தூக்குவதற்கு ஒரு காலை ஊன்றி முயற்சிக்கும்போது, ஊன்றிய கால் நன்றாகச் சேற்றில் பதிந்துவிடுகிறது. எனவே தன்னாற்றல் சேற்று நிலத்தில் செல்லவில்லை. இப்பொழுது ஒரு சிறு நரியும் அக்களிற்றின்மீது தாவி உட்கார்ந்து சிறிது சிறிதாகக் கடித்துக் கொன்றுவிடும்.

காலாழ் களரின் நரியடும் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு. (குறள்-௫௦0)

களரின் – சேற்று நிலத்தில். கண்ணஞ்சா – பாகனுக்கு அடங்காத. வேலாள் – வேல் வீரர். களிறு–ஆண்யானை.

"ஆண்மையும் பெருமையும் பொருந்திய மிக வலிய வரும், தம் வலிமை செல்லாத இடத்திற்குச் சென்று விட்டால், அவற்றால் பயனின்றி, மிக எளியராலும் வெல்லப்பட்டு அழிவர்'' என்ற கருத்தை உணர்த்து வதால், இக்குறளும் பிறிது மொழிதல் அணியே.

ஆதலின் எத்தகைய வலியராயினும் எளியராயினும் தத்தம் ஆற்றல் செல்லத்தக்க இடமும், எடுத்துக் கொண்ட செயலுக்கேற்ற இடமும் அறிந்து அவ்விடங் களில் செயலாற்றினுல்தான் வெற்றிபெற இயலும்.

## 10. காக்கை கரவா கரைந்துண்ணும்.

அறியவேண்டியவற்றை அறிந்தும், தெரிய வேண் டியவற்றைத் தெரிந்தும், செய்ய வேண்டியவற்றைச் செய்தும் பெரும் பொருள் ஈட்டியவன், பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதலின் சிறப்பினைத் தெரிந்து ஏற்று வாழ் தல் வேண்டும். ‘‘செல்வத்துப் பயனே ஈதல்’’ என்ருர் நக்கீரர். ‘‘துய்ப்போம் எனினே தப்புந பலவே’’ என் றும் எச்சரித்தார்.

‘‘செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல்’’ என்ற முதுமொழியை ஓர்ந்து சுற்றத்தினருக்கும் கொடுத்து உதவுதல் வேண்டும். இன்பக்காலத்தும் துன்பக் காலத்தும் தன்னை விட்டு நீங்காது உள்ளப் பற்றுடன் சுற்றிச் சூழ்ந்திருப்போரே சுற்றத்தினராவர். அத்தகைய உண்மையான சுற்றத்தினர், தன்னை எப் பொழுதும் சுற்றிச் சூழ்ந்திருக்கும்படியாக, அன்புகாட்டி, இன்சொல் இயற்றி, வேண்டுவன கொடுத்து வாழ்தலே செல்வம் பெற்றதன் பெரும் பயனுகும் என்று பெரு நாவலர் பகர்கின்ருர். கொடையும் இன்சொல்லும் உடையவன் அடுக்கிய சுற்றத்தால் சுற்றப்படுவான் என்றும் இயம்புகின்ருர். சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகு பவனின் செல்வம் மேன்மேலும் ஓங்கும். செல்வம் குறைந்து துன்பக் காலம் உற்ருலும் உண்மையான சுற்றத்தினரின் அன்பினுலும் முயற்சியினுலும் மேலும் செல்வம் சேர்ந்து துன்பம் நீங்கும். இன்பம் ஓங்கும்.

சுற்றத்தைப் பேணுதவன் செல்வம் விரைவில் அழிந்துவிடும். எப்படி அழியும்? எதைப் போல அழியும்? கரையில்லாத குளப்பரப்பு ஒன்று உள்ளது. பெருமழை பொழிந்து, அக்குளம் நீரால் நிறைந்து வழிகின்றது. மேலும் மழை பொழிகின்றது. என்ன ஆகும்? தக்க கரையில்லாக் காரணத்தால், நீர் வழிந்து வெளியேறும் போது, இருக்கின்ற மண்ணையும் அரித்துக்கொண்டு சென்று, குளத்தைப் பாழ்படுத்தி எல்லா நீரும் வெளி யேறிவிடும். எவ்வளவு மழை பொழிந்தாலும் குளத் திலே நீர் தங்காது. மழை நின்றவுடன் குளம் தூர்ந்து வறண்டுவிடும்.

அதைப்போலவே, அன்புகாட்டி, இன்சொல் சொல்லி, வேண்டியன கொடுத்து, சுற்றத்தினருடன் மனங் கலந்து உறவாடாதவன் செல்வமும், தக்க காவல் இல்லாமையால், கயவராலும் கள்வராலும் கவரப்பட்டு, அவன் வாழ்க்கையும் பாழடைந்துவிடும்.

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. (குறள்-௫௨௩)

அளவளாவு-மனங்கலந்து உறவாடுதல். குளவளா—குளப்பரப்பு. கோடு-கரை.

இவ்வுவமையால், "வலிவான கரையமைந்த குளத்தில் நிறைந்த நீரானது வழிந்ததுபோக, எஞ்சிய நீர் வலிய கரையால் பாதுகாக்கப்பட்டுக் குளத்திலேயே தேங்கி நிற்கும். அதைப்போல, சுற்றத்தினருடன் நெஞ்சு கலந்து உறவாடுபவனுடைய செல்வமும், பிறரால் கவரப்படாமல் சுற்றத்தினரால் காக்கப்பட்டு, அவன் வாழ்வும் செழிக்கும்," என்ற மற்ரெரு சீரிய உவமைக் கருத்தையும் தெளிவு படுத்தும் வள்ளுவரின் திறம் போற்றுதற் குரியதன்ரே!

சுற்றத்தினரை ஓம்புதலுடன் வறியவர்க்கும் ஈந்து உதவுதல் வேண்டும். அஃறிணை உயிராகிய காக்கையின் வாழ்க்கை உயர்திணை மக்களுக்குச் சிறந்த நீதியை உணர்த்துகின்றது. மக்களினத்தில் பட்டினிச்சாவு நிகழ்வதைப்போல, காக்கையினத்தில் பட்டினிச்சாவு நிகழ்வதில்லை! மக்களினத்தில் உணவுப் பெருக்கால் கொழுத்த உடலும், உணவுக் குறைவால் மெலிந்த உடலும் இருப்பனபோல் காக்கையினத்தில் இல்லை! ஏன்?

கிடைத்ததைப் பகுத்துண்ணும் பண்பு காக்கை இனத்திற்கெல்லாம் பொதுவாக இருப்பதைப்போல் மக்களினத்தில் எல்லோருக்கும் அமையவில்லை. அதனால் தான், ஒருபால் செல்வச் செழிப்பும், ஒருபால் வறுமை யும், ஒருபால் செல்வர்கள்கூடி அறுசுவையமுதுண்டு களித்தலும், ஒருபால் ஏழைமக்கள் நாய்களுடன்கூடி எச்சில் இலைக்கு அடித்துக்கொள்ளும் போராட்டமும், பஞ்சமும், பட்டினியும், புரட்சியும், போரும், பூசலும், கொலையும், நிகழ்கின்றன. இவ்விழிநிலை நீங்கவே, தெய்வப் புலவர் திருவள்ளுவர் காக்கையின் வாழ்வை உவமையாகக் காட்டிச் சிறந்த நீதியுரைக்கின்றார்.

எந்த ஒரு காக்கைக்கு, எந்த ஒரு இடத்தில், எவ் வளவு குறைந்த உணவு கிடைத்தாலும், அதைத் தான் மட்டும் உண்ண விரும்பாமல் "காகா" எனக் கரைந்து தன் இனத்தையும் கூவியழைத்துப் பகுத்துண்ணும். இப்படி ஒவ்வொரு காக்கையும் தவறாமல் செய்வதால், எல்லாக் காக்கைகளுக்கும் எல்லாவிடங்களிலும் உண வில் பங்கு கிடைத்துக் காக்கை இன முழுவதும் செழித்து வாழ்கின்றது. எல்லாக் காக்கைகளும் வளமான உடலைப் பெற்றிருக்கின்றன.

இத்தகைய காக்கை யினத்தைப்போன்ற பகுத்துண்ணும் பண்புடையவருக்கு எல்லா நன்மைகளும் வந்தெய்தும்! பகை நீங்கி நட்பும் சுற்றமும் பெருகும்! அவற்றின் உதவியால் செல்வம் செழிக்கும்! பகுத்துண்ணும் அறமும், ஈத்துவக்கும் இன்பமும், ஈகைப் புகழும் எய்தலால், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகை உறுதிப் பொருளும் எளிதில் கிட்டும். அதனால்தான்,

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. (குறள்-௫௨௭)

என்றார் வள்ளுவப் பெருந்தகையார்.

கரவா – மறைக்காமல். அன்ன நீரார்க்கு- அத்தகைய தன்மை உடையவருக்கு. ஆக்கம் – நன்மைகள்.

"காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்" என்றார் தாயுமானவரும். சங்க காலத்தில் ஒரு பெண் புலவர், காக்கையின் பகுத்துண்ணும் பண்பைப் புகழ்ந்து பாடிக் "காக்கைப் பாடினியார்" என்ற புகழையும் பெற்றார். காக்கையினம் உணர்த்தும் இந் நீதியை மக்களினம் ஏற்றுவாழும் நாளே, பஞ்சமும் பட்டினியும் ஒழிந்து பொய்யும் களவும் கொலையும் அழிந்து போரும் பூசலும் நீங்கி, இன்பமும் அமைதியும் ஓங்கும் நாளாகும்!

## 11. அச்சம் உடையார்க்கு அரணில்லை

மறதி என்னும் தன்மை மிகக்கொடியது. அது மக்களுக்குப் பல்வேறு வகைகளில் தீமை பயக்கிறது. சென்ற இடத்தில் கைப்பொருளை வைத்து மறந்துவிட்டு வந்துவிடுவர். பின்னர் நினைத்துக்கொண்டு சென்று

பார்த்தால் அங்குப் பொருள் இருக்காது! யாராவது எடுத்துச் சென்றிருப்பர். பொருளுக்குடையவர் மறதியால் பொருளையிழந்து வருந்துவர். சிலர் முக்கிய பொருளை வீட்டில் வைத்த இடம் நினைவின்றி, நாளெல்லாம் தேடித்தேடி நேரத்தை வீண் போக்குவர். அவசரமாக வெளியில் வண்டிக்குச் செல்லவேண்டிய சிலர் கையில் எடுத்த சில்லரையையோ அல்லது வேறு முக்கிய பொருளையோ மடியில் வைத்துக்கொண்டு, சட்டை மாட்டித் தலை சீவுவதற்குள் மடியில் வைத்திருப்பதை மறந்து, வீடெல்லாம் தேடி, வருந்திக் களைத்து, முடிவில் மடியில் இருப்பதையுணர்ந்து கையை யுதறிக் கொண்டு ஓடுவர்! அதற்குள்ளாக வண்டிக்குரிய காலம் ஓடிவிட, வண்டியும் ஓடிவிடும்!

சில மாணவர்கள் படித்த பாடங்களை மறந்துவிட்டு, தேர்வில் "சிந்தாமணி இயற்றிய இளங்கோவடிகளின் தம்பி வீர சிவாஜி," என்றும், "அரிச்சந்திரன் மனைவி சீதை" என்றும், "சர். சி. வி. இராமன் என்ற சிறந்த அமெரிக்க விஞ்ஞானி சினிமாவைக் கண்டுபிடித்தார்" என்றும், "திருவள்ளுவர் என்னும் வடமொழிப் புலவர் கம்பராமாயணத்தை இயற்றினர்" என்றும், பொருத்தமற்றவைகளையெல்லாம் எழுதி வைத்துவிட்டு வந்து, தோல்வியடைந்து வருந்துவர்.

தேர்தலில் நிற்கும் சிலர், மக்களுக்குப் பல நன்மைகளைச் செய்வதாக உறுதிமொழிகள் கொடுத்து, அவற்ருல் எண்ணற்ற ஓட்டுகளைப்பெற்று வென்று சட்டமன்றத்திற்குச் சென்றவுடன், மிக்க மகிழ்ச்சியால், மக்களுக்குக்கொடுத்த வாக்குறுதிகளை மறந்து, செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல், தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாலேயே தூற்றப்படுவர்! என்னே மறதியின்

கொடுமை! இத்தகைய மறதி அளவு கடந்த சினத்தை விடப் பெருந்தீங்கு பயக்கும். இம் மறதியின் பெருங் கொடுமையை இரு உவமைகளால் வள்ளுவர் விளக்குந் திறத்தை நோக்குவோம்.

உலகில் கொடியவற்றுள் எல்லாம் கொடியது வறுமைத் துன்பம். “கொடிது கொடிது வறுமை கொடிது” என்ருர் தமிழ் மூதாட்டியராகிய ஔவையார். “இன்மையின் இன்மையே இன்னுதது” என்றும், “இன்மையென ஒரு பாவி” என்றும் முதற் பாவலர் மொழிந்தார். “பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்” என்பது முது மொழி. வறுமையெனும் தாய்பெற்றுச் சீராட்டி வளர்த்த குழந்தைதானே பசி. புலிக்குப் பிறந்தது பூனையாகுமா? இப்பசி என்ன செய்யும்? குடிப் பிறப்பு, உயர்வு, கல்வி, அறிவு, நாணம், வாய்மை, தூய்மை அழகு முதலியவற்றையழித்து, மானமிழந்து பிச்சை எடுக்கவும் செய்யும்! அதனுல்தான் சீத்தலைச் சாத்தனுர் என்னும் தண்டமிழ்ப் புலவர் தாம் இயற்றிய மணிமேகலையில்,

“குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூணணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி”

என்று பாடினுர்.

இத்தகைய பசிப்பிணியென்னும் பாவியையீன்ற வறுமையென்னும் பாவி – நாள்தோறும் பிச்சையெடுத்துண்ணும் படியான வறுமை மனிதனுடைய தூய அறிவையே கொன்று விடும்.

அதைப்போல, மறதி என்னும் கொடும்பாவியும், மனிதனுக்குப் பல தீமைகளைச்செய்து, முடிவில் அவன் புகழையே கொன்றழித்துவிடும்.

பொச்சாப்புக் கொல்லும் புகழை; அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு (குறள்-௫௩௨)

பொச்சாப்பு – மறதி. நிச்ச நிரப்பு – நாள் தோறும் பிச்சையெடுத்து வருந்தும்படியான வறுமை.

ஆதலின் கொடுத்த உறுதிமொழிகளையும், செய்ய வேண்டிய கடமைகளையும் மறந்து வாழ்பவருக்குப் புகழே இல்லை, என்பது எல்லா அறிஞர்களும் ஒப்புக் கொண்ட உண்மை ஆகும்.

காட்டரண், மலையரண், மதிலரண் முதலிய சிறந்த காவல்களைப் பெற்றிருக்கின்றான் ஒரு மன்னன்! ஆயினும் தன் நாட்டின்மீது படையெடுத்துவரும் பகைவனை யெதிர்த்துப் போரிடும் துணிவில்லை! துணிவின்றி அச்சம் மிகக்கொண்ட மன்னன் படை திரட்டிப் போர் செய்யாமல், அரணை அடைத்துக்கொண்டு உள்ளே பதுங்கியிருக்கின்றான். பகைவன் படை எளிதில் அரண்களைத் தகர்த்து, எதிர்ப்பின்றி உள்ளே நுழைந்து பதுங்கியிருக்கும் மன்னனைக் கைது செய்கிறது. அச்சம் மிக்க மன்னனுக்கு அரண்களால் யாது பயன்?

குண்டுவெடிக்கப்பட்ட இரட்டைக்குழாய்த்துப்பாக்கியுடன் ஒருவன் காட்டு வழியே செல்லுகின்றான். தூரத்தே புலியொன்று பசியுடன் அவனை நோக்கி வருகிறது! உள்ளத்தில் துணிவு இருந்தால் எளிதில் புலியைச் சுட்டு வீழ்த்திவிட்டுத் தன்னுயிரையும் காத்துக் கொள்ளலாம். துப்பாக்கியாகிய அரணிருந்தும் துணி

வில்லாமையால் அச்சம் மிகக்கொண்டு புலியடிப்தற்குள் கிலிபிடித்து துப்பாக்கியையும் நழுவவிட்டு, நடுங்கிக் கொண்டு நிற்கிருன்! புலியும் அவன்மீது பாய்ந்து கொன்று தின்று விடுகிறது! ஆதலால் நல்ல காவலிருந் தும் அச்சமுடையாருக்கு அக் காவலால் பயனில்லை. அதைப்போல,

பலவகையான செல்வங்கள் பெற்றிருப்பாராயினும், அவரிடம் மறதியென்னும் கொடும்பாவி யிருக்குமே யானுல், பெற்ற செல்வங்களால் ஒரு நன்மையும் உண்டாகாது,

அச்சம் உடையார்க் கரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. (குறள்-ருஙச)

அரண் – காவல். ஆங்கு – அதைப்போல.

ஆதலின் அளவற்ற மகிழ்ச்சி காரணமாகவோ, சோம்பல் காரணமாகவோ, நம்மனத்தே மறதியென்னும் கொடுமைக்கு இடம் கொடாமல் நினைவாற்றலைப் பெருக்கிச் செய்வன திருந்தச் செய்து எல்லா நன்மை களும் புகழும் எய்துவோமாக.

## 12. பைங்கூழ் களை கட்டல்

நாட்டையாளுந் தலைவன், இறைவன், மன்னன், காவலன், அரசன், வேந்தன் என்று பல பெயர்களால் தமிழ் இலக்கியங்களில் குறிக்கப்படுகிருன். இறை யென்ற் சொல் தங்குதல், தலைமை என்ற இரு பொருள் களையும் குறிக்கும். உலக மக்கள் உள்ளத்தெல்லாம் தங்கி உலக உயிர்கள் யாவுக்கும் தலைமை தாங்கும் ஈசனை 'இறைவன்' என்பதுபோல, செங்கோலாட்சி

யால் நாட்டு மக்கள் உள்ளத்தெல்லாம் தங்கி நாட்டுக்குத் தலைமை தாங்குபவனையும் இறைவன் என்றனர் தமிழ்ச் சான்றோர்.

'மன்' என்ற சொல் நிலைபேறு என்னும் பொருளுடையதாகையால், நாட்டின் இன்பத்தை நிலைபெறச் செய்பவனும் 'மன்னன்' எனப்பட்டான். நாட்டுக்குத் துன்பம் நேராமல் நல்லாட்சியால் காப்போனுகையால் 'காவலன்' எனவும் கூறப்பட்டான். தீயோரை வேக வைக்கும் நெருப்புப் போன்றவனுகையால் 'வேந்தன்' எனப்பட்டான் போலும்.

இத்தனைச் சிறப்புப் பெயர்களுக்கும் உரிய தலைவன், மக்கள் நலனே தன்னலனெனக் கருதி, முறை தவருத நல்லாட்சியால் நாட்டைக் காப்பானேயானுல், அவனே மக்களின் கண்கண்ட தெய்வமாவான்.

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். (குறள்-ுஅஅ)

என்ருர் தெய்வப் புலவர். 'எல்லோர்க்கும் தெய்வம் இலைமுகப் பைம்பூண் இறை' என்ருர் குமரகுருபரர். 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' என்று நம்மாழ்வார் திருவாய் மொழிந்தருளினர்.

நல்லாட்சி செய்யும் மன்னனை நாட்டு மக்களுக்கு உயிராகச் சங்ககால மக்களும் புலவர்களும் மதித்துப் போற்றினர்.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்.

என்று மொழிந்தார் மோசிகீரனுர் என்னும் சங்கப்புலவர்.

அறநெறி தவருச் செங்கோல் மன்னன் உறங்கினுலும் அவனது புகழொளியே நாட்டை நலமுடன் காக்கும் என்ற கருத்தில் திருத்தக்கதேவர்,

உறங்குமாயினும் மன்னவன் தன்னொளி
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்.

என்று சிந்தாமணியில் செப்பினுர்.

தயரதனின் ஆட்சிச் சிறப்பினைக் கூற வந்த கம்பர் "உயிரெலாம் உறைவதோர் உடலுமாயினுன்" என்ற அடியால், நாடு உயிரெனவும் மன்னன் உடல் எனவும் உணர்த்தினுர்.

எவர் எங்ஙனம் கூறினுலும் நாட்டுக்கும் மன்னனுக்கும் உள்ள தொடர்பு, உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு போன்றதென அறிதல் வேண்டும். உயிரின்றி உடலில்லை! உடலின்றி உயிரில்லை! நாடின்றி நாட்டு மக்களின்றி – மன்னனில்லை! மன்னனின்றி நாடில்லை.

குடிமக்களைத் தழுவிக் கோலோச்சுகின்ற மாநில மன்னனின் முறைதவருச் செயலுக்கு வள்ளுவர் கூறும் உவமையைக் காண்போம்.

உண்டி கொடுத்தோரே உயிர்கொடுத்தோராவார். உலக உயிர்களுக்கு உணவூட்டி வாழ்விப்போர் உழவரே. உழவர் நிலத்திற்கு நீர் பாய்ச்சி, ஏர்கொண்டுழுது, வயலைச் சேருக்கிப் பரம்படித்து, வரப்புக்கட்டி, தழை மிதித்து, நெற்பயிர் நட்டு, எருவிட்டு, நீர் பாய்ச்சி வருவர். இவ்வளவு முயற்சிகளுக்குப்பிறகு நெற்பயிர் வளரும்போது, வேண்டாத களைப் புற்களும் கூடவே வளரும். நெற்பயிர் செழித்து வளரவேண்டுமென்ருல்,

உழவர் இரக்கமின்றி வேண்டாத களைகளைப்பறித்துச் சேற்றில்பதித்தோ, மேட்டில் எறிந்தோ அழித்துவிட வேண்டும். மீண்டும் மீண்டும் களைகள் புதிதுபுதிதாக வும் எளிதாகவும் தோன்றி வளரும். உழவரும் களைகளைப் பறித்து அழித்துக்கொண்டே இருக்கவேண் டும். அப்பொழுதுதான் நெற்பயிர் செழித்தோங்கி நல்ல விளைவைக் கொடுக்கும். களை பறிக்காமல் விட்டுவிட்டால் களைகள் செழித்து, நெற்பயிர் வளர்ச்சிகுன்றி விளை வும் குன்றிவிடும். அதைப்போல,

செங்கோல் மன்னன், மக்கள் கொடுத்த வரிப் பணத்தால் குளங்கள் தோண்டியும், ஏரிகள் அமைத்தும், அணைகள் கட்டியும், கால்வாய்கள் வெட்டியும், உழவர்க் குரிய நீர்ப்பாசன வசதிகள் பலவும் செய்து, தொழிற் சாலைகள் அமைத்துத்தொழில்பெருக்கி, கல்விச்சாலைகள் மூலம் அறிவும் பண்பும் பெருக்கி, கலைபல வளர்த்து நல்லாட்சி செய்யுங்கால், நாட்டில் வாழும் நல்லோர் களிடையே, தீயிட்டுக் கொளுத்துவோர், நயம்படப் பேசி வஞ்சகமாக நஞ்சிட்டுக் கொல்வோர், கொலைக் கருவிகளால் கொலைத்தொழில் புரிவோர், உழைப்பின் பயனைக் கொள்ளையடிப்போர், வழிப்பறி செய்வோர், சூறையிடுவோர், பிறன் மனை விழைவோர் போன்ற கொடியவர்களும் தோன்றி நல்லோர்க்குத் தீங்குபல இழைத்து நாட்டின் அமைதியைக் கெடுப்பர். செங்கோல் மன்னன் இத்தகைய கொடியோர்களைத் தேடிப் பிடித்து, இரக்கமின்றிக் கொன்றழித்தால்தான் நல்லோர் வாழ முடியும்! நாட்டில் அமைதி நிலவும்! இன்றேல் நாடு காடாகிப் போர்க்களமாகிப் பிணக்களமாகிவிடும்.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களை கட்டதனொடு நேர் (குறள்-௫௫0)

வேந்து ஒறுத்தல்—அரசன் ஒறுத்தல் (தண்டித்தல்) பைங்கூழ் — நெற்பயிர். கட்டல் — பறித்தல், நேர்—ஒப்பாகும்.

இச் சீரிய கருத்து, தற்கால மக்களாட்சிக்கும் ஒத்ததன்றோ! இங்ஙனமே வள்ளுவர் வகுத்த அரசியலின் பெரும்பான்மையான கருத்துக்கள், மன்னராட்சிக்கும் மக்களாட்சிக்கும் எக்காலத்திற்கும் எந்நாட்டுக்கும் ஒத்தவையாகத் திகழ்கின்றன! அதனால்தான் திருக்குறளும் உலகெல்லாம் ஒளிவீசித் திகழ்கின்றது.

வாழ்க வள்ளுவம்

## 13. துளியின்மை ஞாலத்திற்கு எற்று.

நேரிய கோல்போன்ற முறை தவறா ஆட்சியை உவமையாகு பெயராகச் செங்கோல்என்றும்,அதேபோல் வளைந்த கோல்போன்ற முறைதவறிய ஆட்சியைக் கொடுங்கோல் என்றும் கூறுவது மரபு. செங்கோல்—செம்மையானகோல்; நேரிய ஆட்சி. கொடுங்கோல்—வளைந்தகோல்; முறை தவறிய கொடிய ஆட்சி.

முறைதவறிய கொடுங்கோலாட்சியின் கீழ் வாழ்வதைவிடத் துன்பம் வேறொன்றுமில்லை. "அதிகப் பொருளை விரும்பி மக்களை அலைக்கழித்துத் தகாதவற்றைச் செய்யும் அரசுத் தலைவன், கொலைபுரிவதையே தொழிலாகக் கொண்டவரினும் கொடியவன் என்கின்றார் பொய்யாமொழியார். "கொடுங்கோல் மன்னன் நாட்டினும் கடும்புலி வாழும் காடு நன்றே" என்றார் அதிவீரராமபாண்டியர்.

நாள்தோறும் ஆராய்ந்து நன்முறையில் ஆளாதவன் சிறிது சிறிதாக நாட்டையிழந்து விடுவான்.

அவன் நாட்டுமக்கள் துன்பத்தால் நலிவர். அங்ஙனம் மக்கள் துயருற்று வடித்த கண்ணீரே கொடுங்கோலாட்சியை அழிக்கும் படையாக மாறும். குடிகளிடத்தில் அன்பில்லாத முறையற்ற ஆட்சியின் கீழ் வறுமையுடன் வாழ்வதைவிடச் செல்வத்துடன் வாழ்தல் மிகக் கொடுந் துன்பம் அநுபவிப்பதாகும். முறை தவறிய ஆட்சியில் இயற்கையே மாறுபட்டு, வானம் பொய்த்து, நாட்டின் பயன்களெல்லாம் குறைந்து உழவும் பயனும் குன்றி, கலைகள் சாம்பி நாடு சீர்கேடடைந்துவிடும். இத்தகைய கொடுங்கோன்மைக்கு முதற்பாவலர் காட்டும் இரு உவமைகளை நோக்குவோம்.

நெஞ்சில் சிறிதும் இரக்கமின்றி, கையில் வேல் கொண்டு காட்டில் மறைந்து திரியும் கள்வனொருவன், அவ்வழியே பொருள்கொண்டு செல்லும் ஒருவன் எதிரே திடீரெனத் தோன்றி நின்று வழிமறித்து வேல்காட்டி, உன்னிடம் இருப்பவற்றை யெல்லாம் கொடுத்துவிடு" என்றால் என்ன பொருள்? கொடுக்காவிட்டால் வேலால் வீழ்த்துவேன் என்பதுதானே?

அதே போல், நாட்டு மக்களிடத்தில் சிறிதும் அன்பில்லாமல் அவர்களுக்குரிய வரிப்பொருள்களை வசூலித்த பிறகும், மேலும் அதிகம் கொடுக்குமாறு கொடுங்கோலைக் காட்டிக் கேட்டலும் கொடியதாகும். கள்வன் வேல்காட்டிக் கேட்கின்றான்! கொடுங்கோலன், கொடுங்கோல் அதிகாரத்தைக் காட்டிக் கேட்கின்றான். இருவருக்கும் என்ன வேறுபாடு? இருவரும் உள்ளத்தாலும் செயலாலும் கொடியரே அன்றோ?

வேலொடு நின்றான் இடுவென்றது போலும்
கோலொடு நின்றான் இரவு (குறள்-டுருஉ)

இடு—தா. கோல்—அதிகாரம். இரவு—உரிய வரித் தொகைக்கு மேல் வேண்டுதல்.

உயிரின்றி வாழ்வில்லை! உணவின்றி உயிரில்லை! நீரின்றி உணவில்லை! மழையின்றி நீரில்லை! ஆதலின் உயிர் வாழ்க்கைக்கு மழையே அமிழ்தமாகத் திகழ் கின்றது! உண்டு உயிர் வாழ்வார்க்கு நல்ல உணவை உண்டாக்கித் தானும் உணவாகிப் பேருதவி புரிவது மழை! இத்தகைய மழைத்துளி வானின்றும் வீழத் தவறினல் உலகில் பசும்புல்லின் நுனியையும் காண இயலாது! உழவர் உழுதொழிலைச் செய்ய இயலாது! எங்கும் பசிப்பிணிதோன்றி வருத்தும்! ஆழ்ந்து பரந்த கடலும் வளங்குன்றும்! பூசையும் விழாவும் வீழும்! அறம் அழியும்! ஒழுக்கம் ஒழிந்து, பொய்யும் களவும் கொலையும் ஓங்கும்!

அதைப்போலவே, நாட்டையாளும் தலைவன் நாட் டுயிர்களிடம் அன்பு செலுத்தவில்லை யென்ருல், உழவு வாடும்! தொழில் தேயும்! கல்வியும் கலையும் குன்றும்! வறுமையும் பசியும் அறியாமையும் பிணியும் ஓங்கும்! நீதி நீங்கும்! அறம் அழியும்! ஒழுக்கம் ஒழிந்து பொய்யும் களவும் கொலையும் ஓங்கும்.

துளியின்மை ஞாலத்திற்(கு) எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு (குறள்-டுடுஎ)

துளி—மழைத்துளி. ஞாலம்-உலகம். அளி—அன்பு
எற்று – எத்தன்மையது? அற்று – அத்தன்மையது.
என்னே இவ்வுவமை தரும் விளக்கம்!

“மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றேனின் இன்றால்”

என்றார் தண்டமிழ்ச் சாத்தனாரும். காவலனின் அன்பு பொருந்திய காவல் இல்லாவிட்டால் மாதவர் நோன்பும், அந்நோன்பால் ஆகிய பயனும் நாட்டிற்கில்லை; பெண்களின் கற்பு,நிலை பெறாது; ஆதலின் கற்புடைப் பெண்டிரால் உண்டாகும் பெய்யெனப் பெய்யும் மழை போன்ற பயனும் இல்லை.

எனவே, மேற்கூறிய சாத்தனார் கருத்தும், "மழையில்லாத் தன்மையும் மன்னனின் அன்பில்லாத் தன்மைமையும் உயிர்களுக்கு ஒன்றே" என்ற வள்ளுவர் கருத்தை உறுதிப் படுத்துகின்றது.

## 14. பேய் கண்டன்னதுடைத்து.

நன்மைதீமை, இன்பம் துன்பம், மேடு பள்ளம், பகல் இரவு, நட்பு பகை, குணம், குற்றம்–இங்ஙனமாக உலகமே இரட்டை யிரட்டையாக அமைந்திருக் கக்காணலாம். அதேபோல் மனிதனிடத்தும் குணம் குற்றம் ஆகிய இரண்டும் கலந்தேயுள்ளன. ஆதலின் சிறிதும் குற்றமற்ற குணமே நிறைந்த மனிதனையோ, சிறிதும் குணமற்ற குற்றமே நிறைந்த மனிதனையோ காணுதல் அரிது.

எனவே குணத்தையும் ஆராய்ந்து, குற்றத்தையும் ஆராய்ந்து குற்றம் மிகுதியான கொடியோரைப் பைங் கூழ், களை கட்டல்போல் அழித்து, குணம் மிகுதியாய்க் கொண்ட நல்லோரைக் காப்பது நல்லரசின் கடமையாகும்.

குணம் மிகுதியானோரிடத்திலும் சில குற்றங்கள் கலந்திருப்பது இயல்பானமையால், அவர்கள் குற்றம் புரியும்போது, குற்றத்தையும் குற்றத்தின் காரணத்தை

யும் ஆராய்ந்து, அதற்குத்தக்க தண்டனை விதித்து, மேலும் அவர்கள் குற்றம் செய்யாது காப்பதும் நல்லரசின் கடமையாகும். அப்படிச் செய்தால்தான் நாடு நலமுறும். ஆட்சி நிலைக்கும்.

சூழ்நிலையால் தவறிக் குற்றம் செய்த நல்லோரைத் தண்டிக்கும்போது, பெருந் தண்டனை விதிப்பதுபோலக் காட்டிக் குற்றத்திற்கேற்ற சிறு தண்டனையே விதிக்க வேண்டும். நல்லோரும் அஞ்சத்தக்க கொடிய செயல் களைச்செய்யும் கொடுங்கோலன் விரைவில் கெட்டு அழிந்து விடுவான். அப்பொழுது யாவரிடத்தும் கடுஞ் சொல்லே பேசுபவனாகவும், இரக்கமற்றவனாகவும் இருப்பவனுடைய பெரிய செல்வமாகிய அரசு விரைவில் அழிந்துவிடும். கொடிய சொல்லும் அளவுக்கு மிஞ்சிய தண்டனையும் அரசனது வலிமையாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாகும்.

கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். (குறள்-ருகூஎ)

கையிகந்த – அளவுகடந்த: குற்றத்தின் மிக்க

அடுமுரண் – பகைவரை வெல்லும் வலிமை.

இக்குறள் ஒற்றை உருவக அணி.

நாடுவிட்டு நாடுவந்து, கணவனை யிழந்து, கண்ணகி ஆதரவற்றுத் தன்னந்தனியளாக வந்த போதும், அவள் காண்பதற்கு எளியவனாகவும், இன் முகம்காட்டி இன்சொல் பேசுபவனாகவும் திகழ்ந்த பாண்டியன் நெடுஞ்செழியனைப்போல, தன்னைக் காண விரும்பும் மக்களுக்கு எளிதில் காட்சியளிப்பவனும் அவர்களிடம் இன்முகம் காட்டி இன்சொல் பேசி அவர் களுக்கு வேண்டியன செய்பவனாகவும் அரசன் இருக்க

வேண்டும். இத் தன்மைகளில்லாதவனுடைய செல்வ மும் ஆட்சியும் நன்மை பயவாமல் இருப்பதோடு தீமையே பயக்கும்.

தங்கள் குறைகளைச் சொல்லி முறையிட விரும்பும் குடி மக்களுக்கு எளிதில் காட்சியளிக்காமலும், அரிதாகக் காட்சியளித்தபோதும், வெறுத்த-கொடிய முகத்தைக் காட்டுபவனாகவும் இருப்பவனுடைய செல்வமும் ஆட்சி யும் கொடுங்குணம் படைத்த பேயின் கையில் சிக்கிய வற்றைப்போல் நன்மையின்றித் தீமையே பயக்கும்.

அருஞ்செவ்வி யின்னாமுகத்தான் பெருஞ் செல்வம்
பேய்கண் டன்ன(து) உடைத்து (குறள்-௫௬௫)

அருஞ்செவ்வி – (அரசனைக் காண விரும்புவர்க்கு)

விரைவிலும் எளிதிலும் காட்சியளிக்காமல் நீட்டிக்கும் அரிய காலம். இன்னாமுகம் – இனிமையற்ற கொடிய முகம். பேய்–கொடுங்குணங்களே நிறைந்த பேயன்.

'அழுக்காறென ஒரு பாவி' என்றும் 'இன்மையென ஒரு பாவி' என்றும், கொடிய பொறாமைக் குணத்தை யும், கொடிய வறுமையையும் பாவியாகத் திருவள்ளுவர் உருவகித்துள்ளார். இங்ஙனமே தீக்குணங்கள் மிக்க வனைப் 'பேய்' என்று கூறல் சான்றோர் மரபு. இம் மர புப்படியே, கொடுங்குணம் மிக்க தீயவனைப் பேயாக உருவகித்து 'பேய்கண்டன்ன துடைத்து' என்றார் பொய்யாமொழியாரும்.

தீக்குணங்களே மிக்க தீயவனிடம் பெரும் செல்வம் சேருமானால், அவன் செல்வச் செருக்கினாலும் தீக் குணங்களாலும், பெருஞ் செல்வத்தாலும், சமுதாயத் திற்கும் நாட்டிற்கும் பெரும் தீமைகளையே விளைவிப்

பான் என்பது யாவரும் அறிந்ததே. அதைப்போலவே, "காட்சிக்கு அரியவனாகவும் கடுமுகத்தையுடையவனாகவும் இருக்கும் கொடுங்கோலனுடைய ஆட்சி நாட்டு மக்களுக்குப் பெரும் தீமைகளை விளைவிக்கும்'' என்ற கருத்தைப் 'பெருஞ் செல்வம் பேய்கண்டன்னதுடைத்து' என்ற உவமையால் தெய்வப் புலவர் நன்கு தெளிவுப் படுத்துகின்றார்.

மற்றும் இவ்வுவமைக் குறள், பெருஞ் செல்வமும் அதிகாரமும்பெற்ற ஏனையோரும், தம்கீழ் உள்ளார்க்குக் காட்சிக்கு எளியவராகவும், இன்முகம் காட்டி இன் சொல் பேசி இனிய செயல் ஆற்றுபவராகவும் இருத்தல் வேண்டும் என்ற நீதியையும் புலப்படுத்துகின்றது.

## 15. மண்ணோடியைந்த மரம்

அழகிய காட்சிகளைக்கண்டு மகிழ்தலும், அழகிலாக் காட்சிகளைக் கண்டு வெறுத்தலும் மட்டுமன்று கண் பெற்ற பயன். பிறர் இன்பம் கண்டு மகிழ்தலும், பிறர் துன்பங்கண்டு வருந்திக் கலங்கிக் கண்ணீர் வடித்தலும், அன்புப் பார்வை செலுத்தலுமே கண்ணின் முக்கிய பயன்களாகும். இத்தன்மைக்கு இரக்கம் என்று பெயர். இதையே கண்ணோட்டம் என்ற அழகிய சொல்லால் திருவள்ளுவர் குறிக்கின்றார்.

இத்தகைய கண்ணோட்டமாகிய இரக்கப் பண்புடையவர் சிலராவது இருப்பதால்தான், பல கொடியோர்களுக்கிடையேயும், உலகமானது மண்புக்கு மாயாமல் நிலைத்திருக்கிறது. எனவே உலகத்தின் இயக்கமே கண்ணோட்டத்தில்தான் உள்ளது. கண்ணோட்டமில்லாக் கொடியோர் உயிர்வாழ்வது நிலத்திற்கு வெறும் சுமையே. பாடல் தொழிலோடு பொருந்தாத பண்ணால்—

இசையால் – பயனில்லாததைப்போல கண்ணோட்டமில்லாத கண்ணாலும் பயனில்லை.

பண்ணென்னும் பாடற்கியைபின்றேல் கண்ணென்னும்
கண்ணோட்டம் இல்லாத கண் (குறள்-௫௭௩)

பண்–இசை. இயைபு–பொருத்தம்.

மூக்கு, காது, கை, கால், கழுத்து முதலிய உறுப்புகளுக்குப் பலவித அணிகளை அணிந்து மகிழும் மக்கள், கண்ணுக்கும் வாய்க்கும் எவ்வித அணிகளையும் அணிவதுமில்லை; அணியவும் இயலாது. ஆனால் இயற்கையாகவே அவ்வுறுப்புகளுக்குச் சிறந்த அணிகள் அமைந்துள்ளன. புன்னகையே வாய்க்குச் சிறந்த பொன்னகையாக அமைந்துள்ளது. அதைப்போல கண்ணோட்டமாகிய அருட்பார்வையே கண்ணிற்குச் சிறந்த அணிகலமாகும். கண்ணோட்டமில்லாத கண் புண்ணென்று அறிஞரால் இகழப்படும்.

ஆதலின் கண்ணோட்டமில்லாத கண்ணாலும் பயனில்லை. புண்ணொத்த அக்கண்ணுடையவராலும் யாதொரு பயனுமில்லை.

மண்ணுடன் மக்களும் பொருந்தியுள்ளனர்; மரமும் பொருந்தியுள்ளது. மக்களுக்கும் உயிருண்டு; மரத்திற்கும் உயிருண்டு. ஆனால் மக்களைப்போல, காணும் ஆற்றலும் கண்ணும் மரத்திற்கில்லை. ஆதலின் மரத்திற்கெதிரே எவரேனும் இன்புற்றால், மரம் மகிழாது; எவரேனும் துன்புற்றாலும் அது வருந்தாது; துன்பத்தை நீக்கவும் முடியாது. மரத்தினடியில் கொலை பல நிகழ்ந்தாலும் அது தடுக்கமுடியாது. ஆனால் மரத்துடன் ஒருவரைச்சேர்த்துப் பிணித்து வைத்துச் சிலர் அடித்துத் துன்புறுத்தும்போது, துன்புறுத்துவோருக்குதவியாய்,

துன்பப் படுவோரைத் தன்பால் பிணித்துக் கொண் டிருக்கும்.

இத்தகைய மரத்திற்கு ஒப்பானவரே கண்ணோட்ட மில்லாதவரும். எங்ஙனம்? கண்ணோட்டம் என்னும் இரக்கப் பண்பு இல்லாதவர், பிறர் இன்பம் கண்டு மகிழவும் மாட்டார்; பிறர் துன்பம்கண்டு வருந்தவும் மாட்டார்; எதிரே நடைபெறும் கொலையைத் தடுக்கவும் மாட்டார்; ஆயினும் துன்புறுத்துவோருக்கு உதவியாய் நின்று, துன்பப்படுவோரை மேலும் துன்புறுத்துவார். ஆதலால் இத்தகைய கொடியோரை ஓரறிவு உயிராகிய மரத்திற்கு ஒப்பாகப் பொய்யாமொழியார் புகல்கின்ருர்.

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ(டு)
இயைந்துகண் ணோடா தவர் (குறள்-௫௭௬)

கண்ணோடாதவர்–கண்ணோட்டமில்லாக் கொடியர்.

உலாவந்த சோழனைக் கண்டு காதலித்துக் காதல் நோயால் வருந்திய தலைவி, தன் நெஞ்சைச் சோழன் பால் தூது விடுக்கின்ருள். "எனது வலிய நெஞ்சே! நீ,புலிக்கொடியையுடைய காவிரி நாடனிடம் தூதுசெல், அவன் உன்னை வரவேற்பான். அப்பொழுது நீ நாணங் கொண்டு பதுங்காமல் அவனைத் தொழுது, என் தோள் மெலிவைக்கூறி, நாட்டையாள்வாருடைய் கண்கள் கண்ணோட்டமில்லாத மரக்கண்களா? காதல் நோயால் வருந்தும் தலைவியின்பால் உனக்கு இரக்கமில்லையா? என்று கேள்.

"வரக்கண்டு நாணாது வல்லையால் நெஞ்சே!
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்-றிரக்கண்டாய்
வாள்உழுவை வெல்கொடியான் வண்புனல்நீர் நாடற்கென்
தோள்அழுவம் தோன்றத் தொழுது" (முத்தொள்ளாயிரம்)

ஆதலின் கண் பெற்ருேர், கண்ணேட்டத்தையும் பெற்று, பிறர் இன்பங்கண்டு மகிழ்ந்தும், துன்பங்கண்டு வருந்தி நீக்கியும், குற்றம் செய்வோர்பாலும் அளவுடன் கண்ணேட்டத்தைப் பயன்படுத்தியும், நண்பர் நஞ்சு கொடுக்கக் கண்டாலும், வெறுக்காமல் அன்பு செலுத்தும் நயத்தக்க நாகரிகத்துடன் பெருவாழ்வு–புகழ்சான்ற வாழ்வு–வாழ்தல் வேண்டும்.

## 16. வெள்ளத்தனைய மலர் நீட்டம்.

கடலின் அடியில் விலைமதிப்பற்ற முத்துக்களும் பவளங்களும் உள்ளன. கடலின்மேற்பரப்பில் ஆளைத் தூக்கியெறியும் பெரும் அலைகளும், உள்ளே ஆளை விழுங்கும் சுருமீன், முதலை, திமிங்கலம் போன்ற கொடிய பிராணிகளும் உள்ளன. அலைகளுக்கும் சுருபோன்றவைகளுக்கும் அஞ்சுவோர் முத்து முதலிய மணிகளைப்பெற இயலாது. அலைமுதலியவற்றிற்கு அஞ்சாமல் உள்ளத் துணிவுடன் செயலாற்றுவோரே கடலின் பயனைப்பெற இயலும்.

அதைப்போல வாழ்க்கையும் ஒரு பெருங்கடலே. வாழ்க்கைக் கடலில், பலவித இன்பங்களைப் பெறுவதற்குத் தடையாக, வறுமை, நோய், பொருமை, பகைமை முதலிய துன்பங்கள் இருக்கின்றன. இத்துன்பங்களைக் கண்டு அஞ்சிக் கலங்காமல், உள்ள உறுதியாகிய ஊக்கத்துடன் செயலாற்றுவோர்தான் பலவித வாழ்க்கையின்பங்களைத் துய்க்கமுடியும். பகலும் இரவும் மாறிமாறி வருதல்போல, இன்பமும் துன்பமும் வாழ்க்கையில் மாறிமாறி வருதலும், இரவுக்குப்பின் பகல் தோன்றுவது உறுதியான இயற்கைபோல, துன்பத்திற்குப்பின் இன்பம் தோன்றுவதும் உறுதியான இயற்கையாகவும் உள்ளன.

எனவே வாழ்க்கையில் இன்பமும் புகழும் பெற விரும்புவோருக்குத் துன்பங்களைக் கண்டு கலங்காமல் செயலாற்றுதற்குரிய ஊக்கம் வேண்டும். ஊக்கமுடையோர்தான் துன்பங்களைக் கடந்து இன்பங்களைப் பெற இயலும். ஊக்கமில்லாதார் துன்பங்களைக் கடப்பதற்குள் அழிந்துவிடுவர். அவர்கள் இன்பங்காண்பது எங்கே?

ஊக்கமே சிறந்த செல்வமாகும். ஊக்கமிலாதார் ஏனைய செல்வங்கள் நிறையப் பெற்றிருப்பினும், அவற்றை விரைவில் இழந்து வருந்துவர். ஊக்கம் உடையோர், பெற்ற சிறு செல்வத்தைப் பெரிதாக்கி இன்பந் துய்ப்பர். ஊக்கமுடையோர், தாம்பெற்ற செல்வத்தை இடையிலே இழக்கநேரின், அதற்காக வருந்திக் கலங்காமல் மேலும்பெற முயல்வர். இத்தகைய அசையாத ஊக்கமுடையோனைச் செல்வம் தானே தேடிச் சென்றடையும்.

குளத்தில் நீர் உயருமளவுக்குத் தாமரை, அல்லி முதலிய நீர்ப்பூக்களின் செடிகளும் உயரும். நீரின் உயரம் குறையக்குறைய செடிகளின்உயரமும் குறையும்! நீரின் உயர்ச்சி எவ்வளவோ, அவ்வளவே நீர்ச்செடிகளின் நீளமும்.

அதைப்போல மக்களும், ஊக்கம் குறையக் குறைய வாழ்க்கையில் குன்றுவர். ஊக்கம் மிகமிக வாழ்க்கையில் உயருவர். ஊக்கத்தினளவே, வாழ்க்கை யுயர்ச்சியும் இன்பமும் புகழும்.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு (குறள்-ருகரு)

உள்ளம்-ஊக்கம்.

அறிவும் ஊக்கமும் உடையோர் உயர்ந்தவற்றையே எண்ணி உயர்ந்தவற்றையே செய்து முடிப்பர்.

போர்ப் பயிற்சிபெற்ற களிறு (ஆண்யானை) போர்க் களத்தில் பகைவரை யெதிர்த்துப் போர் செய்யும்போது, பகைவர் எய்த அம்புகள் ஏராளமாகத் தன் உடல் முழுவதும் பாய்ந்திருக்கும்போதும் சிறிதும் கலங்காமல் எதிர்த்துப் போரிட்டுத் தன் பெருமையை நிலை நாட்டும். அதைப்போல, தளராத ஊக்கமுடையவர், உயர்வுக்குரிய மிகச் சிறந்த வினையாற்றுங்கால், எண்ணற்ற துன்பங்கள் நேரினும், அவற்றைக் கண்டு கலங்காது ஊக்கத்துடன் செயலாற்றி உயர்வும் இன்பமும் புகழும் அடைவர்.

சிதைவிடத்(து) ஒல்கார் உரவோர் புதையம்பில்
பட்டுப்பா டூன்றுங் களிறு. (குறள்-௫௯௭)

உரவோர்–ஊக்கமுடையோர். ஒல்கார்–தளரார் புதை–அம்புக்கட்டு. பாடு–பெருமை. களிறு – ஆண்யானை. ஊன்றும்–நிலைநாட்டும்.

இத்தகைய ஊக்கமுடையோர் செயற்கரும் செயல்களைச் செய்து அவற்றால் உலகிற்கே பெரும் நன்மை பயந்து, தாமும் இன்பத்தாலும், புகழாலும் உயர்வர்; மலர் நீட்டம்போல் உயர்வர். திருவள்ளுவர், இளங்கோ, கம்பர் போன்ற பெரும் புலவர்கள், தளரா ஊக்கத்துடன் பற்பல நூல்களைக் கற்று நுணுகி ஆய்ந்து, தம் அனுபவத்தை யெல்லாம் திரட்டி மிகச்சிறந்த நூலாக்கி, தமிழின் புகழையும் தமிழகத்தின் புகழையும் உயர்த்தித் தாமும் உயர்ந்து அழியாப் புகழெய்தினர். அந்நூல்களால் உலகமும் பெரும் பயன் பெறுகின்றது.

தாமசு ஆல்வா எடிசன், ஃகென்றி போர்டு, இரேடியம் கண்ட மேரிகியூரி போன்ற விஞ்ஞானிகள் தம் வாழ்வில் ஏற்பட்ட "புதையம்பிற்பட்ட களிறு" போன்ற எண்ணற்ற இடையூறுகளைக் கண்டு கலங்காமல், தளரா ஊக்கத்துடன் தளரா முயற்சியால், மிகச் சிறந்த கண்டுபிடிப்புக்களை உலகிற்குப் பொதுவாக்கித் தாமும் புகழால் உயர்ந்தனர். உலகமும் பெரும் பயனுற்றது.

எனவே உள்ளத்தில் நினைப்பவையெல்லாம் உயர்ந்தவையாகவே இருக்கவேண்டும். உயர்ந்தவற்றையே எண்ணி, உயர்ந்த ஊக்கத்துடன் முயற்சித்து உயர்ந்த செயலாற்றி, உலகிற்கும் உயர்ந்த பயனளித்து, தாமும் உயர்ந்த புகழ் எய்துவோரே உண்மையான அறிஞராவர். ஏனையோர் மரத்திற்கொப்பானவரே.

ஆதலின், மழைக் காலத்தில் குளத்தில் உயரும் நீர் போல் நாமும் ஊக்கத்தால் உயர்ந்து, மலர் நீட்டம்போல் உலகிற்குதவும்நற்பணியாலும் புகழாலும் உயர்வோமாக!

## 17. பேடி கை வாளாண்மை.

ஊக்கமுடையாரிடத்தும் சில சமயம் சோம்பல் தோன்றுவது உண்டு. சோம்பல் தோன்றினுல் முயற்சி குன்றி, உள்ள செல்வமும் அழிந்து குடியின் பெருமையும் குன்றும். ஆதலின் சோம்பலை ஒழித்து, ஊக்கத்துடன் வினையாற்றுங்கால் ஏற்படும் தோல்வி கண்டு கலங்காமல், இடையூறுகளுக்கு அஞ்சாமல், வெற்றியடையும் வரையில் விடாமல் மேலும் மேலும் முயன்று செய்வதே விடாமுயற்சியாகும். விடாத மெய்ம் முயற்சியால் சிறந்த வினைகளை ஆள்வதால் விடாமுயற்சியை "ஆள்வினை" யென்று வள்ளுவர் கூறுவர்.

தளரா முயற்சியானது, செயற்கரிய செயல்களையும் செய்து முடிக்கும் பெருமையை உண்டாக்கும். தெய்வத்தால் ஆகாத செயலாயிருப்பினும், மெய்வருத்தத்திற்கேற்ற கூலியை முயற்சி தந்தே தீரும். அசையாத பெரும் முயற்சியானது விதியையும் வென்று பெரும் பயனைத் தரும்; பெருஞ் செல்வத்தைச் சேர்க்கும்; செல்வத்தின் பயனாகிய கொடைத்தன்மையை உண்டாக்கும்; கொடையினால் ஏற்படும் புகழைப் பெருக்கும்.

யாவருக்கும் உதவுதலாகிய கொடைத் தன்மையென்னும் மேம்பாடு, முயற்சியென்று சொல்லப்படும் உயர்ந்த குணத்தில் தங்கியிருப்பதாகும்.

தாளாண்மை யென்னும் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. (குறள்-௬௧௩)

தாளாண்மை—முயற்சி. வேளாண்மை — யாவருக்கும் உதவும் தன்மை.

பொதுவுடைமை ஆட்சியால் பாட்டாளிகள் வாழ்வை வளப்படுத்த விரும்பிய, லெனின், ஜோசப் ஸ்டாலின் முதலியோர் மிக ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர்கள்தான்; தமது விடாமுயற்சியால் உருசிய நாட்டின் தலைவர்களாகித் தங்கள் எண்ணத்தை நிறைவேற்றினர். அமெரிக்காவைச் சுதந்திர நாடாக்கிய வாசிங்டனும், அடிமை வியாபாரத்தை அடியுடன் ஒழித்த அப்ரகாம் லிங்கனும் ஏழைக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்களாயினும் தமது விடாமுயற்சியால், நாட்டின் தலைவர்களாகிச் செயற்கரும் செயல்கள் புரிந்தனர்.

இன்று பல்லாயிரக் கணக்கான மக்கள் கண்டு களிக்கும் திரைப் படத்தைக் கண்டுபிடித்த தாமஸ்

ஆல்வா எடிசன் என்பவரும், மிகக் குறைந்த காலத்தில் உலகைச் சுற்றிவரப் பயன்படும் விண்ணூர்தியைக் கண்டுபிடித்த ரைட் சகோதரர்களும், மோட்டாரைக் கண்டுபிடித்த கென்றிபோர்டும், கொடிய நோய்களைத் தீர்க்க உதவும் "இரேடியம்'' என்னும் அருமருந்தைக் கண்டுபிடித்த பியரிகியூரி அம்மையாரும் ஏழைக் குடும்பங்களில் பிறந்து வளர்ந்து வாடி வதைந்து, தம்மரும் முயற்சியால், செயற்கரியன செய்து தாமும் உயர்ந்து, நாட்டிற்கும் உலகிற்கும் பேருதவிகள் புரிந்தனர்.

மேற் கூறியவர் யாவரும், தாளாண்மையென்னும் தகைமையால் வேளாண்மையென்னும் செருக்கு எய்தியவரன்றோ? ஆதலின் வேளாண்மை செய்ய விரும்புவோர் தாளாண்மை மிக்குடையவராயிருத்தல் வேண்டும். தாளாண்மை யில்லாதார் வேளாண்மை நிலைபெருது பயனற்று அழிவதோடு அவர்களையும் அழித்து விடும். முயற்சியற்ருேனைப் பேடியாகப் பொய்யா மொழியார் பகர்கின்ருர்.

ஆண்மை கெட்டுப் பெண்மைமிக்கு, வடிவத்தால் ஆணுகவும் தன்மையால் பெண்ணுகவும் இருப்பவனைப் பேடி என்பர். ஆண் வடிவமிருப்பினும் பெண் தன்மை காரணமாகப் பெண்பாலாகவே கூறுவர் அறிஞர். இத்தகைய பேடியின் கையில் கூரிய வாளைக் கொடுத்துப் போர்க்களத்திற்கு அனுப்பினுல் அவள் என்ன செய்வாள்? பகைவர் படையைக் கண்டவுடன் அஞ்சி நடுங்குவாள். வாள் வீசிப் போர் செய்ய எண்ணினுலும், ஆண்மையற்ற அச்சங் காரணமாக, கூர்மையான வாளும் செயலற்றுப் பயனற்றுப் போகும்.

அதைப்போல, முயற்சியில்லாதவனுடைய, யாவருக்கும் உதவி செய்யும் தன்மையும் பயனற்றுக் கெட்டுப்

போகும். முயற்சியின்மையால், செல்வம் சேராமல் வறுமையெய்தி வருந்துவானுகையால், பிறருக்கு உதவி செய்ய எண்ணினாலும் இயலாது. வறுமையால் வாடிப் பிறர் உதவியைத் தனக்குஎதிர்நோக்கும் நிலையில்உள்ள ஒருவன் எங்ஙனம் பிறருக்கு உதவ இயலும்?

நாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும் (குறள்-௬௧௪)

எனவே வேளாண்மையாளர் சிறந்த தாளாண்மை யாளராக இருத்தல் வேண்டும். பாரி, ஓரி, காரி, ஆய்அண்டிரன், அதியன் அஞ்சி போன்ற பழங்கால வள்ளல்கள், பகைவரஞ்சி நடுங்கும்படியான பேராண் மையும், தாளாண்மையும் உடையவராகத் திகழ்ந்தனர் என்பதைப் புறநானூறு என்ற சங்க இலக்கியம் தெளிவு படுத்துகிறது. அவர்கள் தங்கள்பாலிருந்த பேராண்மை யையும் தாளாண்மையையும் நம்பியே, தங்கள் பொருள் களை வருவோர்க்கெல்லாம் வாரி வாரி வழங்கி வேளாண்மை செய்து அழியாப் புகழெய்தினர்.

இராசா, சர். அண்ணாமலைச் செட்டியாரும், பெற்றோர் மூலம் தமக்குக் கிடைத்த சில லட்சம் சொத்தைத் தனது தாளாண்மையால் பல லட்சங்களாகப் பெருக்கிக் கல்விப் பணிக்காக வேளாண்மை செய்து, எந்தத் தனிப்பட்ட மனிதரும் அமைக்காத பல்கலைக் கழகத்தை அமைத்து, அழியாப்புகழ்பெற்றார். மேற்கூறியவர்களிடம் தாளாண்மையில்லாதிருந்திருந்தால், அவர்களுடைய வேளாண்மையும் பேடி கை வாளாண்மை போலக் கெட்டிருக்குமன்றோ?

எனவே நாமும் ஊக்கங்கொண்டு, சோம்பல்நீக்கி, தாளாண்மையால் மிகு பொருளீட்டி, வேளாண்மை

யாற்றி அழியாப் புகழ் பெறுவோமாக. ஓங்குக தாளாண்மை! வாழ்க வேளாண்மை!

## 18. மடுத்தவாயெல்லாம் பகடன்னான்.

ஊக்கங்கொண்டு சோம்பல் நீக்கி, ஆக்கந்தரும் நல்வினையை மெய்ம் முயற்சியுடன் செய்யுங்கால், மெய்ச் சோர்வாலும், மெய்வருத்தத்தாலும், பொருள் நெருக்கடியாலும், அழுக்காறுகொண்ட பகைவர் செய்யும் இடையூறுகளாலும், துன்பங்கள் ஒன்றன்மேல் ஒன்ருகப் பல அடுக்கி வரலாம். இங்ஙனம் அடுக்கிவரும் துன்பங்களைக் கண்டு கலங்காமல் முயற்சியுடன் செயலாற்றினுல், முடிவில் துன்பங்கள் யாவும் வீழ்ந்து இன்பங்கள் பெருகும்.

வெற்றியெய்தி இன்பமடையுங்கால் சிரித்து மகிழ்வதைப்போல, துன்பம் வரும்போதும் சிரித்து மகிழக் கற்றுக்கொண்டால் எளிதில் துன்பத்தை வீழ்த்தி இன்பங்காணலாம். துன்பத்தைக்கண்டுதுன்பப்படாதவர் துன்பத்திற்கே துன்பம் பயப்பர். இன்பமும் துன்பமும் மாறிமாறி வருவது இயல்பென உணர்ந்து, இன்பத்தை மட்டுமே விரும்பாமல், துன்பத்தையும் விரும்பி ஏற்கும் இயல்புடையோன் பெருந்துன்பம் அடையமாட்டான். அவனைச் சாரும் பெருந்துன்பங்கள் சிறு துன்பங்களாக மாறிப் பிறகு இன்பங்களாகிவிடும்.

சுமைவண்டியை யிழுத்துச்செல்லும் வலிய காளை, செல்லும் வழி மேடாயினும் பள்ளமாயினும், மணலாயினும், சேருயினும், நெடுவழியாயினும் சிறிதும் கலங்காமல் ஊக்கத்துடன் இழுத்துச்செல்லும். சேற்று நிலத்தில் வண்டி செல்லுங்கால், வண்டியின் அச்சு நிலத்தில் மோதும்படியாகச் சக்கரம் சேற்றுள் பதிந்து

விட்டாலும், காளையானது சக்கரத்தைத் திரும்பிப்பாரா மல், பக்கத்தே சாய்ந்து, மூக்கை நிலத்தில் ஊன்றி, மண்டியிட்டு, மூச்சையடக்கி, நிறைந்த அறிவுடனும் பெருமுயற்சியுடனும் வண்டியைக் கரையேற்றி மேலும் இழுத்துச்செல்லும். மீண்டும் பள்ளத்திலோ, மணலிலோ, சேற்றிலோ சக்கரம் பதிந்துகொண்டாலும், எத்தனை இடங்களில் சிக்கினாலும் சிறிதும் கலங்காமல் முன்போலவே முயன்றுஇழுத்துச்சென்று சேரவேண்டிய இடத்தில் சேர்க்கும். பின்னர் வண்டி நுகத்தினின்றும் அவிழ்த்துவிட்ட உடன் தலைநிமிர்ந்து பெருமிதத்துடன் நோக்கும்; அருந்த வேண்டியவற்றை அருந்தி ஓய்வு பெற்று இன்புறும்.

இத்தகைய காளைபோன்ற ஊக்கமுடையவன் சிறந்த வினையாற்றுங்கால், பசி நோக்காது, கண் துஞ்சாது, மெய் வருத்தமும் காலத்தின் செவ்வியும் பாராது, பிறர் செய்யும் தீமைகளையும் மேற்கொள்ளாது, பொய்ப்பழியும் தோல்வியும் கண்டு கலங்காது, வறுமை, பகை முதலியவற்றால் அடுக்கிவரும் துன்பங்கள் கண்டு தளராது ஊக்கத்துடனும் விடாமுயற்சியுடனும் கருமமே கண்ணாகச் செய்துமுடித்து, வெற்றிகண்டு, பெருமித மெய்தி இன்பந் துய்ப்பான். ஆதலால், இக்காளையன்னான் உற்ற துன்பமே துன்பமடைந்து வீழும்.

மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து (குறள்-௬௨௪)

மடுத்தவாய்-இடையூறு தோன்றிய இடம். பகடு-காளை. இடுக்கண்-துன்பம். இடர்ப்பாடு-துன்பம்.

இக்குறளுக்கு எடுத்துக்காட்டாக மேரிகியூரியம்மை யாரின் வரலாற்றைக் கொள்ளலாம். கி. பி. 1867 இல்

போலந்து நாட்டில் ஒரு ஏழை ஆசிரியரின் மகளாய்ப் பிறந்த மேரி, வறுமையால் பட்ட தொல்லைகள் ஏராளம்! ஏராளம்!! கூலிவேலைசெய்து அதன் உதவியால்,அன்புத் தமக்கையைக் கல்லூரியில் படிக்கவைத்துப் பிறகு தமக்கையின் உதவியால், விஞ்ஞானப் படிப்பிற்காகப் பாரிசு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து, நீரும் ரொட்டியுமே உணவாகக்கொண்டு, சிலசமயம் நீரையும் காற்றையும் உணவாகக்கொண்டு, தளரா ஊக்கத்துடன் பயின்று பட்டம் பெற்றார். ஆராய்ச்சிச்சாலையில் பசிமயக்கத்தால் மயங்கி வீழ்ந்த நாட்கள் பல.

வாழ்நாள் முழுவதும் வறுமையில் வாடியபோதும் தளராது பல ஆராய்ச்சிகள் செய்து 105 பட்டங்களும், இரண்டு நோபல் பரிசுகளும் பெற்றார். "கான்சர்" என்னும் கொடிய நோயையும் ஏனைய நோய்களை நீக்க வல்லதும், ஒரு குன்றிமணி எடையளவு, ஆயிரக்கணக் கான பவுன் மதிப்புடையதுமான "இரேடியம்" என்னும் அரும் பொருளை, எண்ணற்ற தொல்லைகளுக்கிடையில் தளரா ஊக்கத்துடனும் விடாமுயற்சியுடனும் கண்டு பிடித்து உலகிற்குப் பேருதவி புரிந்தார்.

மடுத்தவாயெல்லாம் பகடன்ன மேரிகியூரியம்மை யாரை அடைந்த துன்பங்களெல்லாம் துன்பமடைந்து வீழ்ந்தன. அவர் தாம் அரிதின் முயன்று கண்ட அரும்பெரும் கண்டுபிடிப்புக்களை உலகிற்குப் பொது வுடமையாக்கி, அழியாப்புகழ் நாட்டி 1934 இல் அமரநிலை அடைந்தார்.

"பள்ளத்தில் பதிந்த சுமை வண்டியை மேடேற்றும் ஊக்கமும் வலிமையுமுடைய எருது போன்ற எமது தலைவன்" என "உறையூர் மருத்துவன் தாமோதரனார்"

என்ற புலவர் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவள வனைப் பற்றிப் புகழ்ந்துள்ளார்.

"ஆரைச்சாகாட்டு ஆழ்ச்சி போக்கும், உரனுடைநோன்
பகட்டன்ன எங்கோன்" (புறம்-சுo)

அதியமான் நெடுமானஞ்சிக்கு ஊக்க மூட்டுவதற் காக ஔவையார், "அச்சு நிலத்தில் மோதும்படியாகப் பதிந்த சுமை வண்டியை மேடேற்றி, ஆற்றுமணல் சிதறும்படியாகவும், கல் பிளக்கும்படியாகவும் நடக்கும் பெருமித எருதுக்குக் கடக்கமுடியாத துறையுமுண்டோ!, என்கின்றார்.

"அச்சொடுதாக்கிப் பாருற்றியங்கிய, பண்டச்சா காட்டு
ஆழ்ச்சிசொல்லிய, அரிமணல் ஞெமர கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குந் துறையுமுண்டோ? (புறம் சுo)

விலங்குகள் மக்களிடையே படும் துன்பத்தை விளக்க வந்த திருத்தக்கதேவர், "நீர் நிரம்பாத ஆற்று மணலுள் பதிந்த சுமை வண்டியை, இழுத்துச்செல்லும் எருதுகள், பெரும் பாரத்தைச் சுமக்கும் ஆண்களைப் போல ஊக்கங்கொண்டு, பக்கத்தே சாய்ந்தும், நிலத்தில் மூக்கு மோதும்படியாக முழங்காலை மடக்கி மண்டியிட்டும் வண்டியைக் கடத்தி, நாள்தோறும் இப்பணியைச் செய்வதால், வலிமையழிந்து உறுப்புக்கள் அழுகி புல்லுமுண்ணாமல் அழியும்" என்கிறார்.

"நிரம்பாத நீர்யாற் றிடுமணலுள் ஆழ்ந்து
பெரும்பார ஆடவர்போல் பெய்பண்டந் தாங்கி
மருங்கொற்றி மூக்கூன்றித் தாள்தவழ்ந்து வாங்கி
உரங்கெட்டு உறுப்பழுகிப் புல்லுண்ணா பொன்றும்"

(சீவக சிந்தாமணி- முத்தியிலம்பகம்-கஅசு)

இங்ஙனம்,"மடுத்தவாயெல்லாம்பகடன்னான்"என்ற குறளுவமையைப் பல புலவர்கள் பலவாருகக் கையாண் டுள்ளனர். பகடன்ன ஊக்கங்கொண்டு, இடுக்கண்களை இடர்ப்படுத்திச் செயற்கரிய செய்து செம்மை பெறுவோமாக.

## 19. இனருழ்த்தும் நாரு மலர்

உயிரினங்கள் யாவற்றுள்ளும் மக்களினம் ஒன்றே உள்ளக்கருத்தை யெடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றுள்ளது. பெறுதற்கரிய இப்பேற்றை நன்முறை யில் திறனறிந்து பயன்படுத்தும் சொல் வன்மையே தலைசிறந்த வன்மையாகும். இவ் வன்மையாளரைச் "சொல்லேருழவர்" என்றும், "வில்லேருழவராகிய வீரர்களின் பகையைப் பெற்ருலும், சொல்லேருழவர் பகை கூடா" தென்றும், சொல்வன்மை மிக்கச் செந்நாப் போதார் புகழ்ந்துரைக்கின்ருர். சொல்லையே ஏராகக் கொண்டு மக்களுள்ளத்தை உழுது நல்ல கருத்துக்களை விதைத்துப் பண்புப் பயிரை வளர்த்து, இன்ப விளைவை அறுவடை செய்பவரே சொல்லேர் உழவர்.

உலக உயிர்களை உண்பித்து வாழ்விப்பவர் மரக் கலப்பையை ஏராகக்கொண்ட உழவர். மக்கள் உள்ளப் பண்பாட்டை வளர்ப்பவர் சொல்லை ஏராகக்கொண்ட உழவர். நிலத்தை உழுது உணவு தானியங்களை விதைக்காமல், புல் விதைகளையும் முள் விதைகளையும் விதைப்போர் உழவராகார். அதைப்போலவே மக்கள் உள்ளத்தில் நல்ல கருத்துக்களை விதைக்காமல் தீய கருத்துக்களை விதைப்போர் சொல்லேருழவராகார். எனவே தீய கருத்துக்களைத் திறம்படச் சொல்லினும் சொல்வன்மையாகாது. நல்ல கருத்துக்களைத் திறம்படச் சொல்வது சொல்வன்மையாகும்.

இத்தகைய சொல் வன்மையையே, சொல்லுவதற்குக் கருவியாகப் பயன்படும் நாக்கை அடிப்படையாகக் கொண்ட "நா நலம்" என்றும், "அந்நலம் ஏனைய நலங்களை விடச் சிறந்தது" என்றும், வள்ளுவர் சிறப்பித்துரைக்கின்ருர். சொல்லும் சொல்லினுல் நன்மையும் தீமையும் உண்டாகுமாகையால், யாவருக்கும் நன்மை பயக்கும் நல்ல சொற்களையே ஆராய்ந்து சொல்ல வேண்டும்.

நல்ல சொற்களைச் சொல்லும்போதும், நண்பர்கள் தன்னைவிட்டு நீங்காமலிருக்கும்படியாகவும், சொல்லினிமையால் பகைவரும் தன்னை விரும்பி நட்புக் கொள்ளும்படியாகவும், கேட்டாரைப் பிணித்துக் கேட்காதவரும் விரும்பிக் கேட்கும்படியாகவும் சொல்ல வேண்டும்; சொல்லுகின்ற சொல்லுக்கு ஒப்பான சொல்லும், அச்சொல்லை வெல்லக்கூடிய பிறிதோர் சொல்லும் இல்லாத வகையாய், சிறந்த சொல்லை ஆராய்ந்து சொல்லவேண்டும்.

இத்தகைய சிறந்த சொற்களைச் சொல்லும்போதும் அவையஞ்சாமலும், சோர்வில்லாமலும் சொல்லும் ஆற்றலுடையோரை, யாராலும் வெல்ல இயலாது. சொல்லவேண்டிய சிறந்த கருத்துக்களை வரிசையாகவும் இனிமையாகவும் சொல்லும் ஆற்றல் பெற்ருேரின் சொற்களை உலகம் எல்லாம் ஏற்றுப்போற்றும்.

இத்தகைய சொல்லாற்றலைப் பெறுதல் மிக அரிது. போர்க்களத்தில் அஞ்சாது போரிடும் வீரரை ஏராளமாக உலகில் காணலாம்; ஆனுல் சொல்வீரர் மிகச் சிலரே இருப்பர்.

கல்வியறிவு, கேள்வியறிவு, அவையஞ்சாமை ஆகிய மூன்றும் பெற்றவரே சொல்வீரராய்த் திகழமுடியும்.

கல்வியறிவும் கேள்வியறிவும் நிரம்பப் பெற்றும், அவை யஞ்சிச் சொல்லுமாற்றல் இழந்திருப்போரே மிகப் பலராவர்.

இனிய மணம் வீசும் மல்லிகை போன்ற மலர் களையே யாவரும் விரும்பிச் சூடுவர்; போற்றுவர். மணமற்ற மலரை யாவரும் விரும்புவதில்லை. எருக்கன் செடியில் கொத்துக் கொத்தாக மலர்ந்திருக்கும். ஆயினும் அம் மலர்களில் மக்கள் விரும்பும் மணமில்லை. ஆதலின் அம் மலர்களை எவரும் விரும்புவதும் இல்லை; சூடுவதும் இல்லை.

அதைப்போலவே பல நூல்களைக்கற்று உணர்ந்து இருந்தும், தாம் கற்றுணர்ந்த கருத்துக்களைப் பிறரும் உணரும்படியாக எடுத்துரைக்கத் தெரியாதவர் பயனற்ற வராவர். அவரை யெவரும் மதியார்.

இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்ற(து)
உணர விரித்துரையா தவர் (குறள்-௬௫௦)

இணருழ்த்தும் – கொத்தாக மலர்ந்தும். நாறா – நறுமண மில்லாத.

ஆதலின் படிக்கும் மாணவப் பருவத்திலேயே, ஒவ்வொருவரும் பள்ளி இலக்கியக் கழகக் கூட்டங்களில் பேசிப்பேசிப் பயின்று தம் சொல்வன்மையைப் பெருக் கிக்கொண்டால், எதிர்காலத்தில் உலகம் போற்றும் சொல்லேருழவராய்த் திகழலாம்.

"இணருழ்த்தும் நாறா மலரனையர்" என்ற உவ மையைக் கூர்ந்து நோக்கினல் இன்னும் சில உண்மை களை யுணரலாம்.

மல்லிகை மலர் கொத்துக்கொத்தாக மலர்வதில்லை. கொடியில் 'இங்கொன்று அங்கொன்று' எனப் பரவலாகவே மலர்ந்திருக்கும். ஆயினும் தன் நறுமணத்தால் மக்களைக் கவர்ந்து, அவர்கள் தலையிலும் கழுத்திலும் சூடும்படியான பெருமை பெறுகின்றது.

அதைப்போல,கல்லூரிப்படிப்பும், பற்பல நூல்களைக் கற்றுய்ந்த அறிவும் இல்லாவிட்டாலும் உலக அநுபவத்தால் உணர்ந்த கருத்துக்களைப் பலரும் உணர விரித்துரைக்கும் ஆற்றல் பெற்ருேர், உலகோரால் போற்றப்படுவர். மிகக் குறைந்த பள்ளிப் படிப்பே பெற்ற, பெரியார் ஈ. வே. ராமசாமியும், கல்லூரிப் படிப்பில்லாத சிலம்புச் செல்வர் சிவஞானகிராமணியாரும், முத்தமிழ்க் காவலர் கி.ஆ. பெ. விசுவநாதரும்,கலைஞர் கருணாநிதியும் அவையஞ்சாச் சொல்லாற்றலால்—பலருமுணர விரித்துரைக்குமாற்றலால்—நாடு போற்றும் தலைவர்களாக விளங்குவது யாவருமறிந்ததே!

இங்கொன்று அங்கொன்ருகமலரும் மலரே நாற்றத்தால் சிறப்புறுமென்ருல் கொத்துக்கொத்தாக மலரும் மலர்கள் நாற்றம் பெற்றிருந்தால் எவ்வளவு சிறப்பு பெறும்!

நுண்மாண் நுழைபுலமும் கல்லூரிப்பட்டமும் பெருதவரே சொல்லாற்றலால் போற்றப்படுகின்றன ரென்ருல், கல்லூரிப்பட்டமும் நுண்மாண் நுழைபுலமும் உடையோர் சொல்லாற்றலும் பெற்றுவிட்டால் அவர்கள் சிறப்புக்கு அளவேது?

அறிஞர் அண்ணாத்துரை, நாவலர்,நெடுஞ்செழியன், தோழர் சீவானந்தம், தவத்திரு குன்றக்குடி யடிகளார், சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார், பண்டித

சவகர்லால் நேரு, தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் போன்ருேர் இம்முறையில் மிகச்சிறந்து விளங்கு பவரன்ருே!

"இணருழ்த்தும் நாருமலரனையர்'' என்ற உவமை யுணர்த்தும் கருத்துக்களை யுணர்ந்து, நம் சொல்லாற் றலைப் பெருக்கி நாட்டிற்கும் மொழிக்கும் உலகிற் கும் நற்பணியாற்றிப் பெரும்புகழ் பெறுவோமாக.

## 20. பசுமட் கலத்துள் நீர் பெய்திரீஇ யற்று

யாவருக்கும் நன்மையே பயக்கும் தூய்மையான சொற்களைச் சொல்லும் ஆற்றல் பெறுதல் போலவே, எவருக்கும் தீமையின்றி நன்மையே பயக்கும் தூய்மை யான வினைகளைச் செய்து பழகல் வேண்டும். மனத் தூய்மையும் சொல் தூய்மையும் செயல் தூய்மைக்கு வழி காட்டியாகும். ஆதலின் வினைத்தூய்மை யின்றேல் ஏனைத் தூய்மைகளால் பயனில்லை.

நாம் நமது வாழ்வில் அனுபவிக்கும் இன்ப துன்பங் களுக்கும், புகழ் பழிகளுக்கும் நாம் செய்யும் வினைகளே காரணம். நல்வினையை--நற்செயலைச் செய்தால், இன்ப மும் புகழும் பெருகும். தீய செயலைச் செய்தால், அப்பொழுது இன்பம் போல் தோன்றினும், பின்னர் துன்பமும் பழியுமே பெருகும். பின்னர் அடையப்போகும் பெருமையையும் சிறுமையையும், முன்னர் செய்யும் செயலே உரைகல்போல நின்றுணர்த்தும்.

நாம் செய்யும் நல்வினையே, அறம் பொருள் இன்பம் வீடு முதலிய உறுதிப் பொருள்களைப் பயக்கும். எனவே எல்லா நன்மைகளையும் பயக்கவல்ல நல்வினைகளையே எப்பொழுதும் செய்தல் வேண்டும். புகழும் நன்மையும்

தராத தீயவினையை எப்பொழுதும் நீக்கிவிடுதல் வேண்டும். தீய செயலால் துன்பமும் பழியுமே தொடரு மாதலின், முன் செய்த நாமே பின் வருந்த நேரும். அப்படி வருந்தும்படியான செயலைச் செய்யக்கூடாது. தவறி ஒருமுறை செய்துவிட்டாலும், மீண்டும் அதைப் போன்ற செயலைச் செய்யாமல் காத்துக்கொள்ளுதலே நன்ருகும்.

“வயது மிக்க பெற்ருேர்களும், கற்புடைமனைவியும், அன்புக் குழந்தைகளும், பசியால் வருந்தும் வறுமை யேற்படின், தீய செயல்கள் செய்தாவது அவர்கள் பசியைப் போக்குக” எனப் பிறமொழி அறநூல் கூறும். ஆனல் தமிழறங் கூறவந்த திருவள்ளுவர், முதன்மை யான உறவும், முதல் தெய்வமும் என மதிக்கத்தக்க— பெற்றெடுத்த தாய் பசித்திருக்கக்கண்டாலும், சான்ருேர் பழிக்கும்படியான தீய செயலைச் செய்யலாகாது” என்று கூறுகின்ருர்.

ஈன்ருள் பசிகாண்பா ளுயினும் செய்யற்க
சான்ரேர் பழிக்கும் வினை. (குறள்—௬௫௬)

தீய வழியில் வரும் செல்வத்தைவிட, மிக்க வறுமையே மேலானதெனச் சான்ருேர் கருதுவர். ஏனென்ருல் தீயவழிச் செல்வம் அப்போதைக்குப் பயக்கும் சிறு நன்மையைவிடப் பின்னல் பெருந் தீமையே பயக்கும். பிறர் கதறி அழும்படியாகச் சம்பாதித்த செல்வம், சம்பாதித்தவர் கதறி அழும்படியாக அவரை விட்டு நீங்கிச் சென்றுவிடும். நல்வழியில் ஈட்டிய செல்வம் ஏதாவது ஒரு காரணத்தால் நீங்கினும், பின்னர் தானே வந்து சேரும்.

தீயவழியில் ஈட்டிய செல்வமானது, தானும் அழிந்து, ஈட்டியவனையும் அழித்து விடும்.

மண்ணால் செய்யப்படும் பாண்டம் சூளையில் வைத்துச் சுடப்பட்டால்தான் வலிவு பெறும். நன்கு சுடப்பட்ட மண்பாண்டம் எத்தகைய குளிர்ச்சியையும் எத்தகைய வெப்பத்தையும் தாங்கும் ஆற்றல் பெறுகிறது. சுடப்படுந் தன்மை குறையுமளவுக்கு அதன் வலிவும் குறைகிறது. சிறிதும் சுடப்படாத மண் பானையில் தண்ணீரை ஊற்றி, அது அழியாமல் காவல் செய்ய நினைத்தால் என்ன ஆகும்? விரைவில் தண்ணீரானது வலிவற்ற பானையைக் கெடுத்துத் தானும் அழிந்துவிடும்.

அதைப் போல, மனித வாழ்க்கையும் ஒரு மண் பாண்டமே. பொருளீட்டுவதற்கு நல்வழியில் முயற்சிக்கும்போது ஏற்படும் துன்பம் என்னும் சூளையால் அது சுடப்பட வேண்டும். துன்பச் சூளையால் நன்குச் சுடப்பட்ட மனிதவாழ்வாம் பாண்டமே நன்கு வலிவு பெறும். துன்பங்களுக்கு அஞ்சிக் குறுக்குவழியிலும் தகாத வழியிலும், பொருளீட்டுவோனது வாழ்வு சுடப்படாமையால் வலிவற்ற மண்பாண்டமாகும். தகாத வழியிலீட்டிய பொருள்தான் தண்ணீர். எனவே ஒருவன் தீயவழியில் பொருளீட்டி, அப்பொருளால் தன் வாழ்வைக் காக்க எண்ணினல், அப்பொருளானது விரைவில் அவன் வாழ்வைக் கெடுத்துத் தானும் அழிந்துவிடும்.

சலத்தால் பொருள்செய்(து)ஏ மார்த்தல் பசுமண்
கலத்துள் நீர்பெய்திரீஇ யற்று. (குறள்-௬௬௦)

சலத்தால்-தீயவினைகளால். ஏமார்த்தல்-காவல்செய்தல். பசுமட் கலம்-சுடப்படாத மண்பானை.

தீயவினையால் பொருளீட்ட முயல்வோர் அடிக்கடி அரசாங்கத்தாரால், ஒறுக்கப்படுவதும், குடிமக்களிடம்

தகாத வழிகளில் அதிகமான வரிப்பணம் வாங்கும் கொடுங்கோல் அரசாங்கம் விரைவில் வீழ்ந்து படுவதும் உலகறிந்த உண்மையே. ஆதலின் தனிப்பட்ட மனிதனு யினும் பொதுத்துறையைச் சார்ந்தோராயினும், தீவினையை வெறுத்து, எவருக்கும் எத்தீங்கும் பயவாத தூயவினையால் பொருளீட்டி நல்வாழ்வு வாழ முயல்தலே சால்புடைத்தாகும்.

## 21. உருள்பெருந்தேர்க்கு அச்சாணி

தூயவினையைச் செய்யுங்கால், இடையில் நேரும் இடையூறுகளுக்கு அஞ்சித் தளராமல் செய்து முடிக்கக் கூடிய மன உறுதி வேண்டும். இத்தகைய மனஉறுதியே வினையுறுதியாகும். இவ்வுறுதி யுடையோர் யாவராலும் போற்றப்படுவர்.

மன உறுதி படைத்தோரால் செய்யமுடியாத செயலும் அடைய முடியாத பேறும் இல்லை. பரந்துபட்ட கதிரவனின் ஒளிக்கதிர்களை ஒன்று திரட்டி எரிக்கும் ஆற்றலை உண்டுபண்ணும் கண்ணாடிபோல, பல வேறு வழிகளில் செல்லும் எண்ண அலைகளை ஒன்றுபடுத்தி ஒரே வினையில் செலுத்தும் மனத் திட்பமுடையோர், தாம் எண்ணியவற்றையெல்லாம் எண்ணியபடியே அடைவர்.

> எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின். (குறள்-௬௬௬)

எண்ணியாங் கெய்துப – எண்ணியவற்றை யெல்லாம் அடைவர்.

இத்தகைய மனத்திட்ப முடையோர் வடிவில் சிறியராகவும் இருக்கலாம். பெரியவராகவும் இருக்கலாம்.

ஆதலின் அகத்தை ஆராயாமல் புறத் தோற்றமாகிய வடிவத்தைக்கண்டு யாரையும் இகழ்ந்தொதுக்குதல் கூடாது.

உருண்டு செல்வதிற்குரிய உருளைகளைப் பெற்ற மிகப் பெரிய தேரில், சிறியனவும் பெரியனவுமாக மிகப் பல பொருள்கள் உள்ளன. வலிமை வாய்ந்த அப் பெரிய தேரைத் தாங்கி உருண்டு செல்லும் பெரிய உருளைகள் கோக்கப்பட்ட பெரிய அச்சுத் தண்டின் கோடியில், உருளைக்கு வெளியே செருகப்பட்டு இருக்கும் அச்சாணி வடிவத்தில் மிகச் சிறியதே. ஆனால் அதன் செயலோ மிகப்பெரியது. பெரியதேர் சமநிலத்தில் ஓடும் போதும், மேடு பள்ளங்களில் செல்லும்போதும் உருளைகள் கழலாமல் காப்பது சிறிய அச்சாணியே. "மிகச்சிறிய பொருள்தானே" என எண்ணி அச்சாணி யில்லாமல் தேரைச் செலுத்தினால் என்னவாகும்? உருளைகள் கழன்று, தேர் சாய்ந்து, கூட்டத்தில் உள்ள மக்களை நசுக்கித், தேரும் சிதைந்துவிடும்! இவ்வளவும் நிகழாமல் காப்பது வடிவத்தால் மிகச்சிறிய அச்சாணி யன்றோ!

அதைப்போல உலக வாழ்வு இனிது நடைபெறுதற் குரிய சிறந்த செயல்களைச் செய்துமுடிக்கக் கூடிய, மனத் திட்பமும் ஆற்றலும் படைத்த பெரியோர், வடிவத்தால் சிறியவராகவோ, தோற்றத்தால் எளியவராகவோ இருக் கலாம். அத்தகைய பெரியாரின் அகத் தோற்றத்தை உணராமல் புறத்தோற்றத்தை மட்டும் கண்டு இகழ்தல் கூடாது.

> உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்(கு)
> அச்சாணி அன்னார் உடைத்து. (குறள்-௬௬௭)

எள்ளாமை-இகழாமை.

இக்குறள் கருத்துடன் காந்தியடிகளின் வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சியை ஒப்பிடலாம். உலகப் பெரியார் காந்தியடிகள் ஒரு நாள், புகைவண்டி நிலையத்தில் கைப் பெட்டியைத் தூக்கக் கூலியாள் கிடைக்காமல் வருந்திக் கொண்டிருந்த ஆங்கிலேயன் ஒருவனுக்கு உதவுவதற்காக, அவனுடைய பெட்டியையெடுத்துச் சென்று குறிப்பிட்ட இடத்தில் சேர்த்தார். ஆங்கிலேயன் கூலி கொடுத்தான். கூலிவாங்க விரும்பாத அடிகள் மறுத்து விட்டார். உண்மையுணராத ஆங்கிலேயன், "அவர் அதிக கூலி கேட்கின்றார்" என மாறுபட எண்ணிச் சினங்கொண்டு, தனது காலணியாகிய அடிபுதையரணத்தால் (பூட்ஸ்) அடிகளின் கன்னத்தில் அடித்து விட்டான். அடிகளின் ஒரு பல்லும் கீழே விழுந்து விட்டது. அடிகள் பொறுமையுடன் சிரித்துக்கொண்டே பல்லை எடுத்துக்கொண்டு போய்விட்டார். மறுநாள் ஒரு மாபெருங் கூட்டத்தில் அடிகளார் பேசினார். அக் கூட்டத்திலிருந்த ஆங்கிலேயன் அவருடைய பெருமையை உணர்ந்தான்! முதல்நாள் உருள் பெருந் தேருக் கச்சாணி யன்ன அவருடைய பெருமையை உணராமல், புறத்தோற்றத்தைக்கண்டு ஏமாந்து தான் செய்த அடாத செயலையெண்ணி மிகவருந்தி, அடிகளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

"உருவுகண் டெள்ளாமை வேண்டும்" என்பதற்கு ஔவையார் கூறும் உவமைகளை நோக்குவோம்.

தாழைமடல் பெரிது. மகிழம் பூ மிகச் சிறிது. பெரிய தாழம்பூவின் மணத்தைவிடச் சிறிய மகிழம் பூவின் மணமே இனிது. மிகப் பெரிய கடலின் நீர் குளிக்கவும் பயன்படாது. கடற்கரையின் அருகே கிடைக்கும் சிறிய ஊற்று நீர் குடிப்பதற்கும் இனிய நீராகும். அதைப்

போல, உடலால்பெரியவர் சிறிது பயனுடையவராகவும், பயனற்றவராகவும் இருக்கலாம். உடலால் சிறியவர் பெரும் பயனுடையவராகவும் இருக்கலாம். ஆதலின் உடல் சிறுமையை நோக்கி இகழ்தல் கூடாது.

மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா-கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும். (மூதுரை-கஉ)

கந்தம்–மணம். மண்ணீர்–குளிக்கும் நீர்.
உண்ணீர்–குடிக்கும் நீர்.

எனவே, வடிவத்தால் எத்தகையவராயினும், அடுக்கி வரும் துன்பங்களைக் கண்டு கலங்காமல், துணிவுடன், யாவருக்கும் நன்மை பயக்கும் சிறந்த வினையைச் செய்யும் வினைத்திட்பமுடையவரே உலகத்தால் விரும்பப் படுவர்.

## 22. நனைகவுள் யானையால் யானையாத்தல்.

தூய வினையைத் தேர்ந்து தக்க மனத்துணிவுடன் செய்யும்போது, "வினைசெயல் வகை" யையும் நன்கு அறிந்தே செய்தல் வேண்டும். எடுத்துக்கொண்ட வினைக்குரிய காலம், கருவி, இடம், பொருள் முதலிய வற்றையும், அவ்வினைக்கு எடுத்துக்கொண்ட முயற்சியி னளவும், இடையே தோன்றும் இடையூறுகளை நீக்கும் வழிகளையும், வினைமுடிந்த பிறகு ஏற்படும் பயனையும் நன்கு ஆராய வேண்டும். இங்ஙனம் எண்ண வேண்டிய வற்றை யெல்லாம் நன்கு எண்ணியதன் பிறகே செய்யத் துணிதல் வேண்டும். நன்கு சிந்திக்காமல், செய்யத் தொடங்கியதன் பிறகு எண்ணிக்கொள்வோ மென்பது இழுக்கையே உண்டாக்கும்.

நன்ருக எண்ணித் துணிந்த பிறகு இடையில் கைவிடாமல் பெருமுயற்சியுடன் செய்து முடிக்க வேண்டும். பொறுத்துச் செய்யவேண்டிய வினையைப் பொறுத்தும், விரைந்து செய்ய வேண்டிய வினையை விரைந்தும் செய்து முடிக்கவேண்டும். விரைந்து முடிக்க வேண்டிய வினையைச் சோம்பல் காரணத்தாலோ, வேறு காரணத்தாலோ அரைகுறையாக விட்டு வைத்தால், அதனுல் பெருந் தீங்கே நேரும். நாள் தோறும் நம் வாழ்க்கைக்குப் பயன்படும் நெருப்பை, அன்றன்றைய பயன் முடிந்தவுடன் அணைத்துவிட வேண்டும். அடுப்புவேலை முடிந்தவுடன், சாம்பலை அள்ளிக் குப்பையில் கொட்டுகிருேம். அச் சாம்பலில் சில நெருப்புக்கட்டிகள் நன்கு அணையாமல் நீறுபூத்த நெருப்பாக இருக்கலாம். தண்ணீர் ஊற்றி நன்கு அணைத்தே அப்புறப்படுத்த வேண்டும். அங்ஙனமின்றி அரைகுறையாக அணைத்தும் அணையாமலும் உள்ள நெருப்பைக் குப்பையில் கொட்டினுல் என்ன ஆகும்? குப்பையில் சருகு முதலியன இருக்கலாம். முதலில் நீறுபூத்த நெருப்புச் சிறிது சிறிதாக புகைந்து, குப்பையிலுள்ள சருகு முதலியனபற்றி யெரியும்! பக்கத்தே போரிருந்தால் அதுவே பற்றிக் கொள்ளும்! அருகே மாட்டுக்கொட்டம் இருந்தால் அதுவும்பற்றிக்கொள்ளும். உள்ளே இருக்கும் மாடுகளும் ...... அந்தோ! தீயில் வெந்து அழியும்! அதுமட்டுமா! சில சமயம் நாம் குடியிருக்கும் வீட்டையும் நம்மையும் அழிக்கும்! நன்கு அணைக்கப்படாத தீக்குறையின் தீமை எவ்வளவு!

அதைப்போலச் செய்யத்தொடங்கிய வினையை முடிக்காமல் விட்டு வைத்தாலும், அழிக்கத் தொடங்கிய பகையைக் குறையாக விட்டு வைத்தாலும், பெரும் தீமையே பயக்கும்.

வினைபகை யென்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும் (குறள்-௬௭௪)

எச்சம்--குறைவு. தெறும்--கெடுக்கும். தீயெச்சம்-நன்கு அணைக்கப்படாத நெருப்பு.

ஒரு பெரிய கட்டடம் கட்டத் தொடங்கினால், மழைக் காலத்திற்குள் ஓடோ, தகரமோ ஏற்றவேண்டியவற்றை ஏற்றி வேலையை முடித்துவிடவேண்டும். அங்ஙனமின்றி, எல்லாச் சுவர்களையும் எழுப்பிவிட்டு, மழைக்காலம் வந்தவுடன், மேலே மூடும் வேலையை முடிக்காமல் விட்டுவிட்டால் என்ன ஆகும்? அரும்பாடுபட்டுப் பெரும் பொருளும், உடலுழைப்பும், காலமும் செலவழித்து எழுப்பிய சுவர்கள் மழையில் கரைந்தும் இடிந்தும் பெரும் இழப்பை உண்டாக்கிவிடும்.

இந்தியா சுதந்திரம் பெற்றபொழுதே, போர்த்துகீசியர்களையும் கோவாவை விட்டுத் துரத்தி யிருக்கவேண்டும். அங்ஙனமின்றி, இந்தியாவின் பகையிலே போர்த்துகீசியரின் பகையைக் குறையாக விட்டுவைத்ததால், பதினான்கு ஆண்டுகளாக கோவா மக்கள் பட்ட தொல்லைகள் எவ்வளவு!

இந்தியாவின் வடஎல்லையில் சீனப்படை நுழைய முயன்றபோதே தடுத்திருக்கவேண்டும். அங்ஙனம் தடுக்காமல் விட்டதால் சீனப்படைகள் செய்துள்ள அநீதிகள் எத்தனை? இங்ஙனம் தான், வினையெச்சமும் பகையெச்சமும், தீயெச்சம்போல் வளர்ந்து பெரும் தீமை விளைவிக்கும்.

சிறந்த வினையைச் செய்யுங்கால் நல்லூக்கத்துடன் நல்லறிவும் வேண்டும். ஒரடியில் இருகாய் வீழ்த்தல்

போல, ஒரே முயற்சியில் இருவினைகளையும் இரண்டுக்கும் மேற்பட்ட வினைகளையும் முடிக்கும் அறிவாற்றல் வேண்டும். ஒரு பெரும் வினையைச்செய்து முடிக்கும் முயற்சியால் மற்றொரு பெரிய வினையையும் செய்து முடிக்கும் ஆற்றல் பெறவேண்டும். இதற்கு யானை பிடிப்போரின் செயலை உவமை காட்டுகின்றார் வள்ளுவர்.

மதங் கொண்டு திரியும் காட்டு யானையைப் பிடிக்க விரும்புவோர், காட்டில் ஒரு பெரிய குழியைத் தோண்டி, அக்குழியை, யானை விரும்பித்தின்னும் தழைகளால் மறைத்து, அக்குழிக்கருகில் முன்பே பழக்கி வைத்துள்ள மதயானையைக் கட்டி அருகில் தழையும் போட்டு வைத்து விடுவர். பழக்கப்பட்ட யானை தழையைத் தின்று கொண்டிருக்கும். அவ்வழியே வரும் காட்டு யானை, கட்டப்பட்டுள்ள யானையையும் ஆங்கிருக்கும் தழை-களையும் கண்டவுடன், ஆவலுடன் விரைந்தோடிவரும். தழையால் மூடப்பட்ட குழியில் காலை வைத்தவுடன் வீழ்ந்து விடும். குழிக்குள் வீழ்ந்த யானை வெளியேற முடியாமல் தவித்துக்கொண்டிருக்கும். அதன் வலிமை அடங்கும் வரை பட்டினிபோட்டு, பிறகு அதை மேலேற்றிப் பழக்குவர். இங்ஙனமே பல யானைகளைப் பிடிப்பர்.

அதைப் போலவே முயன்று செய்கின்ற ஒரு பெரிய வினையால் மற்றொரு பெரிய வினையையும் முடித்துக் கொள்ளவேண்டும். இங்ஙனமே வாழ்நாளில் செயற்கரிய பலசெயல்களைச் செய்து முடித்தல் வேண்டும்.

வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. *(குறள் - ௬௭௮)*

நனைகவுள் யானை = மதத்தால் நனைந்த கன்னத்தை யுடைய யானை. யாத்தல் = பிடித்துக் கட்டுதல்.

காவிரியின் வெள்ளப் பெருக்கால் ஏற்படும் கரையுடைப்பையும், அதனாலுண்டாகும் தீமைகளையும் தடுப்பதற்காக, மேட்டூருக்கு அருகில் இருமலைகளுக் கிடையே பாய்ந்து வரும் காவிரியின் குறுக்கே அணை யொன்று கட்ட, "கர்னல் எல்லிசு" என்ற ஆங்கிலேயர் ஒருதிட்டம் வகுத்தார். அத்திட்டத்தைப் பற்றி சர். சி. பி. இராமசாமி அவர்களின் மூலம் தமிழக அரசாங்கமும் மைசூர் அரசாங்கமும் கூடிச் சிந்தித்து நல்ல முடிவுக்கு வந்தன. அப்பொழுதிருந்த இந்திய அமைச்சரின் ஒப்புதலைப் பெற்று, 1925-ஆம் ஆண்டு மேட்டூர் அணை கட்டும் வேலை தொடங்கப்பட்டது.

அவ்வணை ஆறு ஆண்டுகளில் 4, 78, 00, 000 ரூபாய் (நான்குகோடி எழுபத்தெட்டு லட்சம்) செலவில் கட்டி முடிக்கப்பட்டது. இவ்வளவு செலவில் கட்டப்பட்ட மேட்டூர் அணை, வெள்ளப் பெருக்கைத் தடுப்பது மட்டுமன்றி, 30, 00, 000 ஏக்கர் (முப்பது லட்சம்) பாசனத் திற்கும், தமிழ்நாடு முழுவதும் விளக்கெரிவதற்கும், தொழிற்சாலைகள் இயக்குவதற்குமான மின்சாரத்தைக் கொடுப்பதற்கும் பயன் படுகிறது. "வினையால் வினை யாக்கிக் கோடல்" மேட்டூர் அணைத் திட்டத்தில் மிளிரக் காண்கிறோம்.

திரைப்பட முதலாளிகள் தன்னலத்தை மட்டும் கருதாமல் நாட்டு நலத்தையும் கருதி, சிறந்த கருத்-துக்கள் அமைந்த படங்களை மட்டும் தயாரிப்பார்க ளானால், பெரும் பொருட் செலவில் நடைபெறும் திரைப்படத் தொழிலால் முதலாளிகள் குறிப்பிட்ட இலாபம் அடைவதோடு, பண்பும் கலையும் சிறந்து நாடும் முன்னேறும். அங்ஙனமின்றி தன்னலத்தையே பெரிதெனக் கருதி, பாமர மக்களின் பணத்தைப் பறிப்

பதற்காக, மக்கள் பண்பாட்டிற்கும் ஒழுக்கத்திற்கும் ஒவ்வாத காட்சிகளையும் படமாக்கிக் கலையைக் கொலையாக்கி நாட்டின் ஒழுக்கத்தையும் கெடுக்கின்றனர்.

மக்களும், நல்ல கட்சிகளும் கருத்துக்களும் கொண்ட படங்களுக்கு மட்டும் தங்கள் காசையும் காலத்தையும் செலவழிப்பது என உறுதிகொள்வார்களேயானல், இன்பப் பொழுதுபோக்கோடு, பண்பும் கலையும் வளர்ந்து நாடும் நலமுறும். தன்னலத்தையே நாடும் படமுதலாளிகளுக்கும், தீயவற்றை நாடிப் பார்க்கும் மக்களுக்கும் "நனைகவுள் யானையால் யானை யாத்தற்று'' என்ற உவமையையும் "வினையால் வினை யாக்கிக்கோடல்'' என்ற கருத்தையும் உணர்த்துவார் யார்? நாடு உணர்ந்து நலம் பெறுவது என்று?

## 23. அகலாது அணுகாது தீக்காய்வார்.

அமைச்சர் அரசரிடம் பழகும் முறையைக் கூறும் முறையில், ஒவ்வொருவரும் தத்தமக்கு மேற்பட்ட தலைவர்களிடம் எங்ஙனம் பழகுவதென ஒரு உவமையால் வான் புகழ் வள்ளுவர் நன்கு விளக்குகின்ருர்.

குளிர்காலத்தில் காலையில் எழுந்து வீட்டை விட்டு வெளியில் வந்தவுடன் உடல் நடுங்கும்படியான குளிராக இருக்கும். அப்பொழுது சிறப்பாகச் சிறியவர்களும் பொதுவாக ஏனையோரும் ஆங்காங்குத் தீ மூட்டிக் குளிர்காய்வது வழக்கம். குளிர்காயும்போது எரிகின்ற தீயைவிட்டு அதிகம் விலகிவிட்டால், உடலுக்குச் சிறிதும் வெப்பம் தாக்காத காரணத்தால் குளிர் நீங்காது. தீயை அதிகம் நெருங்கிவிட்டால் அது உடலைச் சுட்டு விடும். அதிகம் விலகினல் பயனில்லை. அதிகம்

நெருங்கினால் துன்பம். ஆதலின் குளிர் நீங்கும் அளவுக்கு வேண்டிய வெப்பம் தாக்கும் தூரத்தில் அமர்ந்து குளிர்காய்தல் வேண்டும்.

அதைப்போல, தனக்கு மேற்பட்ட தலைவரிடம் பழகும்போது அவரைவிட்டு அதிகம் விலகி இருந்தால், அவர் மனமறிந்து செயலாற்ற முடியாது. ஆதலால் தலைவரின் அன்பை இழக்க நேரும். தலைவரிடம் அதிகம் நெருங்கிப் பழக ஆரம்பித்தால், அவருடைய வெறுப்புக்கும் சினத்திற்கும் ஆளாகநேரும். ஆதலால், தலைவரின் மனமறிந்து தன் கடமையைச் செம்மை யாகச் செய்யுமளவுக்கும், அவருக்குத் தெரிவிக்க வேண்டிய கடமைகளைத் தெரிவிக்கும் அளவுக்கும் பழக வேண்டிய அளவறிந்து பழகவேண்டும்.

அகலா(து) அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். (குறள் - ௬௯௧)

இகல் வேந்தர்-மாறுபடுதலையுடைய தலைவர்.

எனவே, எத்துறையில் பணியாற்றுவோராயினும் தம்மினும் மேம்பட்ட தலைவர்க்குக் கீழ் பணியாற்றுங்கால் தலைவர் வயதில் சிறியவராயினும், நெருங்கிய உறவின ராயினும், நீண்ட நாள் பழக்கமுடையவராயினும், அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல், "தலைவர்" என்ற ஒன்றைமட்டும் மனத்துட்கொண்டு அவர் குறிப்பறிந்தும் காலமறிந்தும் சொல்லவேண்டியவற்றை இனிமையாகச் சொல்லி, அவருக்கு முன்னால் மற்றவ ரோடு நகையாடுதலையும், இரகசியம் பேசுதலையும் விடுத்து, தம்பால் குற்றம் நேராமல் காத்துத் தம் கடமைகளைச் செவ்வனே செய்து, அகலாதணுகாது தீக்காய்வார்போல் ஒழுகுதல் வேண்டும்.

## 24. அடுத்தது காட்டும் பளிங்கு.

"எள் வேண்டும்" எனக்கேட்பாருக்கு எண்ணெயே கொண்டுவந்து தருவதுபோல, தலைவரின் குறிப்பறிந்து கூறுமலே செயலாற்றுவோர் சிறந்தவராவர். தலைவரின் உள்ளக்குறிப்பைக் கூறுமலே, ஐயமின்றித் தெளிவாக உணர்ந்து செயலாற்றுவோர் தெய்வத்திற்கொப்பாவர். இத்தகையோர் விரும்பும் பெரும் பொருள்கொடுத்தாவது அவர் நட்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

உள்ளத்தின் குறிப்பை முகமே தெளிவாக எடுத்துக் காட்டும். உள்ளத்தின் விருப்பு வெறுப்புக்களைத் தெளிவாகக் காட்டும் முகம்போல் அறிவுடைய உறுப்பும் உண்டோ? என வினவும் வள்ளுவர் குறிப்புணர்த்தும் முகத்திற்குத் தக்க உவமையும் காட்டுகின்ருர்.

கண்ணுடிக்கு எதிரே இருக்கும் பொருளின் வடிவத்தையும் நிறத்தையும் கண்ணுடியானது தெளிவாக எடுத்துக்காட்டும். நாம் கண்ணுடிக்கு எதிரே நின்று பார்த்தால், நம் முகத்தின் ஒவ்வொரு அணுவையும் கண்ணுடி நன்ருக எடுத்துக்காட்டும். நம்முகத்திலுள்ள குறைநிறைகளைப் பிறர் சொல்லாமல் அறிய வேண்டுமென்ருல் கண்ணுடியின் உதவியின்றி இயலாது.

அதைப்போல, உள்ளத்தின் விருப்பு வெறுப்புணர்ச்சியையும், உள்ளத்தில் மிகுந்திருக்கின்ற வேறு எண்ணங்களையும் முகம் தெளிவாக எடுத்துக் காட்டும். உள்ளத்து உணர்ச்சியை வாயால் சொல்லாமல் உணர்த்துவதற்கு முகம் உதவியாக இருக்கிறது.

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம் (குறள்-எ0௬)

பளிங்கு = கண்ணாடி. கடுத்தது = மிகுதியான எண்ணம்.

"உள்ளத்தின் குறிப்பை வாய் உரைப்பதற்குள் முகமே முன்னால் தெரிவித்துவிடும். முன்னத்தை — உள்ளக்குறிப்பை — முகத்தைப் போல் முன்னால் தெரிவிக்கக் கூடிய உறுப்பு வேறொன்றில்லை "என்ற உண்மையை விளம்பி நாகனார், "முன்னம் முகம்போல் முன்னுரைப்பதில்" என்று நான்மணிக்கடிகையில் தெரிவிக்கின்றார்.

சில வஞ்சனையாளர் ஏமாற்றும் நோக்கத்துடனும், சில நல்லோர்கள் தம் கவலையை நண்பர்களுக்குத் தெரிவித்து அவர்களுக்குத் துயர் தரலாகாது என்ற நன்னோக்கத்துடனும் நடிப்பால் ஏமாற்றப் பார்ப்பர். அவர்கள் முகத்தையும் கூர்ந்து நோக்கினால் உண்மை வெளிப்பட்டுவிடும். ஆயினும் கூரிய அறிவு படைத்த வர்க்கே, நடிப்பவரின் உள்ளக் குறிப்பையும் முகத்தால் அறிய முடியும். குறிப்பறியும் கூரிய அறிவுடைய நண்பருக்கு முன்னால், துயர் கொண்டோர் முகத்தைக் காட்டி நின்றாலே, அவர்கள் குறிப்பாலுணர்ந்து துயர் போக்க முயல்வர். ஆதலால்தான் இத்தகையோரைத் தெய்வத்திற் கொப்பாகக் கொள்ள வேண்டுமென வள்ளுவர் விளம்பினார்.

கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவியுடன் கூடிவாழ்ந்த காலத்து, பிரிவுத்துயராலும், கணவனின்றி இல்லறத்தோருக்குரிய அறங்கள் செய்ய இயலாமை யாலும் கண்ணகி பெரிதும் வருந்தினாள். அவளுடைய வருத்தத்தை மாமன் மாமிகள் அறிந்து வருந்தக் கூடாதென்பதற்காக, அவர்களைக் காணும் போதெல்

லாம், கவலையை மறைக்கப் பொய் முறுவல் பூத்தாள். ஆனால் அவளுடைய பொய் முறுவல் பூத்தமுகமே, பிரிவுத்துயரையும் மனக்கவலையையும் எடுத்துச் சொல்வது போல் தெளிவு படுத்திவிட்டது. கண்ணகியின் துயரறிந்து பெரியோர் வருந்துகின்றனர். இந் நிகழ்ச்சியை மதுரை மாதரி இல்லத்தில் கண்ணகி கோவலனிடத்தில் இயம்புகின்றாள்.

"...................... யாவகந் தொவித்த
நோயும் துன்பமும் நொடிவது போலுமென்
வாயல் முறுவற்கவ ருள்ளகம் வருந்தப்
போற்று ஒழுக்கம் புரிந்தீர் ......... (சிலம்பு)

நொடிவது போலும் = சொல்வது போலும்.

வாயல் முறுவல் = உண்மையல்லாத புன்னகை.

கண்ணகி நடிப்பால் தன் துயரை மறைக்க முயன்றும், அவள் நெஞ்சம் கடுத்ததை, அடுத்தது காட்டும் பளிங்கு போல் அவளுடைய முகம் காட்டி விட்டதன்றோ! வள்ளுவர் உவமை யுணர்த்தும் உண்மையின் உயர்வே உயர்வு!

## 25. அங்கணத்துள் உக்க அமிழ்து.

சொல்லாற்றல் படைத்த அறிஞர் அவையில் பேச நேரின், அவையினரது குறிப்பறிந்து பேசுதல் வேண்டும். பேசக்கூடிய அவையின் தன்மையறிந்து, அதற்கேற்றபடிப் பேசுதல் வேண்டும். அறிஞர்கள் நிறைந்த அவையில் பேசும்போது, அவர்களுக்கேற்ப உயர்ந்த நடையில் பேசவேண்டும். அறிவு குறைந்தோர் அவையில் பேசும்போது, அவர்களுக்கேற்ப எளிய நடையில் பேசவேண்டும்.

தம்மின் அறிவில் மிக்கார் அவையில் தாமாக முந்திக்கொண்டு பேசாத அவையடக்கம் வேண்டும். பேச நேரும்போது தவறில்லாமல் பேசுதல் வேண்டும்.

யாவரும் போற்றும் வண்ணம், பல துன்பங்களுக் கிடையிலும், நன்னெறி தவருமல் வாழும் உயர்ந்தோர் ஒருவர் திடீரென நெறிதவறி, தவருனவழியில் சென்ருல் என்ன ஆவர்? தலையினிழிந்த மயிரைப்போல இழித் தொதுக்கப்படுவர். அரும்பாடுபட்டுத் தேடிய மதிப்பு, பெருமை, புகழ் யாவும் போய்விடும்.

அதைப்போல, கற்ருர் ஒருவர், தம்மினும் மிகக் கற்ற பேரறிஞர் அவையில் தவறுண்டாகும்படிப் பேசிவிட்டால், அறிஞரால் பழிக்கப்பட்டு, கல்விப் பெருமையையும் அதுவரை பெற்ற புகழையும் இழந்து விடுவார்.

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு. (குறள்-எகசு)

ஆற்றின்-நல்லவழியினின்றும். வியன்புலம்–அகன்ற நூற்பொருள்களாகிய அறிவு. இழுக்கு–சொல் குற்றம்.

நன்கு கற்றறிந்தவர் தம்மைப்போல் நன்கு கற்றறிந்தவர் அவையிலேயே பேசவேண்டும். குற்றமற ஆராயும் அறிவுடையார் முன் பேசுபவரின் கல்வியும் அறிவும் மேம்பட்டு விளங்கும்.

நன்செய்ப் பயிருக்கு அதிகநீர் தேவை. புன்செய்ப் பயிரின் வளர்ச்சிக்கு ஈரப்பசையே போதுமானது. ஆதலின் புன்செய்ப் பயிருக்குப் பலநாட்களுக்கு ஒரு முறை நீர் பாய்ச்சுவதற்குப் பாத்தி தடுத்திருப்பார்கள். சில புன்செய்ப் பயிர்களுக்கு மிகக்குறைந்த ஈரப்பசையே போதுமானது.

நிலத்திலுள்ள ஈரப்பசையைக் கொண்டு தானே வளரும் ஆற்றல் பொருந்திய பயிருள்ள நிலத்தில், பாத்தி தடுத்து நீர் பாய்ச்சினுல், அப்பயிர் மிகநன்ருகச் செழித்து வளரும்.

அதைப்போல, தாமே உணரும் ஆற்றல் படைத்த அறிஞர்கள் நிறைந்த அவையில் கற்றறிந்தார் பேசினுல், அவையினரின் அறிவு மேலும் செழித் தோங்கும்.

உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. (குறள்-எகஅ)

உணர்வதுடையார்—தாமே உணரும் அறிவுடையார்.

கற்ருேர் அவையில் நன்கு பேசும் ஆற்றல் படைத்த அறிஞர் கல்வியறிவில்லாத அற்பர் கூட்டத்தில் மறந்தும் கூடப் பேசுதல் கூடாது.

உயிர் வாழ்க்கைக்குரிய உணவாகிய அமிழ்தம், ஒருவரிடம் நிறைய இருக்கின்றது. உடையவர் தம்மிட மிருக்கும் அதிகமான அமிழ்தைப் பல்லுயிருக்கும் பகுத்துக் கொடுத்தலே சிறப்புடைத்து. பெற்ற உயிரும் உண்டு மகிழும்! வாழும்! அங்ஙனமின்றி அவ்வமிழ்தத் தைச் சாக்கடையில் கொட்டினுல் என்ன ஆகும்? சாக்—கடையில் கொட்டிய அமிழ்தை நாயும் முகராதே! எவ்வுயிருக்கும் பயனின்றிக் கொட்டப்பட்ட சாக்கடைக் கும் பயனின்றி அவ்வமிழ்தம் பாழாகும்.

அதைப்போல, கற்றறிந்த அறிஞர், அறிவற்ற அற்பர் கூட்டத்தில் பேசினுல், அவருடைய அறிவு சான்ற பேச்சு எப்பயனுமின்றிப் பாழடைந்துபோகும். ஆதலால் அறிஞர் அற்பர் கூட்டத்தில் பேசுதல் கூடாது.

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றல் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல். (குறள்-எ௨௰)

அங்கணத்துள் — சாக்கடையுள். உக்க — கொட்டிய. தங்கணத்தர் — தம்மினத்தாராகிய அறிவுடையார். கோட்டி கொளல் — பேசுதல் கூடாது.

ஆதலின் கல்வியறிவும் அவையஞ்சாச் சொல்லாற்றலும் உடையோர் அறிந்து பேசும் ஆற்றலும் எய்தி, அறிவற்ற அற்பரிடையே பேசுதலை நீக்கி, எளிய அறிவு படைத்தோரிடையே எளிய நடையிலும், பேரறிவு படைத்தோரவையில் தம் பேரறிவு தோன்றவும் பேசிப் பயனீந்து புகழ் பெறுதல் வேண்டும்.

## 26. இல்லாரேரொடொப்பர்.

சொல்லின் தொகைவகைகளை அறிந்த தூய அறிஞர், அவையின் தன்மையை அறிந்து, கற்றுவல்ல அறிஞர்சான்ற அவையில் பேசுங்கால் வாய்சோராமல் பேசுவர். இங்ஙனம் கற்றார் அவையில், தாம் கற்றவற்றை நன்றாக எடுத்துப் பேசுவோர், கற்றவருள் தலைசிறந்தவராகப் போற்றப்படுவர். இங்ஙனம் அவையஞ்சாது பேசும் சொல் வீரர் மிகச் சிலரே. போர்க்களத்தில் சாவுக்கஞ்சாத வீரரோ மிகப்பலர்.

தாம் கற்றறிந்தவற்றைக் கற்றாரவையில் நன்கு எடுத்துக் கூறி, தம்மைவிட மிகுதியாகக் கற்றவரின் பேச்சைக் கேட்டுத் தாம் கற்காதவற்றை அறிந்து கொள்ள வேண்டும். அவையோர் வினாக்களுக்கு அஞ்சாது பதில் உரைக்கும் வகையில் பல நுண்ணிய நூல்களைக் கற்றும் கேட்டும் அறிவைப் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

நூல்களைக் கற்கத்தொடங்கும்போதே அவையில் பேசிப் பேசி அவையஞ்சாத்தன்மையையும் வளர்க்கத் தொடங்க வேண்டும். அவையச்சத்தைப் போக்க முயலாமல் பலநுண்ணிய நூல்களைக் கற்றும் பயனில்லை.

போரிடும் ஆற்றலும் அஞ்சாநெஞ்சமும் இல்லாதவர் கையிலிருக்கும் கூர்மையான பெரிய வாளினால் யாது பயன்? அதைப்போல, கற்றோர் நிறைந்த அவைக் கண் பேச அஞ்சுபவர் கற்ற நூல்களால் யாது பயன்? ஒருபயனுமில்லை. துணிவில்லாதவர் பலநாள், வாள் பயிற்சி பெற்றிருப்பினும் அவர் கையில் பிடித்த வாளினால் எப்பயனுமில்லை. அங்ஙனமே கற்றோரவையின் கண் பேச அஞ்சுவோர், தாம் பல்லாண்டுகள் மிக அரும் பாடுபட்டுக் கற்ற நூல்களால் எப்பயனுமில்லை.

> வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
> நுண்ணவை யஞ்சு பவர்க்கு. (குறள்-எ௨௬)

போர்க்களத்தில், ஒரு பக்கத்தில் வீரர் பலர் போர் செய்யத் துடித்துக்கொண்டிருக்கின்றனர்! எதிர்ப் பக்கத்தில் ஆண்மையற்ற பேடி யொருத்தி நிற்கின்றாள். அவள் கையில் கூரிய வாளும் இருக்கின்றது; இருந்தும் பயன் என்ன? போர் செய்யத் துடிக்கும் வீரர்களுக்கும் பயனில்லை! வாள்பிடித்த பேடிக்கும் பயனில்லை!

அதைப் போல, கற்றோர்பலர் அறிவு வேட்கை கொண்டு குழுமியுள்ளனர்! அவர்கள் முன்பு, பல நூல் களை நன்கு கற்றறிந்த அறிஞன் ஒருவன் பேச எழுந்து நிற்கின்றான்! அவையினரின் ஆவல் அதிகமாகின்றது. பேச நிற்கும் அறிஞன் அவையச்சத்தால் நடுங்கு கின்றான். வாயிலிருந்து சொற்கள் வெளிப்படவில்லை. அவன் அரிதின் முயன்று கற்ற நூல்களால் யாருக்கு

யாது பயன்? பிடித்தோன் குற்றத்தால் வாள் பயனற்றுப் போதல் போல, கற்றோன் குற்றத்தால் கற்றறிந்த நூல்களும் பயனற்றுப் போகின்றன.

பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவையகத்(து)
அஞ்சு மவன்கற்ற நூல். (குறள்-எ௨எ)

ஆதலின், அவையில் நன்றாகப் பேச இயலாதார் பல நூல்களைக் கற்றறிந்தவராயினும் பயனற்றவரே. அத்தகையோர் கல்லாதவரினும் கீழ்ப்பட்டோரேயாவர்.

“அரிதரிது மானிடராதலரிது” என்றார் தமிழ் மூதாட்டியார். செயற்கரிய செய்து புகழ் பெறுதலே பெறுதற்கரிய மானிட உடலின் பயனாகும். இயக்கமுள்ள உடலே செயல்புரிய இயலும். உயிருள்ள உடலே இயங்கும். உயிரற்றஉடல் இயங்குமா? இயக்கமற்ற உடலால் பயனுண்டா? எப்பயனுமில்லை.

கல்வியறிவால் நிறைவுறுதலே மானிடவாழ்வின் சிறந்த பயன். தாம் கற்ற அறிவை மூடிவைக்காமல் வெளிப்படுத்திப் பிறரும் பயனுறச் செய்தலே கல்வியின் பயன். அறிவை வெளிப்படுத்திப் பலரும் பயன்பெறச் செய்ய, அவையஞ்சாச் சொல்லாற்றலே சிறந்த கருவியாகும். ஆதலின் கற்றவற்றை அவையில் நன்கு எடுத்துச்சொல்ல அஞ்சுவோர், மானிட வாழ்வின் நிறைந்த பயனைப் பெறாதவராகையால் உயிரோடிருப்பினும் செத்தவர்க்கொப்பாவர். அவரால் எப்பயனும் எவருக்கும் இல்லை.

உளரெனினும் இல்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். (குறள்-எ௩0).

களன்-கற்றோர் நிறைந்த அவை.

ஆதலின் மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் நிறைந்த கல்வியும் அவையஞ்சாச் சொல்லாற்றலும் பெற்றுத் திகழ்தல் வேண்டும்.

## 27. குன்றேறி யானைப் போர் காணல்.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கும் மக்கள் அடைய வேண்டிய உறுதிப்பொருள்களென நல்லோர் நவில்வர். 'வீடு' என்பது கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டா மறுமைப் பயனாகலின், திருவள்ளுவர் தாம் இயற்றிய ஒப்பற்ற திருக்குறளை, அறம், பொருள், இன்பம் எனும் முப்பாலாக வகுத்தார். இம் மூன்றனுள் இடையிலுள்ள பொருளை யெய்தியோர் ஏனை யிரண்டையும் எளிதில் அடைவர். இம்மூன்று பேற்றையும் நன்கு துய்த்தோரே வீடும் எளிதில் எய்த இயலும். எனவே ஏனைய உறுதிப்பொருள்களுக்கெல் லாம் அடிப்படையாகத் திகழும் பொருளைப் பெறுதவர் கொல்லன் உலைக்களத்தில் காய்ச்சி அடிக்கப்படும் இரும்புபோல், வாழ்வில் பல தொல்லைகளை அடைவ-ரென நாலடி நவிலும்.

'பணம் பந்தியிலே குலம் குப்பையிலே', பணமென் ருல் பிணமும் வாயைத் திறக்கும்', 'ஈட்டி எட்டியமட்டும் பாயும் பணம் பாதாளமட்டும் பாயும்', 'கால் காசு கட்டத்தில் கிடைக்கக் கண்டாலும் அதை நாக்காலே நக்கியெடுக்கக் கூசார்', 'காசாலேசா' என்பன போன்ற பழமொழிகள் பொருளின் பெருமையை உணர்த்துவன வன்ரே?

தெய்வப்புலவர் திருவள்ளுவனாரும் பொருளின் பெருமையை உணர்த்தவே, 'பொருள் செயல் வகை' என ஓர் அதிகாரம் வகுத்ததன்றி, பொருட்பாலை

ஏனைய இருபால்களினும் மிகப் பெரிதாக வகுத் தருளினர் போலும். இத்தகைய பொருளைப்பற்றி வள்ளுவர் கூறுவன வற்றையும், அதன் சிறப்பிற்குக் கூறும் உவமையையும் நோக்குவோம்.

எதற்கும் தகுதியற்றவனையும் ஒரு பொருளாக மதிக்கச் செய்யும் பொருளைவிடச் சிறந்த பொருளில்லை. 'உலகோர், ஏழையரை ஏளனமும், செல்வரைச் சிறப்பும் செய்வர். பொருளென்ற நந்தா விளக்கு, செல்லு மிடமெல்லாம் பின் தொடர்ந்து வந்து ஆங்குள்ள துன்ப இருளை நீக்கும். அறவழியில் ஈட்டிய பொருள் அறத்தையும் இன்பத்தையும் கொடுக்கும். எனவே, தீ வழியில் வரும் பொருளை வெறுத்தொதுக்க வேண்டும். அன்பு ஈன்றெடுத்த 'அருள்' என்ற குழந்தையைப் போற்றி வளர்க்கும் சிறந்த செவிலித் தாயாக விளங்குவது பொருளேயாகும். பகைவரின் செருக்கை யழிக்கும் கூரிய கருவி பொருளைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை. இத்தனைச் சிறப்புக்களையுடைய பொருளை வேண்டிய அளவு ஈட்டியோர்தான் எச் செயலையும் எளிதில் இயற்ற இயலும். பொருளற்றோர் சிறந்த செயலாற்றத் தொடங்கின் பலவித இன்னல் களுக்குள்ளாவர்.

ஒருயர்ந்த குன்று. அதன்கீழ் கீழ் இரண்டு மதயானைகள் கடும்போர் செய்கின்றன. யானைப் போரைக் காணவிரும்புபவன் கீழேயே நின்று பார்த்தால் பலவித இன்னல்களுக்குள்ளாவான். யானைகள் ஒன்றை யொன்று துரத்திக்கொண்டு பல இடங்களுக்கு ஓடலாம். மரங்களின் மறைவில் சென்று போரிடலாம். அப் பொழுது வேடிக்கை பார்ப்பவனும் பின் தொடர்ந்து ஓடவேண்டும். பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது,

போரிடும் யானை பின்னேக்கி வந்து அவனை மிதித்து நசுக்க நேரலாம். மதயானைகளின் வெறியும் சினமும் அவன்பால் திரும்பவும் செய்யலாம். அந்தோ! உயிருக்கே ஆபத்தன்றே? அங்ஙனமின்றி, குன்றின் உச்சியில் ஏறி அமர்ந்து வேடிக்கை பார்த்தால், யானைகள் எங்குச் சென்று போரிட்டாலும், பார்ப்பவன் கண்களுக்கு நன்ருகத் தெரியும். எவ்வித அச்சமும் துன்பமுமின்றி யானைப் போரைக் கண்டு களிக்கலாம்.

அதைப்போல, கையில் பொருள் வசதியில்லாமல் சிறந்த செயலைச் செய்யத் தொடங்கினுல், இரவும் பகலும் தன் உடலை வாட்டி உழைத்தும், வறுமை யாலும் கடனுலும் நசுக்கப்பட்டும் அழிய நேரிடும். கையில் பொருள் நிறைய வைத்துக்கொண்டு வினை யாற்றத் தொடங்கினுல், எவ்விதக் கவலையுமின்றி, உட்கார்ந்து கொண்டே ஆட்களை யேவி, எளிதில் வினையை முடித்து இன்பம் எய்தலாம்.

> குன்றேறி யானைப்போர் கண்டற்றுல் தன்கைத்தொன்
> றுண்டாகச் செய்வான் வினை. (குறள்-எருஅ)

கைத்தொன்றுண்டாக = கையில் பொருள் உண்டாக.

எனவே அறவழியில் மிக்க பொருளையீட்டி அறம் செய்தும், இன்பந் துய்த்தும், தக்க வினையாற்றியும் புகழ்நிலை யெய்த ஒவ்வொருவரும் முயல்தல் வேண்டும்.

## 28. உடுக்கை யிழிந்தவன் கை.

'நண்பனே தெய்வம்' என்ருர் இங்கர்சால். கண் ணுல் காணுமல் காதால் கேட்டு உணர்ச்சியால் ஒன்றிய நண்பருடன் சேர்ந்து உயிர் விட்டார் பிசிராந்தையார் என்னும் பெரும்புலவர். நட்பைப்போல செயற்கரிய

சிறந்த பொருளோ, துன்பம் நீக்கும் காவலோ வேறொன்றும் இல்லை.

முகத்தால் மட்டும் சிரித்துப் பழகாமல் உள்ளமும் மகிழும் படியாக உள்ளன்புடன் பழகி, தவறு செய்யும் போது இடித்துக்கூறித் திருத்தி நல்வழிப்படுத்தி, இன்ப துன்பங்களை உடனிருந்து அனுபவிப்பதே உண்மையான நட்பு. இத்தகைய நல்ல நட்புதான் நாள்தோறும் வளர்ந்து இன்பம் தரவல்லது. தீய நட்பு துன்பத்தைப் பெருக்கிவிட்டுத் தேய்ந்து அழிந்து விடும்.

வளர்பிறைத் திங்கள் முதலில் சிறிதாகத் தோன்றி, நாள் தோறும் சிறிது சிறிதாக வளர்ந்து ஒளியைப் பெருக்கி முடிவில் முழுநிலவாகிப் பேரொளி வீசுகிறது. மற்றும் வளர்பிறை மாலைக் காலத்திலேயே தோன்றி விடுவதால், கதிரவன் மறைவால் உண்டாகும் இருளைப் போக்கி, நடமாடும் மக்கள் உறங்கும்வரை அவர்களுக்கு ஒளிதந்து உதவுகிறது. வளர்ந்து முழு நிலவானவுடன் மறைந்த கதிரவன் தோன்றும் வரை ஒளி வீசி உலகில் இருளே இல்லாமல் செய்து விடுகிறது.

அதைப்போல நல்லோர்கள் நட்பு முதலில் சிறிதாகத் தோன்றி, நாள்தோறும் சிறிது சிறிதாக வளர்ந்து இன்பத்தைப் பெருக்கிக் கொண்டே செல்லும். நட்பு வளருங்கால், துன்பக்காலத்து விட்டுப் பிரியாமல் உடனிருந்து இயன்ற உதவி செய்துகொண்டே இருக்கும். நட்புப்பெருகி வளர்ந்த உடன் எப்பொழுதும் விட்டுப் பிரியாது, உடனிருந்து பேரின்பம் பயந்து, துன்பமே இல்லாமல் செய்துவிடும்.

தேய்பிறைத் திங்கள் முதலில் பெரிதாகத் தோன்றி இரவு முழுவதும் ஒளிவீசி, பின்னர் சிறிது சிறிதாகக் குறைந்தும், மங்கியும் மக்கள் நடமாடும் முன்னிரவில் இருளைப்போக்க உதவாமல், அவர்கள் உறங்கியதன் பிறகு வானத்தில் தோன்றி, மங்கிய ஒளியையும் ஒருவருக்கும் பயன்படாமல் வீசி, இறுதியில் அழிந்தே விடும்.

அதைப்போல தீயோர் நட்பு முதலில் பெரியதாகவும் ஆரவாரமாகவும் தோன்றிப் பின்னர் வரவரக் குறைந்து, துன்பக்காலத்து உதவாமல், வீணே முகத்தால் மட்டும் சிரித்துப் பழகி, துன்பமிக்க காலத்து அதுவுமின்றிக் குறைந்து அழிந்து விடும்.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. (குறள்-எஅஉ)

நீரவர் கேண்மை = நல்லோர் நட்பு, பிறை நிறை நீர = வளர் பிறை வளர்தல் போல.

வான்மதியின் தன்மைகளனைத்தையும் நன்கு கூர்ந்து நோக்கி, நல்லோர் நட்புக்கும் தீயோர் நட்புக்கும் உவமையாக்கி ஒன்றே முக்கால் அடியால் அடக்கித் தெளிவுபடுத்தியிருக்கும் திருவள்ளுவரின் திறமை என்னே! என்னே!! இச்சீரிய உவமைக் குறளின் திறத்தையே,

"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு" (நாலடி—கஉரு)

என்று நாலடி விரித்து விளம்புகின்றது.

நல்லோர் நட்பு, கரும்பை நுனியிலிருந்து தின்று சுவைப்பது போன்றது என்றும், தீயோர் நட்பு, கரும்பை அடியிலிருந்து சுவைப்பது போன்றது என்றும் நாலடி நவில்கின்றது.

பண்புமிக்க பெரும் புலவரால் இயற்றப்பட்ட சிறந்த இலக்கிய நூல், கற்போருக்குச் சொல்நயம், பொருள் நயம், அணிநயம், தொடைநயம் முதலிய சுவைகளைப் பயக்கும்! மேலும் மேலும் அந்நூலையே திரும்பத் திரும்பக் கற்கத்தூண்டி, தொட்டனைத்தூறும் மணற்கேணிபோல், கற்கக்கற்க புதியபுதிய அறிவுகளையும் புதியபுதிய சுவைகளையும் தரும்! வற்றாத வளமிக்க ஆறுபோலப் பல்வகைத் திணைகளையும் துறைகளையும் காட்டி அறிவு வளத்தைப் பெருக்கும்! தீய நெறியினின்றும் நீக்கி நன்னெறிப்படுத்தும்! வாழ்க்கைத் துன்பங்களை மறக்கச்செய்து இன்பமூட்டும்! அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கனையும் கொடுத்துத் தெய்வநிலையெய்துவிக்கும்!

அதைப்போல, பண்புமிக்க அறிஞரிடம் கொண்ட நட்பு, மீண்டு மீண்டும் அவருடன் நெருங்கிப் பழக வேண்டும் என்ற ஆவலைத் தூண்டும். பழகப்பழக இன்பமும் அறிவும் பயக்கும்! வாழ்க்கைத் துன்பத்தைப் போக்கி இன்பத்தைக் கொடுக்கும்! அல்லன செய்யுங்கால் இடித்துக்கூறி நல்வழிப்படுத்தும்! உறுதிப்பொருள்களை யெய்தும் நெறிகாட்டி தெய்வநிலைப் படுத்தும்!

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. (குறள்-எஅங)

நவில்தொறும்–கற்கக்கற்க; பயில்தொறும்–பழகப்பழக. தொடர்பு–நட்பு

குறள் காட்டும் இவ்வுவமைக்குச் சான்ருக, நவில் தொறும் நயம்பல பயக்கும் சிறந்த நூலாகத் திருக் குறளே திகழ்கின்றது! இந்நூலுக்குத்தான் எத்தனை உரைகள்! இந்நூலைப்பற்றி எத்தனை ஆராய்ச்சிக் கட்டுரைகள்! எத்தனை விளக்க உரைகள்! எத்தனை மொழிபெயர்ப்புக்கள்! எத்தனை மேடைப் பேச்சுக்கள்! எத்தனை போற்றுதல்கள்! எத்தனை எத்தனை உவமை இன்பங்கள்!! அம்மம்ம! நவில்தொறும் நயம்பல பயக்கும் திருக்குறளின் பெருமையே பெருமை!!

நட்பின் சிறப்பிற்குக் குறள் காட்டும் மற்ருெரு உவமை யின்பத்தையும் சுவைப்போம். கற்ருேர் நிறைந்த அவையில், கல்வியறிவும், அவையஞ்சாச் சொல்லாற்றலும் நிறைந்த அறிஞர் ஒரு சிறந்த பொருள்பற்றிச் சொற்பெருக்கு ஆற்றிக் கொண்டுளார். அவர் வாயினின்றும் பொருள் நிறைந்த சொற்களை மழைபோல் பொழிந்து கொண்டுள்ளார்! கேட்கும் அவையோரும் சொற்பொழிவால் கவரப்பட்டுத் தம்மை மறந்து சொற்பொழிவாளரின் வாயையே நோக்கிக் கொண்டுள்ளனர்! இந்நிலையில் சொற்பொழிவாளரின் ஆடை சிறிதுசிறிதாக அவிழ்ந்து இடுப்பினின்றும் நழுவிக்கொண்டுளது! இந்நிலை யாருக்குந் தெரிய வில்லை! சொற்பொழிவாளரின் கவனம் சொற்பொழி வினின்றும் திரும்பவில்லை! வாய் சோரவில்லை! ஆனுல் சொற்பொழிவாளரின் கைகள் மட்டும் ஆடையிழிவதை யுணர்ந்து விரைந்து சென்று ஆடையைத் தாங்கிச் சரிசெய்கின்றன! என்னே கைகளின் இயல்பு!

அதைப்போல, நண்பருக்குத் துன்பம் நேர்ந்த காலத்தில் அத்துன்பத்தை அவர் உணர்வதற்கு முன்பே தான் உணர்ந்து விரைந்து சென்று நீக்குவதே உண்மையான நட்பின் இயல்பாகும்.

உடுக்கை யிழிந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. (குறள்-எஅஅ)

உடுக்கையிழிந்தவன் — ஆடை நழுவியவன். இழிதல்— நழுவி மேலிருந்து கீழிறங்குதல் — ஆங்கே — அப் பொழுதே. இடுக்கண்—துன்பம். களைதல்—நீக்குதல்.

உடுக்கை யிழத்தலுக்கும் இழிதலுக்கும் உள்ள வேறுபாடுணர்தல் வேண்டும். பழைய உரையாசிரி யர்கள் அனைவரும் 'உடுக்கை யிழந்தவன்' என்றே பாடங் கொண்டுள்ளனர். 'உடுக்கையிழந்தவன் கை போல' என்ற சொற்றொடருக்குப் 'பரிப்பெருமாள்' என்பார் மட்டும், உடை யிழந்தவன் கை குறிப்பின்றித் தானே சென்று மறைக்குமாறு போல' என நேரிடை யான பொருள் கொண்டுள்ளார். ஏனைய உரையாசிரி யர்கள் அனைவரும் ,இழிந்தவன்' என்ற சொல்லுக்குரிய பொருளையே 'இழந்தவன்' என்ற சொல்லுக்குக் கொண் டுள்ளனர். ஆதலின் மூலபாடமே 'இழிந்தவன்' என்று தான் இருந்திருத்தல் வேண்டும்.

ஏடு பெயர்த் தெழுதியோனுடைய கவனக் குறை வால் இதைப்போன்ற வேறுசில பிழைகளும் நேர்ந் துளதாக, கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனர் தம் ஆய்வுரையில் கூறியுள்ளார். தமிழ்ப் பெரியார் திரு வி. க. அவர்கள், பாடமாற்றம் செய்ய மனச்சான்று இடம் கொடாமையால், பலவிடங்களில் உரையைமட்டும் மாற்றிக் கூறியுள்ளார்.

எனவே, 'உடுக்கையிழிந்தவன்' என்ற இப்பாட மாற்றமும், இதுவே முடிந்த முடிபாகாது, அறிஞர்களின் ஆய்வுக்குரியதாகும்.

நட்பின் சிறப்பிற்கு வள்ளுவர் கூறிய உவமைகளின் திறத்தையும், நட்பின் மேம்பாட்டையும் உணர்ந்து தீயோர் நட்பை நீக்கி, நல்லோர் நட்பைப் பெருக்கி நானிலத்தோர் நலம் பெறுதல் வேண்டும்.

## 29. உள்ளற்க உள்ளம் சிறுகுவ.

நட்புகொள்ளுவதற்கு முன்பு நன்கு ஆராய்ந்தே நட்பு கொள்ளுதல் வேண்டும். பேயொடு பழகினும் விடுதலரிது. ஆகையால் நட்பு கொண்டபின் விடுதலை யில்லை. ஆராயாமல் தீயவனோடு நட்பு கொண்டு விட்டால், அந்த நட்பு தான் சாதற்குக் காரணமான துன்பத்தையே கொடுக்கும். ஆதலால் ஆராயாமல் நட்பு செய்வது பெருந் தீமையாகும்.

நட்பு செய்தற்குரியாரின், குணம், குடிப்பிறப்பு, குற்றம், குறையாச்சுற்றம் ஆகிய அனைத்தையும் நன்கு ஆராய்ந்த பின்பே நட்பு கொள்ளுதல் வேண்டும். உயர் குடியில் பிறந்து, பழிச்சொல்லுக்கு அஞ்சும் இயல்பும், தவறு செய்யுங்கால் வருந்தும்படியாக இடித்துக் கூறித் தடுத்து நல்வழி காட்டும் தன்மையும் உடைய நல்லவருடனே நட்பு கொள்ளுதல் வேண்டும். துன்பக்காலத்தில் கைவிடும் அற்பருடனும், அறிவற்ற வருடனும் நட்புக்கொள்ளாமல் நீக்கிவிடுதல் வேண்டும்.

தன் வலிமைக்கு மிஞ்சிய செயலைச் செய்யத் தொடங்கினால் இடையிலே ஊக்கங்குன்றிச் செயலைக் கைவிட நேரிடும். உழைப்பிற்கேற்ற பயன்தராத செயலைச் செய்யத் தொடங்கினாலும், இடையிலே ஊக்கங் குன்றிக் கைவிட நேரும். இங்ஙனம் பாதியில் கைவிட்டுவிடுவதால், அதுவரையான, உடலுழைப்பும்,

காலச் செலவும், பொருட்செலவும் வீணுகிப் பயனற்றுப் போகும். பிறகு நல்லசெயலிலும் ஊக்கந் தோன்ருமல் போதலும் கூடும். ஆதலால் ஊக்கங் குன்றும்படியான செயல்களைச் செய்வதற்கு மனத்தில் நினைத்தலும் கூடாது.

அதைப் போல, துன்பக் காலத்துக் கைவிடுவார் நட்பினை ஏற்றுக்கொள்ளுதலும் கூடாது. அற்பர், நமது இன்பக் காலத்து, நம்மை விட்டு நீங்காது இன்பத்தில் பங்கு கொண்டு இருப்பர். அவர் துன்பக் காலத்துதவு வார் என்றும், துன்பத்திலும் பங்கு கொள்வார் எனவும் நம்பியிருப்போம். துன்பம் வந்தவுடன் துன்பத்தை நீக்க உதவாமலும், துன்பத்தில் பங்கு கொள்ளாமலும் கைவிட்டு ஓடிவிடுவார். நாம் ஆதர வற்று அழிய வேண்டியதுதான். ஆதலால் அத்தகை யோர் நட்பை யேற்க மனத்திலும் எண்ணுதல் கூடாது.

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு. (குறள்-எ௯அ)

உள்ளஞ் சிறுகுவ-ஊக்கங் குன்றும் படியான செயல்கள்.
அல்லற்கணுற்றறுப்பார்-துன்பக்காலத்துக் கைவிடுவார்.

ஆதலால் நட்பு கொள்ளுவதற்கு முன் நன்ருகப் பலவழிகளிலும் ஆராய வேண்டியவற்றை யெல்லாம் ஆராய்ந்து குற்றமற்ற நல்லோர் நட்பை யேற்றுக் கொள்ளுதல் வேண்டும். தீயோர் நட்பை, அவர் விரும்பும் பொருள் கொடுத்தாவது நீக்கி விடுதல் வேண்டும்.

## 30. அமரகத்து ஆற்றறுக்குங் கல்லாமா

மிக்க அன்பு செலுத்தினாலும், பண்பற்ற அற்பர் நட்புப் பெருகுவதை விடக் குறைவதே மேலாகும். கொட்டியும், ஆம்பலும் போலாது அற்ற குளத்து அறுநீர்ப் பறவை போல, பயன் கிடைக்கும் காலத்து நட்பு கொண்டு, பயனில்லாக் காலத்தில் விட்டுநீங்கும் அற்பருடைய நட்பைப் பெறுவதால் நன்மையோ, இழப்பதால் தீமையோ இல்லை. நட்பின் அளவை நோக்காது, நட்பினால் கிடைக்கும் பயனை ஆராய்வாரும், பொருள் கொடுப்பாரை விரும்பாமல் பொருளையே விரும்பும் பொது மகளிரும், பிறர் துன்பங்கருதாமல் சோர்ந்திருக்கும் நேரத்தையே நோக்கும் கள்வரும் தம்முள் ஒப்போர் ஆவர்.

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். (குறள்—அகங)

உறுவது—தமக்கு வரும் பயன். பெறுவது கொள்வார்—பொதுப்பெண்டிர். நேர்—ஒப்பாவார்.

போர் செய்யும் ஆற்றல் முதலியன அறியாத குதிரை, தன்மீது இருப்போனைத் தான் வீதியில் செல்லும்போதெல்லாம் தாங்கிக்கொண்டிருந்து, பகை வீரர்கள் நிறைந்துள்ள போர்க்களத்திற்குச் சென்றவுடன், கீழே வீழ்த்திவிட்டுத் தான் மட்டும் ஓடிவிடும். அவ்வறிவில்லாக் குதிரையை நம்பி வந்த வீரனும் எளிதில் பகைவர்களால் அழிக்கப்படுவான்.

இக்குதிரை போன்றவரது நட்பானது, ஆதரவற்ற தனிமையால் ஏற்படும் துன்பங்களைவிட அதிகமான துன்பங்களைக் கொடுக்கும். ஏனெனில் இன்பக்

காலத்துத் தாங்குவார் போலிருந்து, உயிருக்கே இறுதி பயக்கும் பெருந்துன்பத்தில் கொண்டு சேர்த்து, அத் துன்பத்தை நீக்கத் தெரியாமல் கைவிட்டு ஓடிவிடுவர். ஆதலால் அத்தகையோர் நட்பைவிடத் தனிமையே மேலானது.

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா அன்னார்
தமரில் தனிமை தலை. (குறள்-அகசு)

அமரகத்து-போர்க்களத்தில். கல்லாமா-போர்த்தொழில் கல்லாத குதிரை. தமரில்-நட்பைவிட

ஆதலின் பண்பற்றோர், அறிவற்றோர், துன்பக் காலத்தில் கைவிடுவோர், வீட்டில் புகழ்ந்து கூறி மன்றத்தில் பழித்துக் கூறுவோர், சொல்வேறு செயல் வேறுபட்டார் போன்றவர்களின் தீநட்பைக் கனவிலும் கருதாமல் நீக்குதல் வேண்டும்.

## 31. மகளிர் மனம் போல

பகைமையான உள்ளம் கொண்டோர் நல்ல நூல்கள் பல கற்றிருப்பினும் மனந்திருந்தி நட்பிற் குரியராகார். அகத்தே வஞ்சனை கொண்டு, முகத்தே இனிமை காட்டிப் பழகும் வஞ்சகப் பகைவரை அஞ்சி நீங்குதல் வேண்டும். பகையுள்ளங்கொண்ட வஞ்சகர் நண்பரைப் போலப் பழகி, துன்பம் வந்த காலத்தில் துன்பத்தைப் பெருக்குவதற்கே உதவுவர்.

கொல்லன் உலைக்களத்தில் இருக்கும் பட்டடைக் கல்லானது, நன்கு பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பைத் தாங்குவதுபோல் தாங்கி, அவ்விரும்பு நன்கு அடிபடு வதற்கு உதவும்.

அதைப்போல பகையுள்ளம் கொண்ட வஞ்சகர், நல்லவர் போல் கூடியிருந்து, அழிவுக்காலம் வந்தவுடன் அவ்வழிவுக்கே மேலும் உதவுவர். ஆதலின் பட்டடைக் கல் போன்ருரின் கூடாநட்பை நீக்குதல் வேண்டும்.

சீரிடங் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. (குறள்-௮௨௧)

நேரா நிரந்தவர்—அகத்தால் பொருந்தாமல் புறத்தால் பொருந்தியவர். பட்டடை—பட்டடைக்கல்.

பெரும்பான்மையான பெண்கள் ஆடம்பரமான ஆடையணிகளேயே அதிகம் விரும்புவர். கணவன்மார் வருவாய்க் குறைவை நோக்கி அடங்கியிருந்தாலும், ஆடம்பரமாக அணிவோரைக் காணும்போது மனம் வேறுபட்டுத் தம் கணவன்மார்களைத் துன்புறுத்துவர். குடும்ப நிலையைக் கணவன்மார் எடுத்துரைக்கும்போது அடங்குவர். மீண்டும் பொது இடங்களுக்குச் செல்லும் போது பட்டுடுத்திப் பொன்சுமந்து வந்திருக்கும் சுமை தாங்கிகளைக் காணும்போது மனம் வேறுபட்டு இல்லத் திற்கு வந்தவுடன் கணவன்மாரை நச்சரிப்பர்.

அதைப்போல, நண்பர்போல நடிக்கும் மனம் பொருந்ாதவரின் கூடாநட்பு, தக்க காலம் வாய்த்த போது பகையாக மாறிவிடும்.

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். (குறள்-௮௨௨)

இனமல்லார் கேண்மை—மனம் பொருந்தாரின் கூடா நட்பு. 'மகளிர் மனம் போல' என்ற சொற்ருெடருக்குப் பொருளுக்குத் தன்னுடலின்பத்தை விலைகூறி, பொருள் கொடுப்பாரை விரும்புபவரைப் போல் நடித்துப்

பொருளையே விரும்பும் பொதுமகளிர், பொருள், முன் கொடுத்தோரின் மிகக் கொடுப்போரைக் காணும் போதெல்லாம் மனம் வேறுபடுதல் போல' என்றும் பொருள் கொள்ளலாம்.

பரிமேலழகர், மணக்குடவர், பரிப்பெருமாள் ஆகியோர் 'மகளிர்' என்ற சொல்லுக்கு மகளிர் என்றே பொருள் கொண்டுள்ளனர். பரிதியார் மட்டும் 'இரு மனப் பெண்டிர்' எனப் பொருள் கொண்டுள்ளார்.

காளிங்கர் என்பார் மகளிர் என்றே பொருள் கொண்டு, அடிக்குறிப்பில் 'பொதுமகளிர் என்னாது மகளிர் எனப் பொது வகையால் கூறியது, குலமகளிரும் குணம் கெடுதல்கூடும் என்பது குறிப்பு என்று அறிக' எனக் குறித்துள்ளார்.

மனத்தொடு பொருந்தாதவரின் இனிய சொல்லை நம்பி ஏமாறுதல் கூடாது. பகைவர், நண்பரைப்போல நல்ல சொற்களைக் கூறினாலும், அச்சொற்களில் மறைந் திருக்கும் வஞ்சகம் விரைவில் வெளிப்பட்டுவிடும்.

வில்வீரன் பகைவனை நோக்கி வில்லில் அம்பு வைத்து வில்லை வளைக்கிறான். வில் வணங்குகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு வீரன் வில் நாணை யிழுத்து வளைக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு வில் வணங்கும். பகைவனை நோக்கி எந்த அளவுக்கு வில் வணங்கியதோ அந்த அளவுக்குப் பகைவன் மீது அம்பு விரைவாகச் செலுத்தப்படும். பகைவன் கொல்லப்படுவான். வில்லின் வணக்கத்தில் கொலைத் தொழில் மறைந்துள்ளது.

அதைப் போலவே, பகைவரின் சொல் வணக்கத் திலும் கொலைத் தொழில் மறைந்திருக்கும். அடுத்துக்

கெடுக்கும் நோக்கத்துடன் பகைவர், பணிவான இனிய சொற்களைப் பேசுவர். அவற்றை நம்பினால் உயிருக்கே இறுதியாகி விடும். ஆதலின் பகைவரின் சொல் வணக்கத்தை நம்பியேற்றுக் கொள்ளக்கூடாது.

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க; வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். (குறள்-அ௨௭)

ஒன்னார் = பகைவர்.

பகைவர் கூப்பி வணங்கும் கைக்குள் கொலைக் கருவியை மறைத்து வைத்திருப்பர். அவர் வடிக்கும் போலிக் கண்ணீரும் அங்ஙனமே ஏமாற்றுந் தன்மையதே.

உலகப் பெரியார் காந்தியடிகளைக் கோட்சே என்னும் கொடியோன் சொல்லால் வணக்கம் கூறித் தொழுதகையுள் மறைத்து வைத்திருந்த துப்பாக்கியால் சுட்டன்றோ வீழ்த்தினான்! எனவே உள்ளத்தால் பொருந்தாத கூடா நட்பினருடன் நாமும் உள்ளத்தால் பொருந்தாமல் அவரைப் போல் புறத்தால் மட்டுமே பொருந்தி எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும்.

## 32. மையலொருவன் களித்தற்று

இயற்கை அறிவு, செயற்கை அறிவு ஆகிய இரு வகை அறிவுகளில் எந்த அறிவும் சிறிது மற்ற அறிவி லியே பேதை எனப்படுவான். அப்பேதை நன்மை தரும் செயல்களை விட்டு விட்டுத் தீமை தரும் செயல்களையே செய்வான்; பழிபாவங்களுக்கு நாண மாட்டான்; நன்மை தீமைகளை ஆராயமாட்டான்; இரக்கமற்ற கொடியவனாக இருப்பான்; எப்பொருளையும் காக்கமாட்டான். இத்-

தகைய பேதையின் கையில் பெரும்பொருள் கிடைத்தால் என் செய்வான் ?

அறிவு மயங்கிய பைத்தியக் காரனின் நிலை யென்ன? பொருத்தமற்ற முறையில் ஏதேதோ பிதற்று வான்; செய்யத்தகாதவைகளை யெல்லாம் செய்வான்; நல்லாடை கிடைப்பினும் கந்தலும் அழுக்குமுடைய தாக்கியே உடுப்பான். குப்பைப் பொருள்களையும், மக்களால் வெறுக்கத்தக்க ஏனைய பொருள்களையும், வைரமணிகளைப் போல் விரும்பி அணிவான் ; நாள் தோறும் பல்வகைக் குப்பைப் பொருள்களை மாற்றி மாற்றி அணிவான். இங்ஙனமெல்லாம் செய்வதால் தன்னைச் சூழ்ந்திருப்போரெல்லாம் எள்ளி நகையாடு வதைக் கண்டு நாணமுங் கொள்ளமாட்டான்; திடீரென கல்கொண்டு தாக்கினும் தாக்குவான். அஃறிணைப் பொருள்களிடத்தும் உயிரற்ற பொருள் களிடத்தும் பேசுவான்; பேச்சினுல் அரசனுவான்; அமைச்சனுவான்; தோட்டியாவான்; அவன் செயல் களுக்கும் சொற்களுக்கும் வரையறையே இல்லை. இத் தகைய பைத்தியக்காரன், கள்குடித்து கள் வெறியும் கொண்டுவிட்டால் அவன் நிலையை எச் சொற்களால் விளக்குவது ?

அதைப் போலவே, அறிவற்ற பேதையும் நாணம், சிந்தித்தல், இரக்கம், காத்தல் முதலியவையின்றி கண்ட வற்றை யெல்லாம் செய்து கண்டபடியெல்லாம் ஒழுகு வான்; நல்ல செயல்களை ஒதுக்கித் தீய செயல்களையே செய்வான்; ஆதலின் தீமைகளை மட்டும் அனுபவிப்பான்; ஒழுக்கமற்றசெயல்களையே அதிகம் விரும்பிச் செய்வான் ; வாழ்நாளெல்லாம் துன்பந் தரக்கூடிய பெருங் குற்றத்தை ஒரே முறையில் மிக எளிதில் செய்து

விடுவான். அவன் மேற்கொள்ளும் செயல் தோல்விய டைந்து, அவனுக்குப் பெருந்துன்பத்தையே கொடுக்கும். இத்தகைய பேதைக்குப் பெருஞ் செல்வம் சேர்ந்து விட்டால், பேதமையுடன் செல்வச்செருக்கும் சேர்ந்து விடும். பைத்தியக்காரன், கள் குடித்த நிலைக்கும் பேதை செல்வம் பெற்ற நிலைக்கும் வேறுபாடே காண இயலாது.

பேதைக்குச் செல்வமீட்டத்தெரியாது. எங்ஙனமாவது செல்வம் சேர்ந்து விட்டால், தீய செயல்களை முன்னிலும் அதிகம் செய்வான் தன்னைப் போன்ற பேதைகளுக்கும் அற்பர்களுக்குமே உதவுவான்; நல்லோருக்குச் சிறிதும் உதவான். அயலார்கள் அவன் செல்வத்தை நன்கு அனுபவிப்பர். ஆனால் அவனுடைய பசித்த உறவினர்களுக்கு ஒரு நேர உணவுங் கொடான். இங்ஙனம் தீயவழிகளில் செலவிட்டு, பிறருக்கும் தீமை யிழைத்துத் தானும் பெருந்தீமையை அடைவான். ஆதலால் பைத்தியமும் குடிவெறியும் ஒருங்கே கொண்டவனும், பேதைமையும் பெருஞ்செல்வமும் ஒருங்கே கொண்டவனும் ஒத்த ஓரினத்தவரே.

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். (குறள்-அஙஅ)

மையல் ஒருவன் = பைத்தியக்காரன். களித்தல் - குடிவெறி கொள்ளுதல், பேதை - அறிவிலி.

ஒரு பேதையும் மற்றொரு பேதையும் கொண்ட நட்பு மிகச் சிறந்தது. ஏனென்றால், ஏதாவது ஒரு காரணத்தால் பிரிய நேரும்போது கவலையின்றிப் பிரிந்து செல்வார்கள். அப்பிரிவினால் யாருக்கும் எத்தீமையும் இல்லை.

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன் றில். (குறள்-அ௩௯)

பீழை = துன்பம்.

இக்குறள் பேதையரைப் புகழ்வதுபோல் பழித்திருப்பதால் ‘வஞ்சப்புகழ்ச்சியணி’ எனப்படும்.

மிக்க மென்மையும் தூய்மையும் பெற்றுப் படுத்துறங்குவார்க்குப் பேரின்பம் நல்கும்படியான விலேயுயர்ந்த படுக்கை யொன்று விரித்து, மலர் போன்ற நறுமணப் பொருள்களால் அணிசெய்யப்பட்டுள்ளது. வெளியில் சுற்றித்திரிந்த ஒருவன், மிதிக்கத்தகா ஒரு பொருளே மிதித்துக் காலெல்லாம் அப்பிக்கொண்டு, காலேக் கழுவித் தூய்மை செய்யாமல் அப்படியே வந்து படுக்கையிலும் ஏறிவிடுகிருன். அப்பொழுது அப்படுக்கையின் மதிப்பென்னுகும்? படுக்கை மாசடைந்து மதிப்பிழந்து வெறுக்கத்தகும்.

அதைப் போலவே, கல்வியறிவும் உயர்ந்த பண்பும் உடைய சான்ருேர்கள் கூடி உரையாடிக் கொண்டிருக்கும் அவையில், அறிவற்ற பேதையொருவன் புகுந்தால், அங்கு அவன் கூறும் தகாத மொழிகளால், அவ்வுயர்ந்த அவையும் மதிப்பிழந்து விடும்.

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றல் சான்ரேர்
குழாஅத்துப் பேதை புகல் (குறள்-அ௪0)

பள்ளி–உயர்ந்த படுக்கை.

அறிஞர் அவையில் கல்லாப் பேதை புகுந்து அமைதியாக இருப்பினும், மக்களிடையே நாய் இருத்தலே ஒக்கும், பேதை ஏதாவது பேசினலும் நாய் குரைத்தலே ஒக்கும்! என நாலடியும் நவில்கின்றது.

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு — மெல்ல
இருப்பினும் நாய்இருந் தற்றே இராஅ
துரைப்பினும் நாய்குரைத் தற்று.'' (நாலடியார்-உருச)

## 33. நிழல் நீரும் இன்னாத இன்னா

நன்மையே செய்யும் நண்பர் போலவும், உற்றுழி யுதவும் சுற்றத்தினர் போலவும் உடனிருந்து பழகிக் கொண்டே கெடுப்பதற்குரிய காலம் பார்த்திருப்போர் 'உட்பகைவர்' எனப்படுவர். அவர் புறத்தே உறவும் உள்ளத்தே பகையும் கொண்டிருப்பர். வெட்டுகின்ற வாள் போல் வெளிப்படையாகப் பகைத்துக்கொள்கின்ற பகைவரைவிட, சுற்றத்தினர்போல உடனிருந்தே அடுத்துக் கெடுக்கும் உட்பகைவரே மிக அஞ்சத்தக்க கொடியோராவார்.

மனமாட்சியில்லாத உட்பகைவர், நமது உண்மை யான சுற்றத்தாரை யெல்லாம் பகைவராக்கி விடுவர். உறவு போலப் பழகும் உட்பகை இறப்பதற்குரிய பெருந் தீமைகளைப் பயக்கும். ஆதலின் உட்பகையை அஞ்சி நம்மை நாமே காத்துக்கொள்ளவேண்டும். இன்றேல், குயவன் வனைந்து திரிகையில் சுற்றிக்கொண்டிருக்கும் மண்கலத்தை விரைந்து அறுக்கும் கருவிபோலவும், கால்வாயில் பெருகிவரும் நீர்ப்பெருக்கானது, தேய்ந்து நலிந்திருக்கும் சிற்றணையை உடைத்துச் செல்வது போலும், உட்பகையானது விரைவில் கெடுத்துவிடும்.

வெயிலில் வேலைசெய்து களைத்தவருக்கும், நெடுவழி நடந்து வந்தவருக்கும், மரநிழலும், நிழல் சார்ந்த குளிர்ந்த நீரும் இன்பம் தருவனவே. ஆயினும் நச்சு

மரமும் நச்சுப் பொய்கையும் உண்டு. நச்சுமர நிழலில் தங்கியோருக்கு அப்போது இன்பமுண்டாயினும் நச்சுக் காற்றை உள்ளிழுப்பதால் துன்பமே உண்டாகும். மாசுபடிந்து நச்சுக் கிருமிகள் நிறைந்த குளத்து நீர், அப்போதைக்கு நீர் வேட்கையைத் தீர்த்து இன்பம் பயப்பினும், உடலின் உள்ளே சென்ற நச்சுக்கிருமிகள் மூலம் பின் பெருநோய்களை உண்டாக்கும். ஆதலின் தூய்மையல்லாத நிழலும் நீரும் முன் இன்பம் பயப்பினும் பின் பெருந் துன்பமே பயக்கும்.

அதைப்போல, நன்மை செய்யும் நண்பர் போலவும், உதவி புரியும் உறவினர் போலவும் பழகுவோர் உள்ளத்தே, அடுத்துக் கெடுக்கும் தீயெண்ணம் கொண்டவராயின், அவர்கள் நட்பும் உறவும் முன் இன்பம் செயினும் பின் பெருந்துன்பமே பயக்கும். ஆதலின் அத்தகையோரின் நட்பு கூடாது.

> நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
> இன்னாவாம் இன்னா செயின் (குறள்-அஅக)

தமர் நீரும்—உறவினர் இயல்பும்.

திருகு மூடியினால் நன்கு பொருத்தப்பட்ட செம்பு, பார்ப்பதற்கு ஒரே பொருள்போல் நன்கு இணைந்து தோன்றும். உள்ளே இருக்கும் பொருள்களை யெடுக்க முடியாதென எண்ணுமளவுக்குச் செம்புடன் மூடி புணர்ந்துஒன்றெனவே தோன்றும். ஆயினும் செம்பி னகத்துஇருக்கும் பொருள்களை யெடுக்க முயல்வார்க்கு, மூடிகழன்று உதவும்.

அதைப்போல உட்பகையுற்றகுடி புறத்தே கூடியது போல் தோன்றினும், அகத்தே கூடாது வேறுபடும்.

அதாவது, உள்ளத்தே பகைகொண்ட ஒருவன், ஒரு குடும்பத்துடன் வேற்றுமை தெரியாத அளவுக்குப் பழகினாலும், தக்க வாய்ப்பு கிட்டும்போது, புறப்பகைவருக்குக் காட்டிக்கொடுத்தும், வேறு வகையிலும் அக் குடும்பத்தை வீழ்த்தி விடுவான். ஆதலின் ஒரு குடியும் உட்பகை கொண்ட ஒருவனும், செம்பும் மூடியும்போல் புறத்தே ஒன்றியிருந்தாலும், அகத்தே பொருந்தாத வேற்றுமையே உண்டாகும்.

> செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
> யுட்பகை யுற்ற குடி. (குறள்-அஅஎ)

செப்பு–செம்பு. 'செம்பு' 'செப்பு' என வலித்தல் விகாரமாயிற்று. செப்பு என்பதற்குப் பெட்டி எனப்பொருள் கொள்ளினும் பொருந்தும். செப்பு போன்றது குடி. மூடி போன்றது உட்பகை. உள்ளிருக்கும் பொருள் போன்றது குடியின் நல்வாழ்வு. செப்பிலிட்ட பொருளைப் பிறர் கவர மூடி உதவுவதுபோல, குடியின் வாழ்வு வீழ உட்பகைவர் உதவுவர்.

அராவுகின்ற அரமும், அராவப்படுகின்ற பொருளும் இரும்பாலானவையே. அரத்தால் இரும்பை அராவும்போது, அரம் இரும்புடன் இணைபிரியாமல் இருப்பது போலவும், இரும்பை ஒரு நிலையில் வைத்துத் தான் முன்னும் பின்னும் சென்றுவந்து இரும்புக்கு ஒளி தருவது போலவும் தோன்றினாலும், இரும்பின் வலிமையைச் சிறிதுசிறிதாகத் தேய்த்து அழித்துவிடும்.

அதைப்போல், உள்ளத்தே பகைகொண்டு நண்பனைப்போல் பழகும் ஒருவனும், அவனை நம்பிப் பழகுபவனும் மனிதர்களே. உட்பகை கொண்டவன், தன்னை நம்பினவனை உட்காரவைத்துக்கொண்டே, அவனுக்கும்

அவனுடைய குடிக்கும் தான் ஓடியாடிப் பல நன்மைகள் செய்பவனைப்போல சொல்லாலும் செயலாலும் நடித்துச் சிறிதுசிறிதாக நம்பினவரின் குடிவலிமையைத் தேய்த்து அழித்துவிடுவான்.

அரத்தால் பொரப்பட்ட இரும்பின் வலிமை தேய்வதைப்போல, உட்பகையால் பொரப்பட்ட குடியின் வலிமையும் தேயும்.

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு
துட்பகை யுற்ற குடி. (குறள்-அஅஅ)

பொன் – இரும்பு.

ஒரு சிறிய குடிசையில் ஒரு மனிதன் வாழ்கிறான். அக்குடிசையினுள்ள ஒரு வளையில் ஒரு பாம்பும் வாழ்கிறது. எந்த நேரத்திலும் அப்பாம்பு அவனைக்கடிப்பது உறுதியேயன்றோ?.

அதைப்போல, மனப்பொருத்தமில்லாதவரோடு கூடி வாழுபவர் வாழ்க்கைக்கும் எந்த நேரத்திலும் அழிவு ஏற்படலாம்.

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போ டுடனுறைந் தற்று (குறள்-அகூ0)

குடங்கருள்–குடிசையுள்.

இவ்வுவமை நட்பு, உறவு, இல்வாழ்க்கை ஆகிய யாவற்றிற்கும் பொருந்தும். மனப் பொருத்தமில்லாத ஆணும் பெண்ணும் சேர்ந்து நடத்தும் வாழ்க்கையும் அழிவது உறுதியே. ஆதலின் மனப்பொருத்தமுள்ள திருமணமே திருமணமாகும். மனப்பொருத்தமில்லாமல் பணப்பொருத்தத்தாலும் ஏனைய பொருத்தங்களாலும் செய்யப்படும் மணம் பாழ் மணமேயாகும்.

எள்ளின் பிளவைப்போல மிகச் சிறிய உட்பகையே யாயினும் அது வளர்ந்து பெருங்கேடு பயக்கும். ஆதலின் உட்பகையை நீக்கி வாழ்தலே சிறப்புடையது.

## 34. கூற்றத்தைக் கையால் விளித்தல்

உட்பகையை நீக்கிப் பெரியார் நட்பை ஏற்று வாழ்வோரே உயர்வடைவர். யார் பெரியார்? அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணேட்டம், வாய்மை ஆகிய ஐந்தையும் குறைவறப்பெற்று, பிறர் குற்றங்களைக் கூருது, குணங்களையே கூறி, பகுத்துண்டு பல்லுயிரோம்பி, பழியெனின் உலகுடன் பெறினும் வெறுத்து, புகழெனின் உயிருங் கொடுத்துச் செயற்கரிய செயல்களைச் செய்யும் ஆற்றல் பெற்ருேரே பெரியோராவர்.

இத்தகைய பெரியாரை இகழாமல் அவருடைய நட்பைப் பெற்று, அவர் காட்டும் நல்வழி வாழ்தல், துன்பம் வராமல் காக்கும் காவல் யாவற்றுள்ளும் தலை சிறந்ததாகும். செயற்கரிய செய்யும் பேராற்றல் படைத்த பெரியோரை யிகழ்ந்து வாழ்தல், நீங்காத பெருந் துன்பங்களையே கொடுக்கும்.

சாதலின் இன்னுதது இல்லை. வாழும் உயிர்களுக்குச் சாதலை மிகப் பெருந்துன்பமாகத் தோன்றுகிறது. இம் மிகப் பெருந்துன்பத்தைத் தருபவன் கூற்றுவனே. கொடிய கூற்றுவன் உலகில் எவ்வுயிரையும் குறிப்பிட்ட காலத்திற்கு மேல் விட்டு வைப்பதில்லை. இங்ஙனம் கொலைத் தொழிலையே தன் உரிமைத் தொழிலாகக் கொண்ட கூற்றுவனை யொருவன் கைகாட்டி அழைத்தால் என்ன ஆகும்? அழைத்தவனுயிர் மிக விரைவில் அழிவதுறுதியன்ருே?

அதைப்போல எண்ணியவற்றை எண்ணியபடியே செய்து முடிக்கும் ஆற்றல் படைத்த பெரியவருக்கும், தன்னின் மிக்க வலியவருக்கும், அறிஞருக்கும், ஆற்ற லும் அறிவும் குறைந்தவர் தீங்கு செய்தால், அவர் விரைவில் அழிந்து படுவது உறுதியாகும்.

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல் (குறள்-அ௯௪)

கூற்றம் – கூற்றுவன்; இயமன். விளித்தல்–அழைத்தல், 'குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயும் காத்தலரிது' ஆகையால் ஆற்றல் மிக்கப் பெரியாரைப் பகைத்துக் கொண்டவர் விரைவில் வீழ்ந்து விடுவர்.

படைவலிமையும் போர்வலிமையும் கொண்ட சோழன் நலங்கிள்ளி, தன்னைப் பகைத்துக் கொண்டோ ரின் அறியாமையைப் பற்றிக் கூறும் பொழுது, 'எனது அமைச்சர், படைத்தலைவர் முதலியோரின் வலிமையை யும் மதிக்காமல், எனது உள்ளத்தையும் இகழ்ந்த அறிவில்லாதவன், யாவருமறியுமிடத்தில் உறங்குகின்ற புலியைக் காலால் இடறிய குருடன் போல என்னிட மிருந்து பிழைத்துப் போதல் அரிது' என்றான்.

ஆற்ற லுடையோர் ஆற்றல் போற்றாதென்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதில்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே ......... (புறம்-எ௩)

சிதடன் – குருடன். உய்ந்தனன் – பிழைத்து.

'கூற்றத்தைக் கையால் விளித்தற்று'என்ற உவமை யையும், 'துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல' என்ற உவமையையும் ஒப்பிட்டு நோக்கி மகிழ்தல் வேண்டும்.

நேர்மை, பண்பாடு, சமாதான வாழ்வு முதலிய வற்றில் மிகப்பெரிய இந்தியாவைப் பகைத்துக்கொண்ட சீனு, தோற்று உலகத்தின் வெறுப்பைப் பெற்ற செய்தியும், வலிமை, பரப்பு, அறம், சமாதான வாழ்வு முதலிய பல்லாற்ருனும் பெரிய இந்தியாவை, இவை யாவும் இல்லாத பாகித்தான் பகைத்துக் கொண்டு, தோல்வி மேல் தோல்வி பெற்றுவரும் செய்தியும் உலகமறிந்த செய்திகளன்ருே?

நெருப்பாற் சுடப்பட்டாலும் பிழைத்துக்கொள்ளலாம். பெரியார் பகை பெற்ருேர் பிழைத்தலரிது. பெருவாழ்வும் பெருஞ்செல்வமும் பெற்றவராயினும், மாண்புமிக்க பெரியார் சினத்தைப் பெற்ருல், குடியோடு வீழ்ந்து விடுவர். தவ வலிமை மிக்க சான்ருேர் சினங் கொண்டால், துணை வலிமை மிக்கோரும் அழிந்து விடுவர். ஆதலின், சிறியோர் நட்பையும் உட்பகையையும் நீக்கி, பெரியாரை இகழாமல் அவர் நட்பை யேற்று வாழ்தலே நல்வாழ்வாகும்.

## 35. இருட்டறையில் ஏதில் பிணந்தழுவல்

பெண்மைக்குப் பெருமைதரும் கற்பொழுக்கத்தைக் கைவிட்டு, பொருளேயே பெரிதென எண்ணி, பொருள் கொடுப்போருக்கெல்லாம் உடலின்பத்தை விலைகூறி விற்கும் விலைமகளிர் மிகவும் இழிந்த பிறவியினராவர். அவர்கள் பொருளேயே பெரிதும் விரும்பி, பொருள் கொடுப்போரிடம் சிறிதும் அன்பின்றி, அன்புடையவர் போல்நடித்து இன்சொல்பேசிமயக்குவர். அவ்வின்சொல் இன்பந்தருவது போல் காட்டிப் பெருந் துன்பத்தையும் பெரும் பழியையும் உண்டாக்கிவிடும்.

பொருள் கொடுப்போர் எவ்வளவு இழிந்தவரா யினும் அவரைப் பொய்யாகப் புகழ்ந்து கூறித் தழுவிக் கொள்ளத் தயங்க மாட்டார்கள் பொது மகளிர்; தம்மிடம் வருவோரிடம் மிக்க பொருள் உள்ள வரையில் அவரையே, காதலிக்கும் பண்புடையார் போல் காட்டி, பொருள் தீர்ந்தவுடன் கைவிட்டு விட்டு, வேறு பொரு ளுடையாரை நாடும் பண்பற்றவர்கள். ஆதலின் அத் தகைய பொருட்பெண்டிரின தீயொழுக்கத்தை அறிந்து அவர்பால் நெருங்காதிருத்தல் வேணடும்.

பாழடைந்த மண்டபத்தின் இருண்ட அறையில், ஆதரவின்றி இறந்து விட்ட ஒருவனின் பிணம் அழுகிப் போய், தீய நாற்றம் வீசிக்கொண்டிருக்கிறது. ஆதரவற்ற பிணங்களை யெடுத்து அடக்கம் செய்வதற்காகக் கூலிக்கு அமர்த்தப்பட்டவர் அப்பிணத்தை யெடுக்கச் செல்கின் றனர். அப்பிணம் ஆண்பிணமோ? பெண் பிணமோ? இளமையதோ? மூத்ததோ? நோயற்றதோ? நோயுற்ற தோ? ஒன்றுமே தெரியவில்லை! கூலிக்காகப் பிணம் எடுப்போரின் உள்ளத்தே அன்பு இல்லை. ஆயினும் கடமைக்காக அப் பிணத்தைத் தழுவி யெடுக்கின்றனர்! அப்பொழுது அவருடைய உள்ளத்தே எத்தகைய அருவருப்புணர்ச்சி யிருக்கும்?

அதைப்போல, பொருள் கொடுப்பவன் இளையவனா? ஒத்தவனா? மூத்தவனா? அழகிய நல்லுடல் பெற்றவனா? நோயால் அழுகிய உடல் பெற்றவனா? என்ற வேறு பாடுகள் இன்றி, உள்ளத்தே அன்பின்றி, வாங்கும் பொருளுக்காகப் பொதுமகள் பொய்க்காதல் காட்டித் தழுவிக்கொள்ளுகிறாள்! அப்பொழுது அவள் உள்ளத்தே உண்மையான இன்பந்தான் உண்டா?

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. (குறள்-௯௧௩)

பொருட் பெண்டிர்–பொது மகளிர். ஏதில் பிணம்–ஆதர வற்ற பிணம்; முன்பின் அறியாத பிணம்.

கூலிக்குப் பிணம் எடுப்போருக்கு ஒப்பாவர் பொது மகளிர். கூலிக்குப் பிணம் எடுப்போர், இருட்டறையில் உள்ள முன் பின் அறியாத பிணத்தை அன்பின்றி அருவருப்புடன் தழுவி யெடுத்தலுக்கு ஒப்பாகும்–பொருள் பெற்றதற்காகப் பொதுமகளிர் உள்ளத்தே அன்பின்றி பொய்க் காதலுடன் தழுவும் தழுவல். பொருள் கொடுத்துப் பெறும் பொய்யான இன்பத்திற் காகத் தம் பொருள், புகழ் யாவற்றையுமிழந்து, அழியாப் பழியையும் தீராத நோயையும் பெறுவோர் இருட் டறையில் உள்ள ஏதில் பிணத்திற்கு ஒப்பாவர்.

ஆதலின், அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையவரும், இயற்கை அறிவால் மாண்புற்ற செயற்கை அறிவினை உடையவரும், அறிவு, ஒழுக்கங்களாலாய தம் புகழைப் பரப்ப விரும்பும் உயர்ந் தோரும் பொருளையே பொருளாக மதித்து ஆடல், பாடல், அழகு முதலியவற்றுல் பிறரை மயக்கிப் பொருள் கொடுப்போரை யெல்லாம் புணரும் பொதுமகளிரைக் கனவிலும் கருத மாட்டார்கள்.

ஒழுக்கமற்ற நெஞ்சத்தைஉடையோரும், மாய மகளி, ரின் வஞ்சகச் செயல்களை ஆராய்ந்து அறியும் அறிவற்ற வரும், அற்பர்களுமே, நிரயத்திற் கொப்பாகிய பொது மகளிர் தோள் முயக்கத்தை விரும்புவர்.

இருவேறுபட்ட மனத்தை உடைய விலைமகளிர், அறிவை மயக்கும் கள், சிறுமைப் படுத்தும் சூது ஆகிய மூன்றும் செல்வமும் புகழும் நீக்கப்பட்டாரின் நட்பாகும்.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (குறள்-கஉ0)

கவறு – சூது.

## 36. கீழ்நீர்க் குளித் தானைத் தீத்துரீஇ

உலக உயிர்களுள் மனித உயிரே மாண்புமிக்கது. அவ்வுயிரை மாண்புடையதாக்குவது மக்கள் அரிதிற் பெற்ற பகுத்தறிவே. இச்சிறப்பு வாய்ந்த பகுத்தறிவை மயக்கிக் கெடுத்து விலங்கினும் கீழ்நிலைக்குக் கொண்டு செல்வது, 'மது' இம் மதுவின் கொடுமையை உணர்ந்த நமது மாண்பார் அரசாங்கம், பலகோடி வருவாயை இழக்க நேர்ந்தும், நாட்டு மக்களின் நலம் கருதி மது விலக்குச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்து அதில் உறுதியாகவும் உள்ளது.

தமிழகத்தின் தங்ககாலமெனக் கருதப்படும் சங்க காலத்தில் கூட, அரசவை விருந்துகளிலேயே மது இடம் பெற்றிருந்தது. ஔவையார் போன்ற பெரும்புலவர்கள் கூட மது விருந்தைப் போற்றிப் பாடியுள்ளனர். சங்க காலத்தில் மது உண்ணும் பழக்கத்தைக் கண்டித்த முதல் புரட்சிப் பாவலர் பொய்யாமொழியாராம் திருவள்ளுவரே. 'கள்ளுண்ணாமை' என்ற அதிகாரத் தின் மூலம் கள்ளின் கொடுமையையும், அதை யுண் போரின் இழிவுகளையும் திருவள்ளுவர் விளக்கியுள்ளார்.

எப்போதும் கள்குடிக்கும் பழக்கமுடையோர் எவ்வளவு வலிமையுடையவராயினும் பகைவரால் அஞ்சப்படாமல் எளிதில் வெல்லப்படுவர்; பழம் புகழ் இழப்பர்; சான்றோரால் மதிக்கப்படார்; பெற்ற தாயாலும் வெறுக்கப்படுவார்; நாணமென்பது சிறிதுமின்றி இழிந்த

நிலையடைவர். பொருள் கொடுத்து இத்தகைய இழி நிலையைப் பெறுவதினும் வேறு பேதைமை யுண்டோ?

தம்மை மறந்து உறங்குபவருக்கு, உறங்கும்போது அறிவு வேலை செய்யாது; அவருக்கு முன்னால் எது நடப்பினும் தெரியாது. ஆதலால் அந்த நிலையில், உறங்குபவருக்கும், செத்தவருக்கும் எந்த வேறுபாடும் இல்லை. அதைப்போலவே, நஞ்சு குடிப்பவருக்கும், எப்பொழுதும் கள் குடிப்பவர்க்கும் எந்த வேறுபாடும் இல்லை.

நஞ்சு அறிவை மயக்கும்; உடலைக்கெடுக்கும்; உயிருக்கு இறுதி பயக்கும்; அதைப் போலவே கள்ளும் அறிவை மயக்கும்; உடலைக் கெடுக்கும்; நாளடைவில் உயிருக்கும் இறுதி பயக்கும். ஆதலால் எப்பொழுதும் கள் குடிப்பவர் நஞ்சு குடிப்பவருக்கு ஒப்பாவர்.

> துஞ்சினர் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
> நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (குறள்-கூஉசு)

துஞ்சினர்-உறங்கியவர். எஞ்ஞான்றும்-எப்பொழுதும்.

எஞ்ஞான்றும் என்ற சொல்லைத் துஞ்சினர் என்பதோடு இணைத்துப் பார்க்கும்பொழுது, 'காலத்தின் அருமை யுணர்ந்து சிறந்த செயல்களைச் செய்யாமல், எப்பொழுதும் உறங்கியே வீண்பொழுது போக்கும் சோம்பேறிகள், உயிரோடிருப்பினும் செத்தவருக்கு ஒப்பாவர்' என்ற கருத்தும் புலப்படுகிறது.

ஒருவன், 'நான் குடிக்க மாட்டேன்' என்று சொல்லிக்கொண்டு பிரரறியாமல் மறைவாகச் சென்று குடித்துவந்தாலும்; அவனுடைய அறிவு மயங்கிய செயலால், உள்ளூரார் உண்மையை யுணர்ந்து, அவனை எள்ளி நகையாடுவர். கள் குடித்து அறிவு மயங்கி

யிருக்கும் ஒருவனுக்கு அறிவுரை கூறுவதால் எப்பயனும் இல்லை.

ஆழமான நீருக்குள் மூழ்கி மறைந்து விட்ட ஒருவனைக் காண்பதற்கு, மற்றொருவன் அகல் விளக்கின் துணையால் நீருக்குள் மூழ்கித் தேட முயல்கிறான். நீரில் பட்டஉடன் விளக்கு அணைந்து விடுகிறது. மூழ்கியவனைக் காண்பதற்குரிய ஒளியும் கிடைக்கவில்லை. மூழ்கியவனையும் காண இயலவில்லை. தேடியோனின் அறியாமையைக் கண்டு ஏனையோர் எள்ளி நகையாடுகின்றனர். அதைப்போல,

ஒருவன் குடித்து மயங்கியிருக்கும் போது, மற்றொருவன் அவனுக்குக் குடியின் இழிவைக் கூறி அவனைத் திருத்த முயன்றால், குடித்து மயங்கியவன் உள்ளத்தில் அறிவுரையும் செல்லாது. அவனும் திருந்த மாட்டான். அறிவுரை கூறியவனின் அறியாமையைக் கண்ட ஏனையோர் ஏளனம் செய்வர்.

> களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
> குளித்தானைத் தீத்துரீஇ யற்று. (குறள்-௯௨௯)

களித்தான்—கள்ளுண்டு மயங்கியவன். துரீஇ—தேடி.

குடித்து மயங்கியவனுக்கு அறிவுரை கூற முயல்வதும், நீருக்குள் விளக்கு கொண்டு தேட முயல்வதும் ஒன்றே. எவ்வளவு பொருத்தமான உவமை!

குடிக்கும் பழக்கமுடைய ஒருவன், தான் குடிக்காமல் மனத்தெளிவுடன் இருக்கும் நேரத்தில், பிறனொருவன் நன்கு குடித்து மயங்கி, ஆடை நழுவி, உடல் தள்ளாடி, பிதற்றிக்கொண்டு, பிறர் எள்ளி நகையாட இருக்கும் இழி நிலையைக் கண்டு உணர்ந்து திருந்தவேண்டும். அப்படியும் திருந்தாதவரை என்னென்பது?

## 37. தூண்டிற்பொன்மீன் விழுங்கல்

திரு நீக்கப்பட்டாரின் தொடர்புகளுள் ஒன்று சூது. எவ்வளவு பெருஞ்செல்வமும் புகழும் வாய்ந்தவராயினும், அவ்வளவையும் பாழ்படுத்திவிடும் சூது. நளனுடைய வரலாறும் பாண்டவருடைய வரலாறும் சூதின் கொடுமையை உலகிற்கு உணர்த்துவதற்காகவே எழுந்தன. சிறுமை பல செய்து சீரழிக்கவல்ல சூதுக்கு நிகரான வறுமைத்துன்பம் தரக்கூடியது வேறொன்றுமில்லை.

சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன் றில் (குறள்-௯௩௪)

சூது செய்யும் சிறுமைகள் யாவை? சீரழிவுகள் யாவை? தன்னை மேற்கொண்டவரை, உயிருடன் இருப்பினும் இல்லாதவர் போலாக்கி விடும்; வயிறார உண்ண முடியாத நிலையை ஏற்படுத்திப் பலவித துன்பங்களுக்கும் உட்படுத்தும்; பொருள், அருள், அன்பு, பண்பு, வாய்மை, தூய்மை, கல்வி, புகழ் முதலிய யாவற்றையும் கெடுத்துவிடும்; அறத்தைச் சிதைத்து, அருளைத் தேய்த்து, பகையைப் பெருக்கி, உருவையும், திருவையும், உண்மையுயர்வையும், மானத்தையும், நட்பையும் சிதைத்து அழித்து, கொடிய நரகில் சேர்க்கும்.

அறந்தை வேர்கல்லும் அருநரகில் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டு விரோதஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து.

உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானம் சிதைக்கும்—மருவும்
ஒருவரோடன் பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (நளவெண்பா)

என்பவை புகழேந்தியாரின் பொன்மொழிகள்.

'சூதாடி' என்ற ஒரு பட்டத்தைக் கொடுத்து, பொருள், அருள், மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், முயற்சி, இன்பம், உறவு, நட்பு முதலிய பலவற்றையும் பறிக்கும் சூதை மேற் கொண்டவர்க்கு நல்வாழ்வு வாழும் நெறியே கிடையாது.

சூதாட்டத்தில் வெற்றி கிடைப்பதாயினும் அதை விரும்பலாகாது. ஏன்? திருவள்ளுவர் 'தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று' என்ற உவமை மூலமாக நன்கு விளக்கந் தருகிறார்.

மீன் பிடிக்கும் தூண்டிற்காரன், இரும்பினால் நுண்ணிதாகச் செய்யப்பட்ட கொக்கி போன்ற தூண்டில் முள்ளில் மண்புழுவை இரையாகச் செருகித் தண்ணீரில் இடுவான். தனக்கு இரை கிடைத்தது என்று மகிழ்ந்து, மீன் ஆர்வத்துடன் அதைக் கவ்வும். தூண்டில் முள் மீனின் தொண்டையில் மாட்டிக் கொள்ளும். பின்னர் மீன் துடிதுடித்து, மடிந்து, தூண்டிற்காரனுக்கு இரையாகிவிடும்.

அதைப்போல, சூதாட்டத்தில் கிடைக்கின்ற வெற்றியும், பந்தயப் பொருளும், மேன்மேலும் சூதாட்டத்தில் ஆர்வத்தைத் தூண்டி, சூதாடுபவ னுடைய பொன் போன்ற காலத்தையும், நேரிய வழியில் பொருளீட்டும் முயற்சியையும் கெடுத்து, அவன் செல்வங்களையெல்லாம் பறித்து, வறுமைத் துன்பத் தைக் கொடுத்து, அவன் வாழ்வையே சூதாட்டத்துக்கு இரையாக்கி விடும்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. (குறள் ௯௩௧)

தூண்டிற் பொன் – தூண்டிற் கொக்கி.

மீன் சிக்கியதைத் தெரிவிக்கும் தக்கை மேலேயே, தூண்டிற்காரனுடைய கண் இருக்கும். அதைப்போல, ஒவ்வொரு சூதாடிக்கும், எதிரியின் பொருளைக் கவர்வதற்கு எதிரியின் சோர்வின் மீதும், தோல்வியின் மீதுமே கண்ணும் கருத்தும் இருக்கும்.

தூண்டிலில் சிக்கிய மீன் துடித்து அல்லல் படுவதைப்பற்றிக் கவலைப்படாமல், அதை யெடுத்து நசுக்கிக் கூடையில் போட்டு மேலும் மீன் பிடிக்கவே தூண்டிற்காரன் முயல்வான். அவன் உள்ளத்தில் அருளுக்கு இடமில்லை. அதைப்போல, பன்முறை தோற்றவன் வறுமையால் வாடுவதைப் பற்றிக் கவலைப் படாமல், மேன்மேலும் அவனைச் சுரண்டவே எதிரிகள் முயல்வர். சூதாடிகளின் உள்ளத்திலும் அருளுக்கு இடமில்லை. தூண்டிலில் சிக்கிய மீன் துடித்து மடிவது உறுதி. சூதில் சிக்கிய சூதாடிகளும் துடித்து நல்வாழ்வை யிழப்பது உறுதி.

இவ்வளவு நீதிகளையும் நயங்களையும் "தூண்டிற் பொன்மீன் விழுங்கியற்று" என்ற உவமை விளக்குகிறது.

துன்பம் மிக்க உடலின்மீது உயிர் காதல் கொள்வது போல, தோல்வி மிக்க சூதின்மீது சூதாடி காதல் கொள்கிறன்.

எண்பது வயது கடந்துவிட்ட பிச்சைக்காரன். அவனைப் பிணித்துள்ள தொழுநோய் (குட்டநோய்)

ஒன்றுதான் அவனுக்கு ஆதரவும் துணையும். அவனை ஆதரிப்பாரும் இல்லை. அவன் உயிர் வாழ்ந்து ஆதரிக்க வேண்டியவருமில்லை. அவனது உடலைக் குட்டப் புண்கள் அணுஅணுவாகச் சிதைக்க, அப்புண்களை ஈக்களும் எறும்புகளும் அணுஅணுவாக அரித்துத் தின்கின்றன. இரவென்றும், பகலென்றும், வெயி லென்றும், மழையென்றும் பாராமல், நகர்ந்து நகர்ந்து வீடுவீடாகச் சென்று பிச்சையெடுத்து, அவ்வுணவைச் சீழ் ஒழுகும் கைகளால் எடுத்து உண்ண வேண்டும். இவ்வளவு துன்ப நிலையிலும், அவனுடைய உயிர் அவ்வுடலைப் பிரிய மனமின்றி, அதனோடு ஒட்டிக் கொண்டுள்ளது.

அதைப்போல, சூதாடியொருவன் சூதாட்டத்தால் தன் செல்வம் முழுவதும் இழந்து, அருமைத்தாயும் தந்தையும், மனைவியும் மக்களும் பட்டினியால் துடிக்கும் நிலை கண்டபோதும், புகழ் மறைந்து பழியோங்கிய போதும், மேலும் சூதாடுதலையே விரும்புவான்.

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉங் காதற் றுயிர். (குறள்-௯௪0)

இக்குறளில், சூதின் கொடுமையை வலியுறுத்து வதற்காக வேண்டி, உவமேயமே உவமானமாக மொழியப்பட்டுள்ளது. இதனை, "உயிரினது அறியாமை கூறுவார் போன்று சூதனது அறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற் பொருட்டு உவமமாக்கிக்கூறினார்" என்று பரிமேலழகர் பகர்ந் துள்ளார்.

தருமனும், நளனும் தம் பெருஞ்செல்வமும் பேரரசு முழுவதும் இழக்கும் வரையில் விடாது சூதாடினரன்றோ?

தருமன், பந்தயம் வைப்பதற்கு ஒன்றுமில்லாது போகும் வரை, யாவும் இழந்து பின்னும், தம்பிமார்களையும், மனைவியையுமே பந்தயம் வைத்துச் சூதாடி யிழந்தான் என்றால், சூதின் கொடுமையை என்னென்பது! என்னென்பது!

## 38. இழிவறிந்துண்பான்கண் இன்பம்.

"அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது" என்ற முதுமொழிக் கேற்ப, அரிதிற் பெற்ற மனிதப்பிறவியால் செயற்கரிய செய்து புகழ் நாட்ட வேண்டுமென்றால், நோயற்ற உடலும், வாழ்வும் பெறவேண்டும். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது முதுமொழி.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

என்பது திருமூலர் திருமந்திரமாகும். இயற்கை நெறி பிறழாது வாழ்பவர்க்குத்தான் நோயற்ற நல்லுடலும் நல்வாழ்வும் வாய்க்கும். தற்கால மக்கள் இயற்கைநெறி பிறழ்ந்து, நாவின் சுவைக்கும், போலி நாகரிகத்திற்கும் அடிமைப்பட்டு, உடல் நலம் இழந்து நோய்களைப் பெருக்கி, வருவாயில் பெரும்பகுதியை மருந்துக்காகச் செலவிட்டும், நோயற்ற வாழ்வுபெற முடியாமல் அல்லற் படுகின்றனர்.

மருந்துச் செலவில்லாமல், நோயற்ற நல்வாழ்வு வாழ்வதற்குரிய வழிகளைத் திருவள்ளுவர் 'மருந்து' என்ற அதிகாரத்தில் தெளிவாகக் கூறியுள்ளார்.

உணவும் செயலும், ஒருவனது உடற்பகுதிக்கேற்ப அமையாமல், மிகுதியானாலும், குறைவானாலும், வாதம், பித்தம், சிலேட்டுமம் ஆகிய நோய்கள் உண்டாகும். உண்டவுணவு அற்றது (செரித்தது) உணர்ந்து, நன்கு பசியெடுத்ததன் பிறகு, பசியடங்கும் அளவுக்குக் கணக்காக உண்டு வாழ்ந்தால், நோயும் வராது; மருந்தும் வேண்டியதில்லை. இங்ஙனம் அளவறிந்து உண்டு வாழ்வதே, அரிதிற் பெற்ற மனித உடலை நீண்டநாள் காக்கும் வழியாகும். இதற்கு மாறுபட்டு நடந்தால் துன்பமே மிகும் என்பதை, உண்ணும் முறையையே உவமையாக வைத்து வள்ளுவர் நன்கு விளக்குகிறார்.

உண்ட உணவு நன்கு அற்றுக் கழிவுப் பொருள்கள் முழுவதும் வெளியேறிய பின்பு, காலநிலை, இடநிலை, உடல்நிலை ஆகியவற்றுக்கேற்ற உணவை, ஏற்ற அளவில் ஒருவன் உண்டு வருவானேயானால், அவனது குருதியும் உடலும், தூய்மையும் வலிவும் பெற்று அவன் நோயற்று விளங்குவான். அவன் மனமும் அமைதி பெறும். நன்முறையில் முயன்று பெரும் பொருளீட்டி, இன்பந்துய்த்து, அறம் செய்து, வீடு பெறுவதற்குரிய நல்வாழ்வு நடாத்துவான். ஆதலால் அவனிடத்தில் எப்பொழுதும் இன்பம் நிலைத்திருக்கும். மறுமை இன்பமும் கிட்டும்.

அதைப்போல, மிக அதிகமான இரையை விழுங்குபவனிடத்து எப்பொழுதும் நோய் நிலைத்திருக்கும்.

உண்ட உணவு அறுவதற்குமுன், மீண்டும் மீண்டும் நாவின் சுவைக்காக வேண்டி ஒருவன் அளவுக்கு மேல் மென்று விழுங்கிக் கொண்டிருப்பானேயானால், உணவை யரைக்கும் உள்ளுறுப்புக்கள் சோர்ந்து, வலிவிழந்து

விடும். ஆதலால் அரைக்கும் வேலை குறைந்து, அரை குறையாக அரைக்கப்பட்ட கழிவுப் பொருள்களும், முழு வதும் அரைக்கப்படாத உணவுப் பொருள்களும் உடலுள் தேங்கி நஞ்சுத் தன்மை பெற்று, குருதியைக் கெடுத்து, நச்சுக்கிருமிகளைப் பெருக்கிப் பல்வித நோய் களை யுண்டாக்கும். இப் பழக்கம் தொடர்ந்து வந்தால், அவனது உடலிலும் நோய் நீங்காது நின்று துன்புறுத் தும், மருந்துச் செலவு மிகும். மருந்தையும் விழுங்கிக் கொண்டு இரையையும் விழுங்கிக் கொண்டு இருப் பதால், நோய் நிலைத்து, உடல் வளங்கெட்டு, மன அமைதி குறைந்து, முயற்சிகுன்றி, வருவாய் குறைந்து, அறமும் இன்பமும் நீங்கி நீங்காத் துன்பமே அடைவான். அறம் நீங்குவதால் வீடுபேறும் மறுமை யின்பமும் இல்லாகும்.

இவ்வளவு கருத்துக்களையும், நீதிகளையும், வாழ்வு முறைகளையும்,

> இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
> கழிபே ரிரையான்கண் நோய் (குறள்-௯௪௬)

என்ற உவமைக் குறள் விளக்குகிறது.

இழிவறிந்து—அற்றது அறிந்து. கழிபேரிரை—மிக அதிக உணவு.

கழிபேரிரையான் என்றதால், பாம்பு முதலிய பிராணிகள் இரையை அளவுக்குமேல் விழுங்கிவிட்டு, வயிறு பெருத்து, அசைய முடியாமல் வருந்தி, சிலசமயம் பகைக்கு எளிதில் இரையாவதைப்போல, அளவுக்கு மேல் உண்பவனும் வயிற்றுவலியால் வருந்துவதோடு, நோய்ப்பகைக்கு எளிதில் இரையாகி அழிந்துவிடுவான், என்பதும் புலப்படுகிறது.

பசித்தீயை அடக்கும் அளவுக்குமேல், ஆராயாமல், எவ்வளவுக் கெவ்வளவு அதிகம் உண்கின்ருரே அவ்வளவுக்கவ்வளவு நோயும் அதிகமாகும்.

ஆதலால், நாம் முன்பே உண்டது நன்கு அற்ற பிறகு, கால, இட, உடல்நிலைகளுக் கேற்ப அளவுடன் உண்டு, நோயற்ற வாழ்வும், அதனுல் குறைவற்ற செல்வமும் பெற்று அறமியற்றி, இன்பந்துய்த்து வீடு பெறுவோமாக.

## 39. விசும்பின் மதிக்கண் மறு

தக்க உணவைத் தக்ககாலத்தில் அளவுடன் அருந்தி உடலைப் பேணுதலைப்போல, குடிமைப் பண்புகளையும் தவருது பேணி வாழ்தல் வேண்டும். நல்லுடல் பெற்றும் நற்குடிப் பண்பில்லை யென்ருல், அவ்வுடலால் நன்மையினும் தீமையே மிகுதியாகும். பண்பில்லா மனிதப்பிறவி பயனற்றதாகிவிடும். மனிதப்பிறவியைப் பயனுடையதாக்கும் குடிமைப்பண்புகள் யாவை?

நடுநிலை தவரு நேர்மையும், தீயவற்றுக்கு நாணுதலும், நல்லொழுக்கமும், வாய்மையே மொழிதலும் உயர்குடிக்குரிய பண்புகளாகும். இத்தகைய குடிமைப் பண்புடையோரிடம் ஏழைகள் உதவி நாடி வந்தால், இன்முகத்துடன் வரவேற்று, இன்சொல் பேசி, ஏழைகளை யிகழாமல், அவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்து உதவுவர். கொடுக்க முடியாத நிலை ஏற்படினும் நல்லோர் நற்குடிப் பண்புகளைக் கைவிடார். மாசற்ற பெரியோர் எக்காரணத்தை முன்னிட்டும் வஞ்சகச் செயல்களைச் செய்யார். பலகோடி கிடைப்பதாயினும், உயர்குடிக்குரிய பண்புகளில் சிறிதும் தவருர்.

தூயவெள்ளையாடையில் படும் அழுக்கு தெளிவாகத் தெரிவது போல், நற்குடி பிறந்தாரிடம் தோன்றும் குற்றமும் தெளிவாகத் தெரியும். இதற்கு வள்ளுவர் காட்டும் உவமையை நோக்குவோம்.

உயர்ந்த வானத்தின் கண் உலகமெல்லாம் காணும் நிலையில் விளங்குவது திங்கள். அது இரவில் உலகின் இருள் நீங்கப் பேரொளி நல்கும் பெருவிளக்காய்த் திகழ்கிறது; அழகும், குளிர்ச்சியும், ஒளியும் தந்து யாவரையும் கவர்கிறது; குழந்தை முதல், முதியவர் வரை, கல்லா மூடர் முதல், பன்னூல் கற்றுய்ந்த புலவர் வரை யாவரையும் கவர்ந்து இன்பமூட்டுகிறது; உலக உயிர்களிடையே வேற்றுமை பாராட்டாது எல்லா உயிர்களுக்கும் சமமான ஒளியைத் தருகிறது; முறையாகத் தேய்ந்தும், மறைந்தும், வளர்ந்தும் வருவதன் மூலம், பிறப்பு, வளர்ச்சி, குறைவு, இறப்பு முதலிய நிலையாமை நீதிகளை உலகுக்குணர்த்துகிறது. இவ்வளவு சிறப்புக்களும் வாய்ந்த மதியினுடைய தூய ஒளிக்கிடையே, ஏதோ கருமை தோன்றுகிறது. பலரும் காணும் உயர் வான இடத்தில் பேரொளியுடன் திகழ்வதால், அதனிடையே தோன்றும் கருமையாகிய களங்கமும் யாவருக்கும் தெளிவாகத் தெரிகிறது.

அதைப்போல, உயர்குடிக்குரிய பண்புகளெல்லாம் பெற்று, உயர்ந்த நிலை யெய்தி, பலருக்கும் பயன்படும் நிலையிலும், பலரும் போற்றும் நிலையிலும் வாழும் நல்லோர் ஒருவரிடம், சிறு குற்றம் தோன்றினாலும், அக்குற்றம் யாவருக்கும் தெளிவாகவும் பெரியதாகவும் தோன்றும்.

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து (குறள்-௯௫௭)

விசும்பு—வானம். மறு—திங்களில் தோன்றும் கருமை.

வானமெங்கும் பரந்துகிடக்கும் மேகக்கூட்டங்களின் கருமையைப் பற்றிப் பேசுவார் இல்லை. ஆனால் திங்களிடையே இருக்கும் சிறு கருமையைப் பற்றிக் கதை பேசாதார் இல்லை. பற்பலர் பற்பல விதமாகக் கதையளப்பர். அதைப்போன்றே, சாதாரண மக்களிடையே தோன்றும் பற்பல குற்றங்களைப் பற்றிக் கவலை கொள்ளாத மக்கள், உயர்ந்தோரிடையே சிறு குற்றம் தோன்றினும், அதை மிகப் பெரிதாக்கிப் பற்பல விதமாகக் கதைபேசித் திரிவர். ஆதலால் உயர்குடிப் பண்புடையோர், தம்பால் சிறு குற்றமும் தோன்றா வண்ணம் மிக எச்சரிக்கையோடு வாழ்தல் வேண்டும். இவ்வளவு கருத்துக்களையும், நயங்களையும், 'விசும்பின் மதிக்கண் மறுப்போல்' என்ற உவமை விளக்குகிறது.

இதே கருத்தைச் சிறு மாற்றத்துடன் நாலடியார் நவில்கிறது. திங்களும் சான்றோரும் பல்வகையிலும் ஒப்பர். ஆனால் திங்கள் தன்பால் களங்கத்தைப் பொறுத்துக்கொள்ளும். சான்றோர் தம்பால் சிறுகுற்றம் தோன்றினும் அதைப் பொறுக்க முடியாமல் வருந்தி அழிவர்.

"அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் - திங்கள்
மறுவாற்றும் சான்றோர் அஃதாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா(சு) உறின். (நாலடியார்-க௫க)

நிலாப்பாரிக்கும் – ஒளி பரப்பும். தெருமந்து – வருந்தி. மாசு-குற்றம்.

ஒருவர் வாயிலிருந்து வரும் சொல்லே அவர் குடிப்பிறப்பை யுணர்த்தும். எதைப் போல? நிலத்திற் கிடந்தமை கால் காட்டுவதைப்போல.

நிலத்தினுள் மறைந்து கிடக்கும் விதை, முளைப்பதற்குரிய ஈரம் கிடைத்தவுடன் முளைக்கின்றது. முளைத்தவுடன் அவ்விடத்தில் விதையொன்று மறைந்திருந்தது என்றும், அது என்ன விதையென்றும், அதன் இயல்பு எத்தகையது என்றும் முளையே காட்டி விடும். அதைப்போல குடிப்பிறந்தார் வாயிலிருந்தும் வரும் சொற்களே அவர்களினுள்ளே மறைந்து கிடந்த குடிப்பிறப்பை யாவரும் அறிய உணர்த்தும்.

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். (குறள் -௯௫௯)

கால்–முளை.

இக்குறளால், ஒருவர் சொல்லும் சொல், நல்ல பயனுடைய உயர்ந்த சொல்லாயின் அவர் உயர் குடியினர் என்பதை அறியலாம் என்றும், பயனற்ற வீண் சொல்லாயின்–தீய சொல்லாயின், அவர் தாழ் குடிப்பிறப்பினர் என்பதை அறியலாம் என்றும், உயர்குடிப் பிறப்பினர் தவறியும் பயனற்ற வீண்சொல்லை யும், தீயசொல்லையும் சொல்லாது, காத்துக்கொள்ள வேண்டும் என்றும் உணரலாம்.

நாம் யாவரும் உயர்குடிக்குரிய ஒழுக்கங்கள் யாவும் பெற்று, தீயவை சொல்லவும் செய்யவும் நாணி, அவை நம்பால் தோன்ருவண்ணம் காத்து, நல்லவற்றையே எஞ்ஞான்றும் எண்ணியும், சொல்லியும், செய்தும் யாவ–ரிடமும் பணிவு கொண்டு ஈர நெஞ்சுடன் பலருக்கும் பயனுடைய உதவியாளராய் வாழ்தல் வேண்டும்.

## 40. மயிர் நீப்பின் வாழாக் கவரிமா

உயர் குடிப்பிறப்பினருக்குத் தன்மானங் குன்ருத வாழ்வே பெரு வாழ்வாகும். மானமிழந்து வாழும்

வாழ்வு, மனித வாழ்வேயன்று. எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாயினும், மானங்குன்றும் படியான செயலைச் செய்தல் கூடாது. இழிசெயலால் பெருஞ் செல்வமே கிடைப்பதாயினும், அச்செயலைச் செய்தல் கூடாது. செல்வம் மிக்க காலத்து அடக்கமான வாழ்வும், வறுமை யுற்ற காலத்து தன்மானம் குன்றாத பெருமித வாழ்வும் நடத்துதல் வேண்டும். உயர்குடிப் பிறந்தோர், தம் நிலைக்குத் தாழ்ந்த—தகாத—செயலைச் செய்தால் இழித்து ஒதுக்கப்படுவர். எங்ஙனம்?

மனித உறுப்புக்களிலேயே இடத்தாலும், சிறப் பாலும் உயர்நிலை யெய்தியிருப்பது தலை. இத் தலையை அணி செய்வதும், கொடிய தட்ப வெப்பங்களால் பாதிக் கப் படாமல் காப்பதும் மயிர். தலையைப் பாதுகாக்கும் மயிர் தலையிலிருக்கும் வரை மக்களாலும் நன்கு மதிக்கப் பட்டுப் பாதுகாக்கப்படுகிறது. இளைஞர்கள், நறுமண எண்ணெய் தடவி, சீப்புங் கையுமாகக் கண்ணாடி முன் நின்று தலை மயிர்களை நெழி நெழியாகவும், நேராகவும் வளைவாகவும் பலவகைக் கோணங்களில் படிய வைத்து அணிசெய்து மகிழ்வதில் நெடுநேரம் போக்குகின்றனர். தலையிலிருக்கும் வரை மயிருக்கு அவ்வளவு மதிப்பு. தலை சீவும் போது கீழே உதிரும், மயிரும், காலால் மிதி பட்டுக் குப்பையில் கூட்டி ஒதுக்கப்படுகின்றன.

ஆண்களைவிடப் பெண்களே அதிகம் மயிரைப் போற்றி வளர்த்து, நறுமணப்புகையூட்டியும், நறுமண நெய் தடவியும், தலைவாரிப் பின்னியும், மலர் சூட்டியும், பொன்னணி பூட்டியும் சிறப்பிக்கின்றனர். ஆனால் தலைவாரும் போது கீழே உதிரும் மயிர்களைச் சுருட்டிக் கால் விரலில் இடுக்கிக்கொண்டு, மேலும் வாரும் போது உதிரும் மயிர்களை யெல்லாம், அங்ஙனமே

ஒன்று சேர்த்து, இறுதியில் தெருவின் ஒதுக்குப்புறமான ஒரு மூலேயில் எறிந்து, காரி உமிழ்ந்தும் நெட்டி முறித்தும் இகழ்கின்றனர். தலேயிலிருக்கும் மயிருக்குள்ள மதிப்பும், தலேயின் நீங்கிய மயிருக்குள்ள அவமதிப்பும் என்னே! என்னே!

அதைப் போலவே, உயர்குடியில் பிறந்தாரும், ஏனைய உயர்நிலேயிலிருப்பாரும் அவரவருடைய உயர் நிலேயிலிருந்து தாழ்ந்து தகாத செயல்களைச் செய்து விட்டால், பழைய மதிப்பை யிழந்து யாவராலும் பழித்துக்கூறி ஒதுக்கப்படுவர். ஒவ்வொரு மனிதரும் அங்ஙனமே அவரவர்க்குரிய நற்கடமையிலிருந்து தவறி தகாதன செய்துவிட்டால் யாவராலும் பழித் தொதுக்கப்படுவர்.

> தலேயின் இழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலேயின் இழிந்தக் கடை. (குறள்-௯௬௪)

இழிந்த–நீங்கிய.

கல்வி, செல்வம், பதவி, புகழ் முதலியவற்ருல் மலேபோல் உயர்ந்தவரும், மானம் கெடும் செயலேக் குன்றிமணியளவு செய்தாலும், மதிப்பிழந்து தாழ்ந்து விடுவர். மானங்கெட்ட வாழ்வால் புகழும் கிடைக்காது; வீட்டுலக வாழ்வும் கிடைக்காது. மதியாதாரைப் பின் தொடர்ந்து வாழ்வதைவிட வறுமையே மேலாகும். மானமிழந்தபின் உயிர்வாழ்வதைவிடச் சாவதே மேலாகும். சான்ருேர் மானமிழந்து உயிர் வாழார்.

கவரிமான், தன் உடலிலிருந்து ஒருமயிர் நீங்கினும், தன்மானம் போய்விட்டதாகக் கருதி, உடனே உயிர் விட்டுவிடும். இத்தகைய கவரிமானேப் போன்ற மானம் மிக்க சான்ருேர், என்ருே ஒருநாள் உடலே விட்டுப்

பிரியும் உயிரைவிட, என்றென்றும் நிலைத்திருக்கும் மானமே பெரிது எனக் கருதுவர். ஆதலால் மானம் குன்றும் நிலைவந்தால், சிறிதும் தயங்காமல், அழியும் உயிரை விட்டு, அழியா மானத்தைக் காப்பர்.

> மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னர்
> உயிர்நீப்பர் மானம் வரின். (குறள்-கூகூ)

இக்குறளுக்குச் சான்ருகச் சங்க காலத்தில் வாழ்ந்த பல தமிழ் மன்னர்கள் உயிர்நீத்து மானங் காத்துப் பெரும்புகழ் பெற்றனர்.

ஒரு சமயம் சேரமான் பெருஞ்சேரலாதனுக்கும் சோழன் கரிகாற் பெருவளத்தானுக்கும் பெரும்போர் நடைபெற்றது. சோழன் விட்ட ஓரம்பு, அஞ்சாது எதிர்த்துப் போர் செய்த சேரன் மார்பில் பாய்ந்து முதுகில் ஊடுருவி விட்டதால், புறப்புண்ணும் ஏற்பட்டு விட்டது. அப் புறப்புண்ணையும் இழுக்கெனக் கருதிய சேரமான் அக்கால முறைப்படி வடக்கிருந்து உயிர் நீத்து மானத்தைக் காத்தான். புறநானூறு 65, 66 ஆகிய இருபாடல்களும் இச் சான்ருேனின் பெரும் புகழை இயம்பிக் கொண்டுள்ளன.

மற்ருெரு சமயம் சேரமான் கணைக்கால் இரும் பொறைக்கும் சோழன் செங்கணுனுக்கும் நடந்த போரில் சேரன் சிறைபிடிக்கப்பட்டான். நீர் வேட்கை மிக்க சேரன் சிறைக் காவலனைத் தண்ணீர் கேட்ட போது, சிறைக்காவலன் சேரநாட்டுக் காவலனைச் சிறிதும் மதியாது, காலந்தாழ்த்துத் தண்ணீர் கொடுத்தான். மானம் மிக்க சேரன் அத்தண்ணீரைக் குடிக்கவும், உயிர்வாழவும் விரும்பாமல், மானத்தின் உயர்வு குறித்து ஒரு பாடலை எழுதி வைத்துவிட்டு,

அத் தண்ணீரை விசிவிட்டு, உடனே உயிரையும் விட்டு மானத்தையும் காத்தான். சிறையில் அவனே பாடிய, 74ஆவது புறப்பாட்டு அவன் புகழை இயம்பிக் கொண்டே உள்ளது.

பாண்டியன் நெடுஞ்செழியன் பொற்கொல்லன் சூழ்ச்சியை நம்பியதால் குற்றமற்ற கோவலனைக் குற்றவாளியெனக் கருதிக் கொன்ருன். பின்னர் கண்ணகியால் உண்மை யுணர்த்தப்பட்ட போது, உடனே தன்னுயிரை விட்டு, வளைந்த செங்கோலை நிமிர்த்தி அழியாப் புகழ்பெற்ருன். இவன் புகழைச் சிலம்பு இசைத்துக் கொண்டுள்ளது.

இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு (குறள்-௯௭0)

மானங்கெட நேர்ந்தபோது, உயிர் வாழ விரும்பாது உயிர்விடும் மானமுடையாரின் புகழை உலகம் போற்றிக் கொண்டே யிருக்கும்.

ஒவ்வொருவரும், தலையினிழிந்த மயிரனையராக வாழாமல், மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னராக வாழ்தல் வேண்டும்.

## 41. ஒருமை மகளிரே போல

நற்குடிப்பிறந்தார் மானத்துடன் வாழுங்காலத்து, செயற்கரிய செய்தற்குரிய ஊக்கமிகுதி பெருமையைக் கொடுக்கும். பிறப்பினுல் அனைவரும் சமமாயினும், அவரவர் செய்யும் செயலுக்கேற்பவே சிறப்பும் அமையும். மேன்மைதரும் செயலைச் செய்வோர், எங்கிருப்பினும், எந்நிலையிலிருப்பினும் மேலோரே.

ஆடவர்க்குப் பெருமைதரும் செயல் யாது? ஒருமை மகளிர்போல வாழ்தலே ஆடவர்க்குப் பெருமை தரும் செயலாகும்.

கற்பு சான்ற பெண், மனையறத்திற்குரிய மாண்புகள் நிறையப்பெற்று, கணவனுடைய வருவாய்க்குத் தக்க செலவு செய்து, தன்னைக் கற்பொழுக்கத்தினின்றும் வழுவாமல் காத்துக்கொண்டு, கணவனுடைய உடலை யும் உள்ளத்தையும் பேணி, தகுதிவாய்ந்த புகழைக் காத்து, இவற்றில் சோர்வில்லாதவளாகி, பிற தெய்வம் தொழாது, தன் கணவனையே தெய்வமாகத் தொழுது வாழ்வாள். இத்தகைய கற்புடைய பெண்களால், உழவர்கள் வேண்டும்போது 'பெய்' என்றவுடன் மழை பெய்தால் எவ்வளவு நன்மையோ, அவ்வளவு நன்மை, அவர்கள் குடும்பத்திற்கும், சமுதாயத்திற்கும், நாட்டிற் கும், உலகுக்கும் உண்டாகும்.

அதைப்போல, ஒரு ஆண் மகனும், இல்லறத் தலைவனுக்குரிய மாண்புகளைப்பெற்று, குடும்ப நிலைக் கேற்ப பொருளீட்டி பிறன்மனை நோக்கா பேராண்மை பூண்டு, தன்னைச் சார்ந்தோரை யெல்லாம் நன்கு பேணி, புகழ் காத்து, சோர்வின்றி, தன்னைத் தெய்வம் எனப்போற்றும் மனையாளைத் தானும் அங்ஙனமே போற்றிச் செயற்கரிய செய்து வாழ்ந்தால், அவனுக்குப் பெருமையுண்டாகும்.

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு (குறள்-௯௭௪)

ஒருமை மகளிர்–கற்புடைய பெண்கள்

இத்தகைய ஒருமை மகளிர் போன்ற பெரியோர், தம்மினும் பெரியாரைத் துணையாகக்கொண்டு, அவர்

வழி நின்று, யாவரிடமும் பணிவுகொண்டு, செருக்கு நீக்கி, பிறருடைய குற்றங்களை மறைத்துக் குணங்களையே பேசி, அறநெறியில் நின்றே செயற்கரிய செயல்கள் பற்பல செய்து, பருவம் தப்பாது அளவுடன் பொழியும் மழைபோன்று உலகிற்குப் பெரும் பயன் செய்வர்.

## 42. நன்பால் கலந்தீமையால் திரிதல்

பெருமையும் சான்ருண்மையும் கொண்டு, யாவரிடத்தும் எளிமையாகப் பழகி அவரவர் இயல்பறிந்து வாழ்ந்தால், பண்புடைமை எளிதாக வந்தமையும். அன்பும், நற்குடிப் பிறப்பும் பண்பைப் பெருக்கும். நீதி கலந்த அறச்செயலாற்றி, விளையாட்டிற்காகவும் பிறரை இகழாமல், பகைவரிடத்தும் அன்பு காட்டி வாழும் பண்புடையார்கள் வாழ்வதால் உலகமும் அழியாமல் நிலைத்துள்ளது. இத்தகைய பண்புடையார் இன்றேல் உலகம் என்ருே அழிந்திருக்கும். கூரிய அறிவிருந்தும் மக்கட் பண்பில்லாதவர் மரத்திற்கொப்பாவர்.

ஓங்கி வளரும் மரத்தடியிலிருக்கும் சிறு தாவரங்களின் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படும். அதைப்பற்றிக் கவலைகொள்ளாமல், மரமானது, தன் கீழிருக்கும் தாவரங்களின் சத்தையும், தன்னைச்சுற்றிச் சிறிது தூரம்வரை யிருக்கும் பயிர்களின் சத்தையும் தானே உறிஞ்சிக்கொண்டு, அவற்றிற்கு வேண்டிய கதிரவன் ஒளியையும் தடுத்து, அவற்றின் வளர்ச்சியைக் கெடுத்துத் தான்மட்டும் மேன்மேனும் ஓங்கி வளரும். மரத்தின் கீழோ, அதன் முன்னே நடக்கும் எந்த அநீதிச் செயலையும் அது தடுக்காது.

அதைப்போல, இருப்பையும் தேய்க்கும் அரத்தைப் போன்ற கூரிய அறிவு படைத்தும் மக்கட்பண்பில்லாதவர், தன்னலமொன்றே பெரிதெனக்கருதி, தன் கூரிய அறிவின் திறத்தால், தன்னைச் சார்ந்தோரையும் ஏனையோரையும் வஞ்சித்துப் பிறர் வாழ்வு நைவது பற்றிக் கவலைகொள்ளாது, தம் வாழ்வை வளப்படுத்தவே முயல்வர். தமக்கு முன்னால் எவ்வுயிருக்கு எத்துன்பம் நேரினும் அதை நீக்க முயலமாட்டார். எந்த அநீதியையும் தடுக்க முயலமாட்டார். மாறாக அநீதியைப் பெருக்கவே முயல்வர். மரத்திற்கும் பண்பில்லாதவர்க்கும் என்ன வேறுபாடு? ஒரு வேறுபாடும் இல்லை.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (குறள்-கூகா)

'அரம்போலும் கூர்மையர்' என்றதால், பெறப்படும் நயம்; அராவப்படும் இரும்புக்கருவியை ஓரிடத்தில் இருத்தி, அரம் மட்டும் முன்னும் பின்னும் நகரும். ஆனாலும் தான் தேயாமல் கருவியைத் தேய்க்கும். அதைப் போல, மக்கட் பண்பில்லாதவர், தம் கூரிய அறிவால் சூழ்ச்சிகள் பலசெய்து, தம்மை நம்பியோரை ஓரிடத்தில் அமரச் செய்து அவர்களுக்கு உழைப்பது போல் பாசாங்கு காட்டி, அவர்களைச் சுரண்டிக் கெடுத்துத் தாம் முன்னேற முயல்வர்.

திருவள்ளுவர் ஒரு உவமைக்குள் மற்றோர் உவமை வைத்து விளக்கும் நயம்தான் என்னே?

தன்னைச் சார்ந்த தாவரங்களின் சத்தை உறிஞ்சி வளர்ந்த மரம், மக்களால் வெட்டப்படுங் காலத்துத் துண்டு துண்டாக வெட்டிச் சிதைக்கப்படும். அதைப்

போல மக்கட்பண்பில்லாதவர் பிறரை வஞ்சித்து வாழ்ந்தாலும், அவர்கள் குற்றங்கள் வெளிப்பட்ட காலத்து, அரசாங்கத்தாரால் நன்கு ஒறுக்கப்படுவர்.

இவ்வளவு நயங்களையும் நீதிகளையும் உணர்த்தும் குறளை மற்றுமொருமுறை படியுங்கள்.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட் பண்பில்லா தவர்

இத்தகைய பண்பற்றோரிடம் பெருஞ் செல்வம் சேர்ந்தால், அது திரிந்த பால்போல் பயனற்றுப்போகும்.

ஆவின்பால், உணவு நூலறிஞர் வகுத்துக் கூறிய உடல் வளர்ச்சிக்கும் நலத்திற்கும் இன்றியமையாத அறுவகை உணவுச் சத்துக்களும் நிறைந்தது; சுவையும் மணமும் உடையது. உடலுக்கு வலிவூட்டக்கூடியது; குழந்தை முதல் முதியோர்வரை யாவர்க்கும் ஏற்ற உணவு; பல்வகை நோய்களைத் தீர்க்கும் மருந்து. இவ்வளவு சிறந்த ஆவின்பால் அழுக்குப்பாத்திரத்தில் ஊற்றி வைக்கப்பட்டால், அது திரிந்து கெட்டுவிடும். திரிந்த பாலை அறிந்தோ அறியாமலோ பருகிவிட்டால் தீமையே பயக்கும். அதைப்போல, பண்பிலான் பெற்ற பெருஞ் செல்வமும் பயனற்றுத் தீமையே பயக்கும்.

மக்கள் பெறவேண்டிய உறுதிப் பொருள்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கனுள், நன்பொருள் பெற்றால் தான் அறஞ்செய்யவும் இன்பந் துய்க்கவும் வீடுபெறவும் இயலும். பொருளின்றி இவ்வுலகில் வாழவே இயலாது. பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை என நாயனாரும் நவின்றார். அன்பீன் அருளென்னும் குழவியை வளர்க்கும் செல்வச் செவிலியும்

பொருளே. இத்தகைய சிறப்பு வாய்ந்த பொருட் செல்வம் பெருமளவில் பண்பிலான் கையில் சிக்கினல், அச்செல்வம் முழுதும் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் தீமை பயக்கவே பயன்படும். எவ்வுயிர்க்கும் எந்த நன்மையும் செய்யாது கயவர்க்கும் கொலைஞர்களுக்கும் கையூட்டுப் பொருளாகித் தீமையையே பயக்கும்.

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று. (குறள்–க000)

கலம்–பாத்திரம்.

பயன்மிக்க பாலை அழுக்குப் பாத்திரத்தில் ஊற்றிக் கெடுக்கும் குற்றம், அங்ஙனம் ஊற்றுவோர் அறிந்தோ, அறியாமலோ செய்யும் தவருகும். ஒருமுறை தவறிஞலும் மறுமுறை தவருமல் காத்துக்கொள்ளவேண்டும். கலத்தில் பெய்தவுடன் அழுக்குக் கலம் என்று தெரிந்தால், உடனே நல்ல கலத்திற்கு மாற்றிவிடவேண்டும்.

அதைப்போல, பயன்மிக்க செல்வம் பண்பற்றவன் கையில் சிக்கவும் சேரவும் விடுவது சமுதாயமும் அரசாங்கமும் செய்யும் தவருகும். பண்பற்றவன் தகாத வழியில் பொருளை யீட்டினுலும், முன்னேரால் ஈட்டிச் சேர்க்கப்பட்டதை வைத்திருந்தாலும், அதை உடனே பறிமுதல்செய்து நாட்டு நலத்திற்காகப் பயன்படுத்துவதே நல்ல அரசாங்கத்தின் கடமையாகும்.

செல்வம் எனப் பொதுவாகக் கூறியதால், பொருட் செல்வம், கல்விச் செல்வம், மக்கட்செல்வம் முதலிய பலவகைச் செல்வங்களுள் எச்செல்வம் பண்பிலார்க்கு உரிமையாஞலும் அது தீமையே பயக்கும்.

## 43. மாரி வறங்கூர்ந்தனையது

பண்பற்றவர் கையில் சிக்கிய செல்வம் பயனற்றுப் போவதைப்போல, கஞ்சர்கள் கையில் சிக்கிய செல்வமும் பயனற்றுப்போகும். ஏராளமான செல்வம் சேர்த்த ஒருவன், உண்டும் உடுத்தியும் அனுபவிக்காமல் மேலும் மேலும் சேர்த்துக்கொண்டிருந்தால், அவன் செத்தவனுகவே கருதப்படுவான். பொருளால் எல்லாம் ஆகும் என்று நிறைய ஈட்டி வறியார்க்கு ஈந்து உதவாது கழியும் கஞ்சனுக்குத் தீய பிறவியே உண்டாகும். அத்தகையோர் வாழ்வதே நிலத்திற்கு வெறும் சுமையாகும். கஞ்சன் இறந்தபிறகு அவன் பெயர் சொல்ல இவ்வுலகில் என்ன இருக்கிறது? வறியவர்க்குங் கொடுக்காமல், தானும் அநுபவிக்காத கருமிக்குப் பலகோடி சேர்ந்தாலும், அவற்ருல் ஒரு பயனும் இல்லை. பயன்மிக்க செல்வத்துக்குக் கருமி, நோய் போன்றவன். ஈயாதான் செல்வம் மணமில்லா குமரிபோல் பயனற்றதாகும்.

இளமையும், அழகும், பண்பும் மிக்க ஒரு பெண்ணின் பெற்ருேர், தங்கள் சுயநலக் கொள்கைக்கு ஒத்துவரவில்லை யென்று, பெண் கேட்பவர்களுக்கெல்லாம் மறுப்புச் சொல்லிக்கொண்டே யுள்ளனர். பெண்ணின் மிக்க அழகாலும் பண்பாலும் கவரப்பட்ட இளைஞர் பலர், ஒவ்வொருவராய் வந்து பெண் கேட்டு ஏமாற்றத்துடன் திரும்புகின்றனர். ஆண்டுகள் ஒவ்வொன்ருய்க் கடந்து கொண்டுள்ளன. பெண்ணும் தன் இளமைக் கனவுகளையும், இன்ப உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்திக் கட்டுப்படுத்திக் காம வேதனையால் துடித்து நைகின்ருள். இங்ஙனமே அவள் இளமையும் கழிந்து முதுமையும் வந்து விட்டது.

பண்பும், அழகும் மிக்க அவளை வாழ்க்கைத் துணைவியாகப் பெற்று இல்லறம் நடத்தும் பேறு யாருக்கும் கிட்டவில்லை. அவளும், இல்லற இன்பத்தை யும், பெண்மைக்கே உரிய தாய்மைப் பேற்றையும், மனை விளக்காய் ஒளிவிடும் மாண்பையும் இழந்தாள். இப்பண்புத் திருமகளை மருமகளாகப் பெறும் பேறு யாருக்கும் கிட்டவில்லை. இவளைத் தாயாகப் பெறும் பேறு எம் மக்களுக்கும் கிட்டவில்லை. இப்பண்பு மிக்காளால் பெற்று வளர்க்கப்படும் நல்ல பிள்ளைகளைப் பெறும் பேறு சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் கிடைக்க வில்லை. இவளுடைய சுயநலமே வடிவான பெற்ருேருக் கும் பேரக்குழந்தைகளைக் கொஞ்சும் பேறும், மகளின் மாண்பார்ந்த இல்லற வாழ்வைக் கண்டு களிக்கும் பேறும் கிட்டவில்லை.

அந்தோ! இவ்வளவு பேரும் இவ்வளவு பயன் களையும் இழக்கும்படியாக, அப்பண்பின் திருவுருவை முதுமை கவ்விக்கொண்டது. அதைப்போல, பலருக்கும் பலவகையாலும் பயன்பட வேண்டிய செல்வம் பெருமளவில், ஈயாத கஞ்சன் கையில் சிக்கிக் கொண்டால், அச்செல்வம் பயனற்றுப்போகும். அதனுல் ஒருவரும் பயன்பெறவும் முடியாது. உடையவனும், ஈத்துவக்கும் இன்பத்தையும், ஈகைப் புகழையும் இழப்பதோடு, அழியாப்பழியும் எய்தி, இருமைப் பயன் களையும் இழந்த வீணனுவான்.

அற்ருர்க்(கு)ஒன் ருற்ருதான் செல்வம் மிகுநலம்
பெற்ருள் தமியள்மூத் தற்று. (குறள்-க00எ)

அற்ருர்க்கு-ஏழைக்கு. ஆற்ருதான்-ஈத்து உதவாதான்.
மிகுநலம்-மிக்க பண்பும் அழகும்.

ஈயாத் தன்மையால், பிறரால் விரும்பப்படாதவன் செல்வம் ஊரின் நடுவில் நச்சுமரம் பழுத்ததற்கு ஒப்பாகும்.

ஊரின் நடுவில் யாவருக்கும் பொதுவான ஓரிடத்தில் நச்சுமரம் ஒன்று வளர்ந்து காய்த்துக் கனிந்து குலுங்கு கிறது. அதே இடத்தில் நல்ல பயன் தரும் மரம் இருந்தால், தங்குவதற்கு நிழலும் உண்பதற்குச் சுவை யான கனிகளும் கொடுத்துதவும். ஆனால் இந் நச்சு மரத்தாலும் கனிகளாலும் என்ன பயன்? மரத்திலிருந்து நச்சுக்காற்று வருவதால், அதன் நிழலுக்கு யாரும் செல் வதில்லை. கனியில், உண்டார் உயிரைக் கொல்லும் நஞ்சு இருப்பதால், யாரும் உண்பதும் இல்லை. பறவை களுக்கும் விலங்குகளுக்கும் பயனில்லை. பயன் படாதது மட்டுமல்ல, கனிந்து விழுந்த கனிகளை அறியாமல் தின்னும் குழந்தைகள், கால் நடைகள் முதலியவற்றின் உயிர்க்கும் இறுதி நேர்கின்றது.

அதைப் போலவே, 'செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே' என்ற நீதியை உணர்ந்த நயனுடையானிடம் சேர்ந்து யாவருக்கும் பயன்பட வேண்டிய செல்வம், அந் நீதியை உணராத கஞ்சனிடத்தில் சேர்ந்ததால், அவனிடம் சென்று நச்சு வாரும் (விரும்பிக் கேட்பாரும்) பெறுவாரும் இன்றி, பயனற்று முடங்கிக் கிடக்கிறது. அதுமட்டுமன்று, ஈந்து உதவாமல் மேலும்மேலும் சேர்ப்பதால், அளவுக்கு மேல் பெருகிய செல்வம், அவனுக்குச் செல்வச் செருக்கை யுண்டாக்கித் தீமை செய்யத் தூண்டி, அவன் செய்யும் தீமைகளுக்குப் பயன்படவும் செய்கிறது.

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. (குறள்-க00அ)

நச்சல்–விரும்பிக் கேட்டல். நச்சு–நஞ்சு.

இங்ஙனம் பொருள் மீதுள்ள பற்றால், யாரிடமும் அன்பு காட்டாமல், அறஞ்செய்யாமல், தானும் நன்கு அநுபவிக்காமல், இவறல் தன்மையாக ஈட்டிச் சேர்த்த பெருஞ்செல்வம் திடீரென்று ஒருநாள் பிறரால் கவரப் பட்டு, ஈட்டியவனுக்கும் பயன் படாமல் போகும்.

இவற்றையெல்லாம் நன்குணர்ந்த நல்லோர், தாம் சேர்த்த செல்வத்தை யாவர்க்கும் கொடுத்துதவுவர்.

உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது உணவு. உணவுப் பொருளை விளைவிப்பது உழவு. உழவை வளர்ப்பதுநீர்–நீரைத் தருவது மழை, மழைநீர் உணவுப் பொருளை விளைவிப்பதோடு, தானும் உண வாகப் பயன்படுகிறது. அதனால் தான்,

> துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
> துப்பாய தூஉம் மழை.

என்று, வான் சிறப்பில் வள்ளுவர் உரைத்தார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த மழையைத் தரும் மேகம், சில சமயங்களில் வறுமையுற்று மழை பொழியா திருப்பதுமுண்டு. அந்நிலை நீடிக்காமல் மீண்டும் மழை பொழிந்து உலக உயிர்களை யூட்டி யுய்விப்பது உறுதி.

அதைப் போலவே, அருளுள்ளமும், கொடைத் தன்மையும் கொண்ட நல்ல செல்வர்கள், பலர்க்கும் பலநாட்களும் கொடுத்து உதவி வாழும்போது சில சமயம், கொடுக்க முடியாத வறுமையடைவது முண்டு. ஆயினும் அவ் வறுமையை நிலைத்திருக்க விடாமல், பண்புடைச் செல்வர், மீண்டும் மீண்டும் விடாமுயற்சி

யுடன் அறநெறியில் நன்பொருள் ஈட்டி, அற்ருர்க்கும் அலந்தார்க்கும் கொடுத்து உதவிக்கொண்டே இருப்பர்.

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. (குறள்–க0க0)

சீருடைச் செல்வர்–பண்புடைச் செல்வர்.
சிறுதுனி– சிலநாட்கள் இருக்கக்கூடியதும் வெறுப்புத் தரக்கூடியதுமான வறுமை. மாரி – மழை.
வறங் கூர்தல் – பெய்யாதிருத்தல்.

ஆதலின் செல்வம் பெற்ருேர் செல்வத்தின் பயன் ஈதல் என்பதை யுணர்ந்து, வறியவருக்கும், வருந்தி வந்த அறிஞர்க்கும், கலைஞர்க்கும், பொதுப் பணிக்கும் கொடுத்து, அவர்களையும் வாழ்வித்து, தாமும் வாழ்ந்து அழியாப் புகழ் பெறவேண்டும்.

## 44. மரப்பாவை நாணுல் உயிர் மருட்டல்.

பெற்ற செல்வத்தைப் பிறர்க்குதவாமல் சேர்த்து வைத்து இழப்பதால் உண்டாகும் பழிக்கும், செய்யத் தகுந்தவற்றைச் செய்யாமையாலும் செய்யத்தகாத தீயவற்றைச் செய்வதாலும் உண்டாகும் பழிச்சொற்களுக்கும் நாணங்கொண்டு, அப் பழிகள் வராமல் காத்து வாழ்பவரே சான்ருேராவார். பெண்களுக்கு இயற்கையாக அமைந்துள்ள 'நாணம்' என்னும் பண்பு வேறு. பழிபாவங்களுக்கு நாணுதல் வேறு. பழிக்கு நாணுதல் இரு பாலார்க்கும் பொதுவாக அமைய வேண்டிய பண்பாகும். உணவும் உடையும் ஏனைய பிறவும் எல்லா மக்களுக்கும் பொதுவானவை. நாணுடைமை, சான்ருேர்க்கு மட்டும் அமைந்த சிறந்த பண்பாகும்.

உணவு, உடை முதலியவற்றுள் எல்லா உயிர்களும் உணவையே அடிப்படையாகக் கொண்டு வாழும். உணவு இன்றி எவ்வுயிரும் வாழமுடியாது. உண வின்றேல் உடல்நிலை யில்லை. உடல்நிலையின்றேல் உயிர்நிலையுமில்லை.

> உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;
> உண்டி முதற்றே உணவின் பிண்டம். (புறம்-௧௮)

உண்டி-உணவு. பிண்டம்-உடல்.

என்று, புலவர் குடபுலவியனார், பாண்டியன் நெடுஞ் செழியனுக்கு அறிவுறுத்துகிறார். உணவு வளம் குறைந்தால், உடல்வளம் குன்றி உயிர்வளமும் குன்றும். உணவு வளம் பெருகின் உடல் வளமும் பெருகி உயிர் வளமும் பெருகும். உணவு அற்றால், உடல் அற்று, உயிரும் அறும். ஆதலின் உணவை அடிப்படையாகக் கொண்டே உயிர் நிலைபெறுகிறது. அதைப்போல,

தீயவற்றுக்குநாணும் நாணத்தை அடிப்படையாகக் கொண்டே உலகு போற்றும் சால்பு நிலைபெறுகிறது. 'அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து பண்புகளுமே 'சால்பு' என்ற கட்டடத் தைத் தாங்கும் தூண்கள்' என்று சான்றாண்மை அதிகாரத்தில் செந்நாப்போதார் செப்பியுள்ளார். உயிர் வாழ்க்கைக்கு வேண்டியவற்றுள் உணவு முதலிடம் பெறுவதுபோல், சால்பைத் தாங்கும் தூண் களுள் நாண் முதலிடம் பெறுகிறது. பழிபாவங்களுக்கு நாணுபவரிடம்தான், அன்பு, ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையென்ற பண்புகளமையும், நாணமற்றவர் ஏனைய பண்புகளையும் கைவிட்டுக் கூசாமல் தீயவற்றைச் செய்வர். நாணம் உடையாரிடம் ஏனைய பண்புகள்

தாமே ஒவ்வொன்ருக வந்து அமைந்து, சால்பும் நிலை கொள்ளும். ஆதலின் நாணம் ஓங்கின் சால்பும் ஓங்கும். நாணம் குன்றின் சால்பும் குன்றும். நாணம் வீழ்ந்தால் ஏனைய பண்புகளும் வீழ்ந்து சால்பும் வீழும். சால்புக்கும் நாணுக்கும் அவ்வளவு தொடர்புண்டு.

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு. (குறள்–க0கந)

ஊனை—உணவை. குறித்த—முதன்மையாகக்கொண்டன.

'ஊன்' எனப் பாடங்கொண்டு, பரிமேலழகர், உடலுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பை உவமையாகக் கூறுவர். இதுவும் பொருந்துவதே. ஆயினும் மேல் குறளில் 'ஊணுடையெச்சம்' என்றிருப்பதால், இங்கும் 'ஊண்' எனக் கொள்வதே சிறப்பு என்பது, மணக் குடவர், பரிப்பெருமாள், காலிங்கர் முதலானோர் கொள்கையாகும்.

நாணுடைமை சான்ருேர்க்கு அணியாகும். நாண மில்லாதார் நடக்கும் பெருமித நடை பெரும் நோய் போன்றது. பிறருடைய பழியையும் தம் பழியையும் ஒன்ருகக் கருதி நாணுபவர், நாணம் என்னும் பண்புக்கே உறைவிடம் ஆவர். சான்ருேர்கள் உலகத்தைவிட நாணத்தையே பெரிதாகப் பேணுவர். அவர்கள் நாணத் திற்காக உயிரையும் துறப்பர். நல்லோர் நாணுகின்ற தீயவற்றுக்கு ஒருவன் நாணுமல் தீயவற்றைச் செய் தால், அறக்கடவுள் அவனைச் சேர நாணி ஒதுங்கிவிடும்.

நற்குடிப்பிறந்த ஒருவன் தனக்குரிய உயர்ந்த கொள்கையில் தவறினல், அவனுடைய குடிப்பிறப்பின் பெருமையே கெட்டுவிடும். நாணத்தைக் கைவிட்டால் அவனுடைய நன்மைகள் யாவும் அழிந்துவிடும்.

நாணமில்லாதவர் இயக்கம் மரப்பாவை இயக்கத்திற்கு ஒப்பாகும்.

பொம்மலாட்டக்காரர்கள், கை கால் முதலிய உறுப்புக்கள் அசையும் வண்ணம் பல்வகைப் பொம்மைகளை மரத்தால் செய்து, அவற்றை இயந்திரக் கயிற்றால் இணைத்து அக்கயிற்றால் அவற்றை இயக்கிப் பலவகை நாடகங்கள் நடத்திக் காட்டுவர். இத்தகைய பாவை நாடகத்தில் வரும் ஒவ்வொரு மரப்பாவையும் (மரப் பொம்மையும்) இயந்திரக் கயிற்றால் இயக்கப்பட்டு, உயிருள்ளதுபோல் நடித்துப் பார்ப்போரை ஏமாற்றி மயக்கும். ஆயினும் அப்பாவைக்கு மனித இதயம், மனித மூளை போன்றவையும், உயிர்த் தன்மையும் கிடையா. ஆதலின் அதனிடத்தில் மனிதத்தன்மை ஒன்றுமே இல்லை.

அதைப்போல, பழிச்சொல்லுக்கு நாணாதவர், எல்லாவித குற்றங்களையும் சிறிதும் அஞ்சாமல் செய்பவராகையால், மனித இதயமும், மனித மூளையும், மனிதத்தன்மையும் அற்றவரே. ஆயினும் அவருடைய இயக்கத்தையும் வடிவத்தையும் நோக்கும்போது எல்லாம் பெற்ற நல்ல மனிதரைப்போல் தோற்றமளித்து மயக்கி ஏமாற்றுவர். ஆதலால் நாணகத்தில் இல்லாதவர்க்கும், கயிற்றால் இயக்கப்படும் மரப்பாவைக்கும் உயிரைத்தவிர வேறு எந்த வேற்றுமையுமில்லை.

நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. (குறள்-௧0௨0)

மரப்பாவை-மரப்பொம்மை. நாணால்--கயிற்றால். மருட்டி-மயக்கி.

ஆதலின் நாம் ஒவ்வொருவரும் பழிபாவங்களுக்கு அஞ்சுய் நாணம்பெற்று, அதன்முலம், அன்பு, ஒப்புரவு, கண்ணேட்டம், வாய்மை ஆகிய பண்புகளையும் எய்திச் சான்ருேராகத் திகழ முயலவேண்டும்.

## 45. அமரகத்து வன் கண்ணர்

தீயவற்றிற்கு நாணி, நல்வழியில் ஊக்கத்துடன், தான் பிறந்த குடியை முன்னேற்றத் தளராது முயல்வது தலைசிறந்த பெருமையாகும். விடாமுயற்சியும், நிறைந்த அறிவுங் கொண்டு தன் குடியை முன்னேற்ற முயல்பவனுக்குத் தெய்வம் முன்னின்று உதவும். இங்ஙனம் நேரிய வழியில் முயன்று குடியைக்காத்து வாழ்பவனுக்கு, உலகமே சுற்றமாகும். தான் பிறந்த குடியைக் காத்து ஆளுந்தன்மையே ஒருவனுக்குச் சிறந்த நல்லாண்மை யாகும்.

தன்னுட்டின் மீது படையெடுத்துவரும்பகை-வரைத் துரத்தியும், அழித்தும், தன் தாய் நாட்டைக் காப்பதற்காக, ஆயிரக்கணக்கான வீரர்கள் போர்க்களத் திற்குச் செல்வார்கள். ஆனால் அவ்வளவு பேரும் உண்மையிலேயே சிறந்த வீரர்களாகத் திகழ்வதில்லை. உடல் வளமும், அஞ்சாநெஞ்சமும், பேராற்றலும், பெரு வீரமும், போர் அனுபவமும், போர்த் தந்திரமும், தலைமை தாங்கிப் படை நடத்தும் திறமையும் ஒருங்கே அமையப் பெற்ற வீரன் படைத் தலைவனுக இருந்தால் தான், அவன் ஏனைய வீரர்களுக்கும் ஊக்கமூட்டித் திறமை யாகப் படையை நடத்தி வெற்றிகாண முடியும். தன் படைக்குப் பேரழிவு நேர்ந்த போதும், தன் உடலில் விழுப்புண்கள் பல பட்டபோதும் கலங்காமல் பகைவரை எதிர்த்து முன்னேற்றுவான்; விழித்த கண் நோக்கிப்

பகைவர் ஏவிய ஆயுதம் வரினும் கண்ணிமைக்க மாட்டான். தன்னுயுதம் அழிக்கப்பட்டாலும், தன்மேல் ஏவப்பட்ட பகைவனுயுதத்தைக் கொண்டே பகைவனைத் தாக்குவான். கூற்றுவனே சினங்கொண்டு வரினும் அஞ்சாது எதிர்த்துத் தாக்குவான். முடிவில் வெற்றியும் புகழும் அடைவான். தாய்நாட்டைக் காப்பான்.

அதைப் போல, ஒரு குடியில் பல பிள்ளைகள் இருப்பினும், தன் குடியை முன்னேற்ற வேண்டும் என்ற எண்ணமும், செயலாற்றும் திறமையும், அறிவும், ஊக்கமும், விடா முயற்சியும், இடுக்கணழியாமையும், நாணுடைமையும், சால்பும், உடைய நல்லாண்மை யாளன் தான், தன்குடியின் பொறுப்பை யேற்று அதை முன்னேற்றுவான்.

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. (குறள்-௧0உஎ)

அமரகத்து–போர்க்களத்து. வன் கண்ணர்–சிறந்த வீரர். தமரகத்தும்-தம் குடியுள்ளும். பொறை–பொறுப்பு, சுமை.

சிறந்த படைத் தலைவன் இல்லாத படை எவ்வளவு பெரியதாயினும், எவ்வளவு கருவிகள் இருப்பினும், வெற்றிபெறல் அரிது. சிறு படையாயினும், கருவி மாட்சியின்றெனினும், சிறந்த தலைவனைப் பெற்றிருந்தால் வெற்றி பெறுதல் எளிது. (அண்மையில் நடைபெற்ற இந்திய பாகித்தான் போரில், இந்திய விமானப் படைத் தலைவன் அர்ச்சுனசிங்கின் வியக்கத்தக்க வீரச் செயலால், உலகமே வியக்கும் வண்ணம், சாதாரண இந்திய விமானத்தைக் கொண்டே, பாகித்தான் பயன் படுத்திய அமெரிக்க நாட்டு வலிய விமானங்கள் பல நொறுக்கித் தள்ளப்பட்டன. பாகித்தான் தோற் கடிக்கப் பட்டது. இந்தியா வென்றது.)

அதைப்போல நல்லாண்மகன் இல்லாத குடி எவ்வளவு பெரிதாயினும், வளமுடைத்தாயினும் முன்னேற முடியாது. நல்லாண்மகன் உள்ள குடி எவ்வளவு வறுமையில் வாடினாலும் அவன் முயற்சியால் முன்னேற முடியும்.

இவ்வளவையும், 'அமரகத்து வன்கண்ணர் போல' என்ற உவமை விளக்குகிறது.

இத்தகைய ஆண்மகன் பருவம் நோக்கிச் சோம்பி யிருக்காமல், எல்லாப் பருவங்களிலும் முயற்சியுடன் செயலாற்றுவான். அவனுடைய உடல் துன்பத்திற்கே இருப்பிடம் போல் தோன்றும். இத்தகைய நல்லாள் இல்லாத குடி வறுமைத் துன்பத்தால் அழிக்கப்பட்டு விடும்.

ஆதலின் ஒவ்வொருவரும் தான்பிறந்த குடியை முன்னேற்றும் நல்லாண்மகனாகத் திகழ்தல் வேண்டும்.

## 46. இல்லாளின் ஊடிவிடும்

'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பது புறம் தரும் பொன்மொழி. உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருளை விளைவிப்பது உழவுத்தொழிலே. 'ஆடையில்லா மனிதன் அரை மனிதன்' என்பதும் ஆன்றோர் மொழி. ஆடைக்கு மூலப் பொருளாகிய பருத்தியை விளைவிப்பதும் உழவுத் தொழிலே. போர்க்கள வெற்றியை நல்குவதும் ஏர்க்கள வெற்றியே.

"வருபடை தாங்கி, பெயர் புறந்து ஆர்த்து,
பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே" (புறம்-௩௫)

என்று வெள்ளைக்குடி நாகனார் பாடினார். இத்தகைய சிறப்புவாய்ந்த உழவுத் தொழிலுக்கு இணையான தொழில் உலகில் வேறொன்றுமில்லை. உழவருக்கு இணை யான மாந்தருமில்லை. உழவுத் தொழிலின் உயர்வைப் பாடாத புலவருமில்லை. தெய்வப் புலவர் திருவள்ளுவர், உழவுக்கு ஓரதிகாரம் ஒதுக்கியதும் அல்லாமல், ஆங் காங்கு உவமையாகவும் உழவின் சிறப்பைப் பாடி யுள்ளார். திருவள்ளுவரையொத்த கம்பநாட்டாழ்வாரும் 'ஏர் எழுபது' என்ற தனி நூலே இயற்றியுள்ளார். இனித் திருக்குறளில் 'உழவு' என்ற அதிகாரத்தில் வரும் கருத்துக்களையும் உவமையையும் நோக்குவோம்.

பல்வேறு தொழில்களை நாடிச் சுழல்கின்ற உலகம் ஏர்த்தொழிலைப் பின்பற்றி, அதன் உதவியால் வந்த உணவை உண்டே உயிர்வாழும். ஆதலின், உழைப்பு மிகுதியானாலும் உழவுத் தொழிலே தலைமையானதாகும். பல்வேறு தொழில்களைச் செய்கின்ற உலக மக்களை யெல்லாம் ஊட்டி வளர்ப்போர் உழவரேயாகையால், 'உலக மக்கள்' என்னும் உருள் தேருக்கு, உழவர் அச்சாணிபோல் திகழ்கின்றனர். அச்சாணி யின்றேல் தேரும் ஓடாது. உழவர் இன்றேல் உலகோரும் வாழ இயலாது. உழவர் மட்டுமே, பிறரை எதிர் நோக்காது தன்மானத்துடன் வாழ்பவராவார். உழவுத் தொழிலால் உயர்ந்த நாடே ஏனைய நாடுகளுக்கும் உதவும் தலைமை யான நாடாகத் திகழமுடியும். இந்தியாபோன்ற பல தேயங்களுக்கும், கோதுமை முதலாய உணவு தானியங் களை வழங்கும் அமெரிக்கா இதற்குத்தக்க சான்றாகும்.

உழவர் பிறரிடம் சென்று இரவார். தம்மிடம்வந்து இரந்தவர்க்குக் கொடுப்பர். உழவர் கை சோர்ந்தால், துறவறமும் சோர்ந்துவிடுமென்றால் இல்லறம் சோராமல் இருக்க இயலுமோ?

இத்தகைய உழவுத் தொழிலை மேற்கொண்ட உழவர், நிலத்தை அகல உழுவதினும் ஆழ உழுது, புழுதியை நன்கு உணரவிட்டுப் பின் பயிர் செய்தலே சிறப்புடைத்து. இங்ஙனம் பயிர் வளர்ச்சிக்குச் செய்ய வேண்டியனவெல்லாம் செய்தபின், பயிருக்கும் தானியத்திற்கும் அழிவு நேராமல் காப்பதே தலைசிறந்ததாகும். நிலத்திற்குரியார் நாள் தவருமல் வயலுக்குச்சென்று கவனித்து ஆவன செய்தல் வேண்டும். இன்றேல் என்ன ஆகும்? இதற்கு விடை, சிறந்த உவமை மூலமாகத் திருவள்ளுவர் விளக்குகிருர்.

மனைத்தக்க மாண்புகள் யாவும் நிறையப்பெற்ற நல்லாளை மனைவியாகப்பெற்ற ஒருவன், இல்லறக் கடமைகளை மறந்து இல்லறத்திற்கு வேண்டிய பொருளீட்டாது, மனைவி மக்களை மறந்து நெறிதவறி எங்கோ எப்படியோ வாழ்கின்ருன். மாண்பு வாய்ந்த மனைவி, இல்லறத் திறமையிருந்தும் பொருளின்மையால், பெற்ற மக்களைப் பேண முடியாமலும், வந்த விருந்தினரை ஓம்ப முடியாமலும், காதல் இன்பத்தை இழந்தும் வாடி வருந்துகின்ருள்; பல நாட்களுக்குப் பிறகு வீட்டிற்கு வறியனாய் வந்த கணவன்மீது வெறுப்புக் கொண்டு ஊடலும் கொள்கின்ருள்; பொறுப்பற்ற தந்தையை மக்களும் வெறுக்கின்றனர். அப்பேதையும், மாண்பார் மனைவியைப் பெற்றிருந்தும், பொறுப்பற்ற வாழ்வால் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் இழக்கின்ருன்.

அதைப் போல, வளமான நன்செய் நிலத்தை உரிமையாகப் பெற்ற ஒருவன், நாள் தவருமல் வயலுக்குச் சென்று பார்வையிடாமலும், ஆவன செய்யாமலும் வீண்காலம் கழித்துக்கொண்டோ,

பிறவற்றில் நாட்டம் செலுத்திக்கொண்டோ இருப்பானேயானல், பண்ணேயாளுக்கோ, கூலிவேலே செய்பவனுக்கோ அவ்வளவு அக்கரையின்மையால், விலங்குகளாலும், பறவைகளாலும், கள்வராலும், பயிர்களும் தானியங்களும் சிதைக்கப்பட்டும், கவரப் பட்டும், விளைவு குன்றிச் சிதைந்து அழிந்து விடும். மனைவியைப் போல நிலமும் ஊடிக்கொள்ளும். நிலத்திற் குரியவனும் பெரும் பயன் இழப்பான்.

> செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
> இல்லாளின் ஊடி விடும். (குறள்-க0௩௯)

கிழவன்-நிலத்திற்கு உரியவன். புலந்து-வெறுத்து. இல்லாளின் - மனைவியைப் போல.

கணவனுல் கவனிக்கப்படாத மனைவியின் உடல் வளமும் உள்ள வளமும் சிதைதல் போல, உரியவனுல் கவனிக்கப்படாத நிலவளமும் சிதைந்து பாழடைந்து விடும்.

மாண்பார் மனைவியைப் பெற்றவன், தன் இல்லறக் கடமைகளை ஒழுங்காகச் செய்வதால் அறம் பொருள் இன்பத்தால் சிறந்து இறுதியில் வீடுபேறு அடைதல் போல, நல்ல நிலத்திற்குரியவன் தன் சொந்த கவனிப்பாலும், உழைப்பாலும் பெரும் பயனடைய முடியும் என்பது 'இல்லாளின் ஊடிவிடும்' என்ற உவமையால் மறைமுகமாக உணர்த்தப் படுகிறது.

ஏழை என்ற காரணத்தால் சோம்பியிருப்பவரையும், இரந்து வாழ்பவரையும் கண்டால், உழுவார்க்கு நற்பயனைத்தரும் நிலமென்னும் பெண் எள்ளி நகையாடுவாள்.

இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்' (குறள்-௧0௪0)

அசைஇ – சோம்பி. 'இரப்பாரை' என்பதும் பாடம்.

நம் அரசாங்கம், நம்நாட்டில் உள்ள தரிசு நிலங்களைப் பண்படுத்திப் பிச்சைக்காரர்களைக் கொண்டு உழச்செய்து, உழவுத்தொழிலைப் பெருக்கினால் அதற்காகப் பெரும்பொருள் செலவிட்டால், உணவுப் பொருளுக்காக வெளிநாட்டை எதிர் நோக்கும் நிலை நீங்கும். ஓங்குக உழவு!

## 47. ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்.

உழவுத் தொழிலைப் பேணாத நாட்டில் வறுமைப் பேய் தலைவிரித்தாடும். கொடிய வறுமையானது, குடிப் பெருமை, உயர்வு, கற்றகல்வி, நாணம், அழகு ஆகியவற்றைச் சிதைத்து, மனைவியோடு சேர்ந்து பிச்சையெடுக்கச் செய்யும். இக் கருத்தை, வறுமையின் மறு வடிவமாகிய பசிப்பிணியின்மீது ஏற்றித் தண்டமிழ்ச் சாத்தனார் கூறுகின்றார்.

"குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி யென்னும் பாவி" (மணிமேகலை-
பா. பெ. காதை)

இத்தகைய வறுமையைவிடக் கொடியது – துன்பம் பயக்கக்கூடியது – உலகில் வேறொன்றுமே இல்லை. வறுமைக்கு உவமை வறுமையே.

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. (குறள்-௧0௪௧)

இன்மை-வறுமை. இன்னாதது-துன்பம் தரக்கூடியது.

வறுமையென்ற ஒப்பற்றபாவி இம்மை யின்பத்தையும் மறுமை யின்பத்தையும் கெடுக்கும். நற்குடிப் பிறந்தார் வாயிலிருந்தும் தகாத சொல் வரும்படியான நிலையை வறுமை யுண்டாக்கும். வறுமைத் துன்பமானது வேறு பல்வகைத் துன்பங்களையும் கொண்டுவந்து சேர்க்கும். வறுமையாளர், தாம் கற்றுய்ந்துணர்ந்த மெய்ப்பொருளை நயமாக எடுத்துரைப்பினும் யாரும் கேளார்.

நாள்தோறும் வறுமைத் துன்பத்தால் வாடும் ஒருவன், 'நேற்றுவந்தது போன்ற துன்பம் இன்றும் வருமோ' என எண்ணி ஒவ்வொரு நாளும் அஞ்சி வருந்துவான். இத்தகைய வறுமை மிக்கோர் முற்றும் துறந்துவிடுவதே மேல்.

சோம்பலால் வறுமையைத் தழுவியவர் யாவராலும் வெறுக்கப்படுவர். பெற்ற தாயாலும் வெறுக்கப்படுவர்.

உழைப்பதற்குரிய வாய்ப்பும், உடல்வளமும் உள்ள ஒருவன், உழைக்க விரும்பாமல் சோம்பல் காரணமாக வறுமையைத் தழுவிக்கொண்டு, மானமிழந்து பிச்சை எடுக்கவும் ஆரம்பிக்கின்றான். ஒருவீட்டிற்குப்பிச்சைக்குப் போகிறான். அந்தவீட்டு அம்மையார், அவனுடைய இளமையையும், உடல் வளத்தையும் கண்ணுற்று அவன் செயல்மீது வெறுப்புக்கொண்டு, "அடபாவி, இந்த இளம் வயதில் இவ்வளவு அருமையான உடலை வைத்துக்கொண்டு ஏன் பிச்சை எடுக்கின்றாய்?

உழைத்து வாழ்ந்தால் என்ன? உன்னைப் போன்றோருக்கு உதவுவது தவறு'' என்று இடித்துக்கூறி, உணவிடாமலேயே அனுப்பி விடுகின்றார்.

அதே அம்மையாரின் மகன், முரடனாகவும் முட்டாளாகவும் இருந்துகொண்டு, தன் தாய்க்கு எண்ணற்ற தொல்லைகளைத் தருகிறான். வேறு பல தவறுகளும் செய்கிறான். அவ்வளவையும் தாயுள்ளம் பொறுத்துக் கொள்கிறது. நாளடைவில் அம்முரடன் முழுச் சோம்பேறியாகி தொழில் செய்யாமல் திரிகிறான். அவனுக்குத் தந்தையும் இல்லை. வேறு சொத்துமில்லை. குடும்பத்தை வறுமை கவ்வுகிறது. அந்த அம்மையார் கூலி வேலைக்குச் செல்கிறார். ஒரு நாள் அம்முரடன் ஊர் சுற்றிவிட்டும், சூதாடிகளுடன் பொழுதுபோக்கிவிட்டும் வந்து பசிக்கிறது என்கின்றான். அந்த அம்மையார் முன்பு ஒருநாள் யாரோஒரு சோம்பேறிப்பிச்சைக்காரனை வெறுத்து நோக்கி இடித்துரை கூறி அனுப்பியதைப் போலவே, தான்பெற்ற மகனையும் வெறுத்து நோக்கி இடித்துரை கூறி உணவு போடாமலேயே அனுப்பி விடுகிறார். ஆம்! மகன் செய்த பல கொடுமைகளையும் பல தவறுகளையும் பொறுத்துக்கொண்ட தாயால்கூட, மகனின் அறஞ்சாரா வறுமையைப் பொறுக்க முடியவில்லை.

அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். (குறள்-க0சஎ)

அறஞ்சாரா நல்குரவு—சோம்பலால் உண்டாகும் வறுமை.

சோம்பல் காரணத்தால் வறுமையைத் தழுவிக் கொண்டவனைப் பெற்ற தாயே வெறுக்கும்பொழுது, ஏனைய உறவினரும் நண்பரும் வெறுப்பதற்குச் சொல்லவா வேண்டும்,?

அறஞ்சாரா வறுமையென்பது 'வறுமைக்கொடுமை அறஞ்செய்ய முடியாதபடி செய்து, அறநெறி தவறவும் செய்யும்' என்ற கருத்தையும் உணர்த்துகிறது. ஆதலின் இத்தகைய கொடிய வறுமை வாராவண்ணம் ஒவ்வொருவரும் தக்க முறையில் முயன்று தம்மைக் காத்துக்கொள்ள வேண்டும்.

## 48. மரப்பாவை சென்று வந்தற்று.

வறுமைக் கொடுமையால் இரந்து வாழும் இழிநிலை ஏற்படும். இரந்து வாழ்தல் மிக இழிவானதே. 'ஏற்பது இகழ்ச்சி' என்றார் ஔவையாரும். தனக்காக அன்றி, தன் வீட்டு ஆவிற்கு நீர் வேண்டுமென்று இரந்தால் கூட, அதைவிட இழிவானது வேறொன்றுமில்லை.

ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில். (குறள்-௧0௬௬)

இத்தகைய இழிந்த தொழிலைச் செய்தாகவேண்டிய நிலையில் என்றும் சிலர் இருந்து கொண்டுள்ளனர். அப்படி இரப்பவர், கொடுக்கும் உள்ளமும் வசதியும் உடையவரிடம் சென்று இரப்பதே மேலானது. கொடுக்கும் வசதியுடையவர், வைத்துக்கொண்டு இல்லை என்று கரந்து (மறைத்து) பேசினால், அதுவும் இரப்பதைவிட இழிவாகும்.

மறைத்துப் பேசாது மனமுவந்து கொடுக்கும் நல்லோரிடம் சென்று இரப்பது சிறப்புடைத்தாகும். கொடுக்கும் நல்லோர் இருப்பதால்தான் இரப்பவரும் இருந்து கொண்டுள்ளனர். இரப்போர் இருப்பதால் தான், கொடுப்போர் உள்ளத்தில் அருள் சுரந்து

கொண்டுள்ளது. இரப்போர் இல்லையென்றால் கொடுப்போர்க்குப் புகழ் இல்லை. இரப்போர் இல்லா உலகம் மரப்பாவையாகி விடும்.

பாவை நாடகம் நடத்துவோர், மக்களைப்போல பலவகைப் பொம்மைகள் மரத்தால் செய்து, அவற்றை இயந்திரக் கயிற்றால் இயக்குவர். அவை மக்களைப் போலவே சென்றும் வந்தும் ஆடியும் ஓடியும் கதை யமைப்பிற்கேற்ப பல்வகையாக நடிக்கும். ஆயினும் அவைகளிடம் உயிர்த் தன்மையும் மனிதத் தன்மையும் கிடையா.

அதைப்போல, இரப்பாரில்லாவிட்டால், கொடுப்பாரும் இல்லாமல், அறந்தேய்ந்து, மனிதத் தன்மை மாய்ந்து, இவ்வுலக இயக்கம் புகழற்று விடும்.

இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. (குறள்–க0ௐஅ)

ஈர்ங்கண்மா ஞாலம்–குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகம்.

"ஈவாரும் கொள்வாரும் இல்லாத வானத்து
வாழ்வாரே வன் கணவர்"

என்றார் பிறரும்.

இரப்போரும் கொடுப்போரு மில்லாத தேவருலகத் தலைவனை ஆபுத்திரன் இகழ்ந்துரைப்பதாகத் தண்டமிழ்ச் சாத்தனார் மணிமேகலையில் பாடியுள்ளார்.

"அறஞ்செய் மாக்கள் புறங்காத்து ஒம்புநர்
நற்றவம் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்கள் நாட்டுக்கு
இறைவ னாகிய பெருவிறல் வேந்தே" (மணிமேகலை
பா. ம. கூ. காதை)

ஆவிற்கென இரத்தலும் இழிவெனக் கூறிய திருவள்ளுவர், இத்தகைய அதிகாரத்தையும், இத் தகைய உவமையையும் அமைக்கக் காரணம் யாதெனின் இரப்பாரும் கொடுப்பாரும் இருப்பது உலக இயற்கை யாகிவிட்டதாலும், இரப்பாருக்குக் கொடுக்க மனமின்றி வைத்துக்கொண்டே இல்லையெனக் கரத்தல் இரப்பினும் இழிவாகையாலும், 'செல்வத்துப் பயனே ஈதல்' என் பதைச் செல்வர்க்கு உணர்த்தவேண்டி யிருப்பதாலும் இங்ஙனம் அமைத்தாரென்க.

ஆதலின் செல்வருக்குக் கொடையுள்ளம் வேண் டும். கொடுக்காத செல்வர் மரப்பாவையை ஒப்பர்.

இருப்போர் காலந் தாழ்த்துக் கொடுப்பினும் கொடுக்காது கரப்பினும், இரப்போர் சினங்கொள்ளக் கூடாது. அவர் அனுபவிக்கும் வறுமைத் துன்பமே பொருள் கிடைப்பது அரிது என்பதற்கும், அவர் சினங் கொள்ளத் தகுதியற்றவர் என்பதற்கும் சான்ருகும்.

## 49. கரும்புபோல் கொல்லப் பயன்படும்

மக்கள் தன்மைகளில் அணுவளவுமின்றி, மக்கள் இனத்திலேயே கடைப்பட்டவர் கயவர்; தீய குணங்களே உருவானவர்; என்றும் எவராலும் திருத்தப்பட முடியாதவர். பொருட்பாலில் மக்கள் நல்வாழ்வுக்குக் கூறவேண்டிய யாவையும் முறையாகக் கூறிமுடித்த திருவள்ளுவர் இறுதியாக, கயவர்களின் இயல்புகளை வஞ்சப்புகழ்ச்சி, நகைச்சுவை, உவமை முதலியவற்ருல் நன்கு தெளிவு படுத்துகிருர்.

கயவர்கள் புறத்தோற்றத்தால் நன்மக்களை ஒத்திருப்பர். ஆனல் அகத்தே மக்கள் தன்மையில்

சிறிதும் ஒவ்வார். அகத்தே சிறிதும் ஒவ்வாது, புறத்தே முழுதும் ஒத்திருக்கும் இத்தகைய ஒப்புமையை, ஒப்புமை கூறப்படும் உவமைப் பொருள்களில் உலகில் எங்கும் எதிலும் காண இயலாது எனத் திருவள்ளுவரே வியந்து கூறுகிருர்.

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில் (குறள்-க0எக)

நல்லவற்றை அறிந்து ஒழுகும் நல்லோர், எப்பொழுதும் தம்பால் சிறுகுற்றமும் தோன்றக்கூடாது என்பதற்காகக் கவலைப்பட்டுக்கொண்டே இருப்பர். ஆனல் கயவர், நாடோறும் பெரும்பெரும் தவறுகளைச் செய்துகொண்டு, சிறிதும் கவலையற்றிருப்பர். ஆதலின் ஒருவகையில் நல்லோரை விடக் கயவர் மேலானவர்.

நன்றறி வாரின் கயவர் திருவுடையார்
நெஞ்சத்து அவலம் இலர். (குறள்-க0எஉ)

அவலம்—கவலை. திரு—மேன்மை.

தேவர்கள், தாம் விரும்பியதைச் செய்து வாழும் இயல்புடையவர்கள். அதைப்போலவே, கயவரும் எவர்க்கும் எதற்கும் கட்டுப்படுதலின்றி, தாம் நினைத்த தீயவற்றையெல்லாம் அச்சமும் நாணமும் இன்றிச் செய்வர். ஆதலால் தேவரும் கயவரும் ஒருவகையில் ஒப்பாவர்.

தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான் (குறள்-க0எங)

மேவன—விரும்புவன.

'மக்களே போல்வர் கயவர்' 'நன்றறிவாரின் கயவர் திருவுடையார்', 'தேவரனையர் கயவர்' என்பவற்றில்

வஞ்சப் புகழ்ச்சியும், ஏளனம் செய்யும் நகைச்சுவையும் கலந்து, கயவரின் கட்டுப்பாடற்ற கீழ்த்தன்மைகளை நயமாக வெளிப்படுத்துகிருர் திருவள்ளுவர்.

இத்தகைய கயவர், தம்மினும் குறைந்த குற்றவாளிகளைக் காணும்போது, அவர்களைவிடத் தம் கயமை மிகுந்துளதைக் கண்டு பெருமை கொள்வர். கயவரிடம் நற்செயல்களைக் காணமுடியாது. தப்பித்தவறி இரண்டொரு நற்செயல் அவர்பால் தோன்றின், அரசாங்கத்தினிடம் உள்ள அச்சமும், தாம் விரும்பும் பொருளைப் பெறும் ஆவலும் காரணங்களாகக் கொண்டு தோன்றும்.

பிறர் அறியத்தகாத மறைபொருளை (இரகசியத்தை) மிக விரைவில் யாவரும் அறிய பரப்புவதில் கயவர் வல்லவர்; இதில் பறைக்கு தண்டுரா) ஒப்பாவர்.

பறை யடிப்போனுல் அடிக்கப்படும் பறையானது, பொதுச் செய்தியை-யாவருமறியாத புதுச்செய்தியைச் சுமந்து சென்று, யாவரும் அறியப் பரப்புகிறது. அப்படிப் பரப்பும் பொழுது, எந்தவித உணர்ச்சியுமின்றி, பறையடிக்கப்படுவதால் உண்டாகும் ஓசையை யெழுப்பி, வெவ்வேறு வேலையி லீடுபட்டுள்ளோரின் கவனத்தை யீர்த்துப் பறையடிப்போன் சொல்லும் செய்தியைப் பரப்புகிறது. இங்ஙனம் ஊர்முழுதும், நகர் முழுதும் பரப்பிக்கொண்டே செல்கிறது. மிக எளிதாகவும், விரைவாகவும் பரப்பிவிடுகிறது. மீண்டும் புதுச்செய்தி கிடைக்குமா எனக் காத்துள்ளது. அவ்வப்போது கிடைக்கும் புதுச் செய்தியைப் பரப்பிக்கொண்டே யுள்ளது. இங்ஙனம் செய்வதைத் தன் கடமையாகவே கொண்டுள்ளது.

அதைப் போல, கயவரும் தாமறிந்த மறைபொருளை உள்ளத்தே மறைத்து வைக்க முடியாமலும், வெளிப் படுத்துவதால் கேடு நேருமே என்ற உணர்ச்சியுமின்றி, செய்தியைச் சுமந்து சென்று, நாவாகிய குறுங் கோலினால் வாயாகிய பறையையடித்து, யாவரையும் கூவியழைத்துச் சொல்லிப் பரப்புவர்; பரப்பிக்கொண்டே செல்வர். எல்லோருக்கும் அறிவித்த பிறகு, மேலும் புதிய மறைச்செய்தி கிடைக்குமா எனக் காத்திருந்து (ஒட்டுக்) கேட்டு அறிந்து பரப்புவர். இங்ஙனம் மறை பொருளைப் பரப்புவதைக் கயவர் கடமையாகவும் கொண்டுள்ளனர்.

அறைபறை யன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். (குறள்–௧0௭௬)

மறை–மறைபொருள் (இரகசியம்)

இக்குறள் நகைச்சுவையும், உவமை நயமும் கலந்து கயவரின் கீழ்த் தன்மையை வெளிப்படுத்து கிறது.

கயவர் எவ்வளவு செல்வம் பெற்றிருப்பினும் ஏழைகளுக்குச் சிறிதும் உதவமாட்டார். பசியால் வருந்துபவர்க்கு ஈரக்கையும் உதறமாட்டார். ஆனால் அடித்து நொறுக்கி மிரட்டிக் கேட்பவருக்கு அள்ளி யள்ளிக் கொடுப்பர்.

கரும்பு, சுவைமிகுந்த சாரைத் தன்னகத்தே நிறைய கொண்டிருக்கும். அத்துடன் நம்முடலுள் சென்றால் தீங்குபயக்கும் சக்கையையும் கொண்டுள்ளது. மேற்புறத்தில் வலிய பட்டையையும், இடையிடையே மிகவலிய கணுக்களையும் பெற்றுள்ளது. ஆதலால் குழந்தைகளும் முதியோரும் கரும்பை எளிதில் சுவைக்க முடியாது. வலிய பல்லுடையோர்தான் கடித்து

மென்று சுவைக்க முடியும். அவர்களுக்கும் கடினமாக இருந்தால், கல்லால் அடித்து நொறுக்கியும், வாளால் வெட்டிப் பிளந்தும் பின்னர் கடித்துச் சுவைக்க வேண்டும். அதிகக் கருப்பஞ்சார் பெறவேண்டு மென்ருல், கரும்புகளை ஆலையில் கொடுத்து நசுக்கிச் சார்வேறு சக்கைவேருகப் பிரித்துப் பயன்படுத்தலாம். அதன் சக்கையையே எரிபொருளாகப் பயன்படுத்திச் சாறைக் காய்ச்சிப் பக்குவப்படுத்தி வெல்லக்கட்டியாகவும் சர்க்கரையாகவும் செய்யலாம்.

அதைப்போல சில கயவர்கள் மிகுந்த செல்வம் வைத்திருப்பர். அத்துடன் இரக்கமற்ற கொடிய தன்மையும் பெற்றிருப்பர். ஆதலால் வறுமையால் வாடியும், பசியால் நைந்தும் வந்து நயந்து கேட்போருக்கு ஈரக்கையும் விதிரார். அடித்து நொறுக்கிக் கேட்கும் வலிய கள்ளர்க்கும், சட்டத்தால் மிரட்டிக் கேட்கும் அரசாங்கத்திற்கும் அள்ளிக்கொடுப்பர். முன்ஞேர் ஈட்டிவைத்த செல்வமல்லாமல், கயவராகத் தீய வழியில் ஈட்டிய செல்வமாக இருந்தால், அரசாங்கம் செல்வம் முழுவதையும் பறிமுதல்செய்து, அவர்களைச் சிறையிலடைத்து, அச் செல்வத்தைக்கொண்டு நல்ல ஆக்கப்பணிகள் இயற்றும்போது, அப் பணிகளுக்கு வேலையாட்களாக (சக்கையை எரிபொருளாகப் பயன் படுத்துவதுபோல) அக் கயவர்களையே பயன்படுத்தலாம்.

ஆனல் சான்ருேரிடம் செல்வமிருந்தால், அவர்களிடம் சென்று வறுமைத் துன்பத்தைச் சொன்ன உடனேயே கொடுத்து உதவுவர்.

சொல்லப் பயன்படுவர் சான்ருேர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். (குறள்-௧0௭அ)

கீழ்-கயவர்.

அற்பரின் இழிவு நன்கு விளங்க, சான்றோர் இயல்பும் சேர்த்துச் சொல்லப்பட்டது.

பக்குவமாக விளையாத சில கரும்புகளின் சார், காய்ச்சப்பட்டு வெல்லமாக்கும் பொழுது கூழ் வெல்லமாகப் போய்விடுவதுமுண்டு. அதைப்போல சில கயவர்கள் தகாத வழியில் சேர்த்த செல்வத்தை அரசாங்கம் பறிமுதல்செய்து பார்க்கும்போது, அவை கள்ள நோட்டுகளாக—செல்லாதவைகளாக இருப்பதுமுண்டு.

'கரும்புபோல் கொல்லப்பயன்படும் கீழ்' என்ற உவமை இவ்வளவையும் உணர்த்துகிறது.

"இரவலர் கன்றாக ஈவார்ஆ வாக
விரகின் சுரப்பதாம் வண்மை—விரகின்றி
வல்லவர் ஊன்ற வடிஆபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாங் கீழ்." (நாலடி-உஎகூ)

என்ற நாலடிக் கருத்தையும் இக் குறள் கருத்தையும் ஒப்பிட்டு நோக்குக.

பிறர் நன்றாக உண்டும் உடுத்தும் வாழ்வதைக் காணும் கயவர், அழுக்காறு கொண்டு, அவர்கள் மீது வேண்டுமென்றே குற்றத்தை யேற்றுவர். கயவர்க்குத் துன்பம் நேரும்போது, சிறிதும் தயங்காமல் தம்மைப் பிறர்க்கு அடிமையாக்கிக் கொள்வர்; அதைத் தவிர வேறெதற்கும் தகுதியற்றவர்.

ஏற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. (க0அ0)

அறவழியில் பொருளீட்டிப் பண்புகளால் நிறைந்து சால்பு எய்தி, கயமை நீக்கி, இன்பந்துய்க்கக் காமத்துப் பாலில் நுழைவோமாக.

பொருட்பால் முற்றியது.

## அக வாழ்வு

அகம் புறம் என்ற பாகுபாடு, தமிழ் மொழிக்கும், தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ் இலக்கணத்திற்கும் உரிய தனிச் சிறப்பாகும். அன்பு, அழகு, அறிவு, ஆண்டு (வயது) முதலியவற்ருல் ஒத்த ஆணும் பெண்ணும் தனிமையில் சந்தித்துக் காதல்கொண்டு, பிறர் அறியாமல் தம் காதலே வளர்த்து, பிறர் அறிந்தபின், பலரும் அறிய மணந்து, கணவன் மனைவியராக வாழ்க்கை நடத்துவதே 'அகம்' எனப்படும். இத்தகைய காதல் வாழ்வையே, திருக்குறளின் காமத்துப்பாலும், அகநானூறு, கலித்தொகை, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, ஐந்திணை முதலிய சங்க கால இலக்கியங்களும் விரித்துரைக்கின்றன.

காதல் வாழ்வல்லாத, ஏனைய அரசியல், சமுதாயம், வீரம், கொடை முதலியவற்றை உணர்த்துவது 'புறம்'

எனப்படும். பத்துப் பாட்டும், பதிற்றுப் பத்தும், புற நானூறும் புறப்பொருளை விரித்துக்கூறும் இலக்கியங்க ளாகும். எம்மொழி இலக்கியங்களும் இவ் விருவகைப் பாகுபாட்டில் அடங்குவனவே.

அகவாழ்வு 'களவு' 'கற்பு' என இருவகைப்படும். தலைவனும் தலைவியும் பிறரறியாமல் சந்தித்துக் காதலை வளர்ப்பது களவொழுக்கமாகும். பிறரறிய நேர்ந்தபின் பலருமறிய மணந்து வாழும் வாழ்க்கை கற்பொழுக்க மாகும்.

தமிழ்த் தலைவி, ஒரு தலைவனைச் சந்தித்துக் காதல் கொண்டபிறகு, தன் வாழ்நாள் முழுதும் பிறனொருவனை மனத்தாலும் எண்ணாள். தமிழ்த் தலைவன், ஒரு தலைவி யைச் சந்தித்துக் காதல் கொண்டபின், உலகமே எதிர்த்தாலும், அஞ்சாது அவளை மணந்தே தீருவான். பண்டையத் தமிழர் காதல் வாழ்வில், பணம், சாதி, மதம் முதலியவை முட்டுக் கட்டையாக இருக்கவில்லை. இத்தகைய தூய காதல் நெறியை அடிப்படையாகக் கொண்டதே காமத்துப்பால். எனவே நாமும், இந்த நல்லொழுக்க நெறியை மனத்தே கொண்டு, காமத்துப் பால் தரும் உவமை இன்பங்களைச் சுவைப்போம். அதன் பயனாய் உண்மைக் காதல் வாழ்வு நடத்துவோம்.

## 1. காதலரின் முதல் சந்திப்பு

ஊரின் புறத்தே, பல வண்ணமலர்கள் பூத்துக் குலுங்கும் ஓரழகிய பூஞ்சோலை. அதனகத்தே, கவிஞர் கற்பனைக்கு மெட்டாப் பேரழகும், மங்கையர் மாண்பு களும், பதினாறுவயதும் நிரம்பிய தமிழ்ப் பெண் ஒருத்தி, தனிமையாகப் பூக் கொய்து கொண்டிருந்தாள்.

அறிவும், ஆண்மையும், பண்பும், இருபது வயதும் நிரம்பிய தமிழ்த் தலைவனொருவன் – அவ்வூருக்குப் புதியவன்–அச்சோலையில் தென்றல் நுகரப் புகுந்தான்; பூக்கொய்யும் பேரழகியைக் கண்டான்; வியப்புடன் நோக்கினான். அவளும் மருண்டு நோக்கினாள்.

அத்தகைய பேரழகியை, அத்தகைய சூழ்நிலையில், அவன் அதுவரையில் கண்டதில்லை யாதலால், அவனுள்ளத்தே பலவித ஐயங்கள் தோன்றின. முதலில், 'அச்சோலையில் வாழும் ஒரு தெய்வப் பெண்ணோ' எனத் திகைத்தான். அத் திகைப்பு நீங்கியஉடன், அச் சோலையுள் உலாவும் மிக்க அழகிய மயிலோ என மயங்கினான்; அம் மயக்கம் நீங்கியவுடன், 'அழகு மிக்க தமிழ்ப்பெண் தானோ' என ஐயமுற்றான்.

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு. (குறள்–க0அக)

அணங்கு–தெய்வப் பெண். ஆய்மயில் – ஆராய்ந்து எடுக்கப்பட்ட அழகிய மயில். கனங்குழை–கனமான காதணியை அணிந்த பெண். மாதர்–அழகிய பெண்.

இங்ஙனம், அத்தலைவனுக்கு அத்தலைவி, தெய்வப் பெண் போலவும், மயில் போலவும், அழகிய பெண்ணாகவும் தோன்றிப் பலவித ஐயங்களை எழுப்பியதாக உணர்த்துவதால் இக்குறள் 'ஐய உவமை'யின் பாற்படும்.

இங்ஙனம், தலைவியின் பேரழகால் துன்புற்றுப் பலவாறு மயங்கி, முடிவில் 'தமிழ்ப் பெண்ணே' எனத் துணிந்தான். துணிந்தஉடன், அவனுடைய நோக்குக்கு எதிர்நோக்கிய அவளுடைய நோக்கினால், மேலும் வருந்

தினன். அவ் வருத்தம் எப்படியிருந்தது? இயற்கையாக, தானே தாக்கி வருத்தும் தெய்வம், ஒரு படையும் கொண்டு வந்து தாக்கியதைப் போல, அவளுடைய அழகுடன் சேர்ந்த ஆழ்ந்த பார்வையின் வருத்தம் இருந்தது.

நோக்கினள் நோக்(கு)எதிர் நோக்குதல் தாக்கு அணங்கு
தானைக்கொண்(டு) அன்ன(து) உடைத்து (குறள்-௧0௮௨)

தாக்கு அணங்கு–தானே தாக்கி வருத்தும் தெய்வம். தானை–படை. நோக்குதல்–ஆழ்ந்து பார்த்தல்.

இவ்வாறு, தலைவியின் நோக்கினல் வருத்தப்பட்ட தலைவன், 'இவ்வழகிய பெண்ணின் நோக்கம், உயிர் உண்ணும் கூற்றம்போல், என்னை வருத்துவதால் கூற்றந்தானே? அல்லது என்மேல் பார்வை செலுத்து வதால் கண்தானே? அல்லது பெண் மான்போல் மருண்டு நோக்குவதால், பெண் மான்தானே? இம் மூன்றன் தன்மையையும் இவள் நோக்கம் பெற் றுள்ளதே' என ஐயமும் வியப்பும் கொண்டான்.

கூற்றமோ கண்ணே பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து (குறள்-௧0௮௫)

பிணை–பெண் மான். மடவரல்–பெண். இக்குறளும் ஐய உவமையே.

அடுத்தபடியாக, துணியால் மறைக்கப்பட்டும், சாயாமல் நிமிர்ந்தும் நிற்கின்ற தலைவியின் முலைகளை நோக்கித் தலைவன் வருந்தினன். சாயாத முலைகளை மறைத்திருக்கும் மேலாடை, தலைவனுக்கு எதைப் போலத் தோற்றமளித்தது?

"வெறிகொண்ட யானை கட்டுக்கு அடங்காமல், கண்ட திசையெல்லாம் ஓடி, கண்ட பொருள்களை யெல்லாம் அழித்து, கண்டாருயிரையும் மாய்க்கும். இங்ஙனம் செய்யாமலிருக்க, யானைக்கு முகமூடி போட்டிருப்பர். அதைப்போல, சாயா முலைகள் கண்டாரை யெல்லாம் வருத்திக் கொல்லாம லிருப்பதற்காக மேலாடையால் மூடப்பட்டுள. அங்ஙனம் மூடப்பட்டதால் என்னுயிரும் பிழைத்தது" என முலை நோக்கத்தால் வருத்தப்பட்ட தலைவன் கூறினன்.

கடாஅக் களிற்றின்மேல் கண்படா(ம்) மாதர்
படாஅ முலைமேல் துகில் (குறள்-௧0அ௭)

கடாஅக் களிறு—வெறிபிடித்த ஆண்யானை. கண்படாம்—கண்ணை மறைக்கும் துணி; முகமூடி. துகில்—ஆடை. இக்குறள் எடுத்துக்காட்டுவமை யணி.

இங்ஙனம் தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் நோக்கி உள்ளத்தால் ஒன்றுபட்டனர்; இருவரிடையே காதல் அரும்பியது! காதலால் கண்டு கண்டு களித்தனர். பேரின்ப முற்றனர்!

இங்ஙனம் கண்ணால் காண்பதற்கே மகிழ்ச்சி தாக் கூடியது உலகில் வேறெதாவது உண்டா? மது, அருந்தியவர்க்குத் தான் மகிழ்ச்சி தரும்; அருந்தாமல் கண்ணால் காண்பவருக்குக் காதல் போல மகிழ்ச்சி தராது. ஆனால் காதலோ, அனுபவித்தாலும் மகிழ்ச்சிதரும்; காதல் உடையாரைக் கண்டாலும் மகிழ்ச்சி தரும்.

உண்டார்கண் அல்ல(து) அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. (குறள்-௧0௯0)

அடுநறு — காய்ச்சி யெடுக்கப்பட்ட மது. காமம் — காதல் உடையார். ஆதலால் காதலர் கண்டு கண்டு களித்தனர்.

## 2. தலைவியின் உள்ளக் குறிப்பறிதல்

காதலர் கண்டு களித்தனரேனும், தலைவனைப்போல நாணம் மிக்க தலைவியால், நேரே நிமிர்ந்து நன்றாக—நேராக—நோக்க இயலவில்லை. தலைவன் நோக்கும் போது, தலைவி நாணித் தலைகுனிந்து நிலத்தை நோக்கினாள். 'தலைவி தன்னை நோக்கவேண்டும்' என்பதற்காக, தலைவன் அவளை நேரே நோக்காது, வேறு பக்கம் பார்ப்பவன் போல் அரை நோக்கு—கடைக்கண் பார்வை—நோக்கினான். அப்போது தலைவியும் மெதுவாகத் தலை நிமிர்ந்து, தலைவனை நோக்கி மகிழ்ந்து, புன்னகையும் பூத்தாள். இந் நிகழ்ச்சியைத் தலைவனே குறள் வடிவமாகக் கூறுகின்றான்.

யான்நோக்குங் காலை நிலன்நோக்கு(ம்) நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும் (குறள்-௧௦௯௪)

நோக்கிய தலைவி திரும்பவும் தலைவன் நோக்கும் போது நாணித் தலைகுனிந்தாள். அந்த நாணமாவது அவள் உள்ள வேட்கையைக் குறிப்பால் வெளிப்படுத்தியது. அது, அவளுடைய 'காதல்' என்னும் பயிரை வளர்க்கும் நீராக மாறியது.

நோக்கினாள் நோக்கி யிறைஞ்சினாள் அஃ(து)அவள்
யாப்பினுள் அட்டிய நீர் (குறள்-௧௦௯௩)

இறைஞ்சினாள்—தலை குனிந்தாள். யாப்பு—காதற் பயிர்.

இக்குறளில், நாணக் குறிப்பை நீராக உருவகஞ் செய்து காதலைப் பயிராக உருவகஞ் செய்யாமல் உய்த்துணர வைத்திருப்பதால், இது ஒற்றை உருவக அணியாகும். இங்கு உவமையணியின் மற்றோர் வடிவமே

'உருவகம்' என்பதை நினைவுகொள்ள வேண்டும். 'பயிர் போன்ற காதலை, நீர்போன்ற தலைவியின் நாணக் குறிப்பு வளர்த்தது' என்பதே இதன் பொருள்.

காதல் வளர்ந்தது. தலைவியின் தோழிக்கும் உண்மை தெரிந்தது. தோழி, தலைவியின் நல்வாழ்வில் அதிகமான அக்கரை கொண்டவள். ஆதலால் தலைவி யின் எதிர்கால நல்வாழ்வுக்காக, தலைவனின் பண்புகளை ஆராய முயல்கின்றாள். காதல் என்று சொல்லிச் சுவைத்த பிறகு கைவிட்டு ஓடுபவனாகவோ, அன்பும் பண்பும் அற்ற கொடியவனாகவோ, தலைவன் இருந்தால் தலைவியின் வாழ்வு என்னாவது? தலைவன் அத்தகைய கொடியவனாக இருந்தால், போலிக் காதலை இப்போதே தடைசெய்து விடலாம். நல்லவனாக இருந்தால் அவர்கள் காதல் வெற்றிபெற உதவலாம் அல்லவா? அதனால்தான் தலைவியின் பால் எல்லையற்ற அன்பு கொண்ட தோழி, பலவழிகளிலும் முயன்று தலைவன் உயர்ந்தோன் என் பதை உணர்ந்தாள். எனினும் மேலும் நன்கு ஆராய முயன்றாள்.

'இனித் தோழியின் உதவியின்றித் தலைவியை அடையமுடியாது' என்பதைத் தலைவன் உணர்ந்தான்; தோழியின் உதவியை நாடினான். மேலும் தலைவனின் இயல்பை நன்குணர முயன்ற தோழி, பகைவி போலவும் சினங்கொண்டவள் போலவும் கொடுஞ் சொற்களைச் சொன்னாள். ஆயினும், தலைவனின் இயல்பை முன்பே தோழி யுணர்ந்துவிட்டதால், அவர்கள் காதலுக்குத் துணைபுரியவே உள்ளத்தில் விரும்பினாள். பேரறிவு படைத்த தலைவன், தோழியின் உள்ளக் குறிப்பையும் உணர்ந்துவிட்டான். ஆதலால், தோழியின் கடுஞ் சொல்லைக் கேட்டுக் கலங்காமல், தோழியின் சொல்லை யும் செயலையும் உலகியலோடு ஒப்பிட்டு நோக்கினான்.

உலகியல் யாது? வெங்காரம் கொடிய வெப்பம் பொருந்தியதாயினும், நோய்தீர்க்கும் நல்ல மருந்தாகும். அதைப்போல, நல்லோரின் சினச்சொல்லும், நண்பரின் இடிப்புரையும், கொடிய சொற்கள் போலத் தோன்றி னாலும், பின்னால் நன்மை பயக்கும் இனிய சொற்களே யாகும். நஞ்சு, மிக்க குளிர்ச்சி பொருந்தியதாயினும், அருந்தியவரைக் கொன்றுவிடும். அதைப்போல தீயோ ரின் இனிய சொற்களும், அடுத்துக் கெடுக்கும் பகை வரின் நய உரைகளும் அப்போதைக்கு இனியவையாகத் தோன்றினும், பின் தீங்கு பயக்கும் கொடிய சொற்களே.

இத்தகைய உலகியலை எண்ணிய தலைவன், உள்ளத்தே அன்புகொண்ட தோழியின் பொய்யான சினச்சொல்லைப் பற்றிப் பின்வருமாறு தனக்குத்தானே கூறிக்கொள்வதுபோல, தலைவிக்கும் தோழிக்கும் கேட்கும்படியாகக் கூறினான்:

அன்புடையார், அயலாரைப்போலக் கொடுஞ்சொல் சொன்னாலும், அச்சொல்லின் இனிய பயனை விரைவில் அறியலாம்.

உறாஅ தவர்போல் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும். (குறள்-௧0௯௬)

உறாதவர்—அயலார். செறார்—அன்புடையார். ஒல்லை—விரைவில்.

பின்னால் இன்பமே பயப்பினும், முன்னால் கொடுமையாகத் தோன்றும்படியான சொல்லைச் சொல் லுதலும், சினந்தவர்போல் நோக்குதலும், வெளிப் பார்வைக்கு அயலாரைப்போலத் தோன்றும் நண்பரின் அன்புக் குறிப்புப்பற்றி வருவனவாகும்.

செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்(று) உற்றார் குறிப்பு. (குறள்-௧0௯௭)

செருச்சிறு சொல்—இனிமை பயக்கக்கூடிய கடுஞ்சொல். செற்ருர்—சினங்கொண்டார். உருர்—அயலார்; பகைவர். உற்ருர்—நண்பர்.

இங்ஙனம் தலைவனுக்கும் தோழிக்கும் நடைபெறும் உரையாடலைக்கேட்ட தலைவி, உள்ளத்தே மகிழ்வு கொண்டு, காதலும் கொண்டு, புதிய ஒருவரைப் பார்ப்பதுபோலப் பொது நோக்காகத் தலைவனை நோக்கினுள். அங்ஙனமே, தலைவனும் உள்ளத்தே காதல் கொண்டு, புதியவளைப் பார்ப்பதைப்போலப் பொது நோக்காகத் தலைவியை நோக்கி மகிழ்ந்தான். இங்ஙனம் பொது நோக்கால் காதலர் கண்களின் சந்திப்பை-கண்ணொடு கண் இணை நோக்கு ஒத்தலை-கண்ட தோழி, தனக்குத் தானே கூறிக்கொள்பவளைப் போல, தலைவனுக்கும் தலைவிக்கும் கேட்கும்படியாகப் பின்வருமாறு கூறினுள்:

முன்பே கண்டு காதலித்துக் காதலை வளர்த் திருந்தும், அடுத்தவர்க்கு முன்னுல், முன்பின் பார்த்தறி யாதவர் போலவும், புதியவரைப் பார்ப்பது போலவும் ஒருவருக்கொருவர் பொது நோக்காக நோக்கி மகிழ்தல், காதலர்களிடத்திலே இருப்பனவாகும்.

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலர் கண்ணே யுள. (குறள்-க0கக)

ஏதிலார்—அயலார்.

என்னே! இவர்களின் திருவிளையாடல்!

## 3. புணர்ச்சியால் மகிழ்தல்

பண்பறிந்த தோழியின் உதவியால், தலைவன், தலைவியைத் தக்க இடத்தில் சேர்ந்து புணர்ந்து

பேரின்பம் எய்தினன். தலைவன் தலைவியின் அழகிய வடிவத்தைக் கண்டும், அவளுடைய இனிய சொல்லைக் கேட்டும், இதழ்நீரைச் சுவைத்தும், உடலை மோந்தும், கட்டியணைத்தும், கண், காது, வாய், மூக்கு, மெய் ஆகிய ஐம்புல இன்பங்களையும் ஒருசேர அனுபவித்தான். ஐம்புலன்களும் ஒருசேர மகிழும்படியான பேரின்பத்தை மனமொத்த காதலி யொருத்தியால்தான் தரமுடியும்.

கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள (குறள்-கக0க)

ஒண்தொடி—ஒளி பொருந்திய வளையலை அணிந்த பெண்.

விட்டு நீங்கினல் சுடுவதும், நெருங்கி அணைத்தால், மென்மையான குளிர்ச்சி தருவதுமாகிய புதுவிதமான நெருப்பைத் தலைவியிடம் கண்டு வியந்தான் தலைவன். தலைவியின் தோள்களைத் தழுவுந்தோறும் தழுவுந் தோறும் பேரின்பம் எய்தினன்.

ஒருவன் எவ்வெப்பொருள்களை விரும்புகிருனே, அவ்வப்பொருள்கள், தாமே, விரும்பியவுடனே, அவனைச் சார்ந்து இன்பந் தருமானல் அவனுக்கு எங்ஙனம் இருக்கும்? அதைப்போலவே தலைவியின் தோள்களும் தலைவனுக்கு இன்பம் அளித்தன.

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்(டு)ஆர் கதுப்பினள் தோள் (குறள்-கக0ரு)

தோட்டார்-மலர்கள் நிறைந்த. கதுப்பினள்-கூந்தலை யுடைய தலைவி.

இங்ஙனம் சிலநாட்கள் கடந்தன. களவு ஒழுக் கத்தை-பிறரறியாது காதலர் சந்தித்து, இன்பந் துய்ப்பதை நீட்டிக்கவிட விரும்பாத தோழி, ஒருநாள்

தலைவனைச் சந்தித்து, "பண்பு சான்ற தலைவரே! இங்ஙனம் களவு ஒழுக்கத்திலேயே காலத்தைப் போக்குதல் சரியன்று. தலைவியை மணந்து, விருந்து பேணும் இல்லறம் நடத்துவீராக!" என்று அறிவுறுத்தினாள்.

அதற்குத் தலைவன் பின் வருமாறு கூறினான்:

சிறந்த வள்ளல் தன்மை பொருந்தியவர்கள், தாம் பாடுபட்டுச் சம்பாதித்த பொருளாலாகிய உணவை, தம்மை நோக்கித் தம்மில்லத்திற்கு வந்தவர்களுக்குப் பகுத்துக் கொடுத்து, எஞ்சியதைத் தாம் உண்பதால் பேரின்பம் அடைவர். அதைப் போன்ற பேரின்பத்தை இந்த அழகிய பொன்னிறம் பொருந்திய தலைவியின் அணைப்பால் பெறுகின்றேன். இதைவிட வேறு இல்லறம் எதற்கு?"

தம்இல் இருந்து தமதுபாத்(து) உண்(டு)அற்றால்
அம்மா அரிவை முயக்கு. (குறள்-௧௧0௭)

பாத்து–பகுத்து. அம்மா–அழகிய பொன்னிறம்.

இவ்வுவமை, காதலின்பத்தை யுணர்த்துவதோடு, பழந்தமிழரின் விருந்தோம்பும் பெரும் பண்பையும் உணர்த்துகிறது.

இங்ஙனம் நாள்தோறும் புணர்ந்தாலும் புதிய இன்பமாகவே தோன்றியது. எதைப்போல?

தோண்டத் தோண்ட ஊறுகின்ற மணற்கேணி போல, கற்கக் கற்க வளர்கின்ற அறிவுக்கும், அவ்வறிவாலாகிய ஆராய்ச்சிக்கும் ஓர் எல்லையுண்டா? ஆராய ஆராய, பழைய உண்மை பொய்யாகிப் புதிய உண்மைகள் தோன்றிக்கொண்டே இருக்கும். ஒரு

காலத்தில், உலகம் தட்டையான வடிவமானது, என ஆராய்ச்சியாளரால் நம்பப்பட்டது. பின்னர், அது பொய்யாகி 'உலகம் உருண்டையானது' என நம்பப் பட்டு வருகிறது. எதிர்காலத்தில் இதுவும் பொய்யாகி வேறொரு உண்மை, ஆராய்ச்சியால் தோன்றினாலும் தோன்றலாமல்லவா? கற்கக் கற்க, பழைய அறிவு அறியாமையாகி, புதிய அறிவு தோன்றுதல் போலும் ஆராய ஆராய பழைய உண்மை பொய்யாகிப் புதிய உண்மை தோன்றுதல் போலும் காதலியைப் புணரப் புணர, பழைய இன்பம் பொய்யாகி புதிய இன்பம் தோன்றிக் கொண்டே யிருக்கும்.

அறிதோ(று) அறியாமை (கண்டு)அற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. (குறள்-கககO)

காமம்-காதலின்பம். செறி தோறும்-புணரப் புணர.

இவ்வுவமை, அறிவு, ஆராய்ச்சிகளின் எல்லையற்ற நிலையையும், சலியாத காதலின்பத்தின் புதுமையையும் மேன்மையையும் உணர்த்துகிறது.

இத்தகைய காதலின்பம்-புணர்ச்சி மகிழ்தல்-காதலரிருவருக்கும் பொதுவாயினும், தலைவி நாணத் தால் வெளிச் சொல்லாதிருக்க, தலைவன்மட்டும் வெளிப்படுத்தினான்.

## 4. காதலியினுடைய அழகைச் சிறப்பித்துக் கூறல்

தலைவியின் பெற்றோருக்கு ஐயம் ஏற்பட்டது. அதனால், தலைவியை வீட்டிலேயே காவலில் வைத்து

விட்டனர். காதலரின் சந்திப்புத் தடைப்பட்டது. இருவரும் ஒருவரையொருவர் காணமுடியாது வருந்தினர்.

இருவரும் முதன்முதலாகச் சந்தித்த பூஞ்சோலைக்குத் தலைவன் வந்தான்; அங்குள்ள பூவும், செடியும், கொடியும், தலைவியின் உறுப்புக்களை நினைவூட்டின. ஒரு பூங்கொடியைத் தலைவியென வெண்ணிக் கட்டியணைத்து ஏமாந்தான். தலைவன் குளக் கரைக்குச் சென்றான்; குளத்தில் பூத்திருந்த தாமரை, தலைவியின் முகம்போல் தோற்றமளித்தது; குவளை, நெய்தல் முதலிய மலர்கள் தலைவியின் கண்களைப்போல் தோற்றமளித்தன; மலர்களைக்கண்டு மயங்கினான்; உள்ளத்தே சிறிது தெளிவு பிறந்ததும் தலைவியின் கண்களுக்கும் மலர்களுக்கும் உள்ள வேற்றுமையை உணர்ந்தான்; தன் நெஞ்சை யிடித்துக் கூறினான்:

"ஏ நெஞ்சே! தலைவியின் கண்கள் யான் மட்டும் காணும்படியாக அமைந்த கற்புடைய கண்கள். இம் மலர்களோ பலரும் காணும்படியாகத் தோற்றமளிக்கின்றன. இம் மலர்களைக் கண்டு, தலைவியின் கண்களை ஒக்கும் என்று மயங்குகிறாயே! உனக்கு அறிவு இருக்கின்றதா?"

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. (குறள்-கககஉ)

மையாத்தி--மயங்குகின்றாய்.

குவளை முதலிய மலர்களுக்குத் தலைவியின் கற்பொழுக்கமும் இல்லை. தலைவியின் கண்ணைப்போல் பார்க்கும் ஆற்றலும் இல்லை. பார்க்கும் ஆற்றல் இருந்து தலைவியின் கண்ணை நன்கு பார்த்தால், 'இவளுடைய கண்ணழகுக்கு நம்மழகு ஒப்பாகாது' என எண்ணி

நாணித் தலைகுனியும். அப்படிக் குனியும்போதும், தாம் வாழும் நீரை நோக்காமல், தம்மை வென்ற கண்ணை யுடைய தலைவி வாழும் நிலத்தையே நோக்கும். காணும் தன்மையும் நாணமும் இல்லாத காரணத்தால்தான் நிமிர்ந்து வானத்தை நோக்குகின்றன.

காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று. (குறள்-௧௧௧௪)

மாணிழை-மாண்பான அணிகளையுடைய தலைவி.

இங்ஙனம் தலைவன் தலைவியை யெண்ணி யெண்ணி யேங்கி மெலிந்தான். உண்மை யுணர்ந்த தோழன், 'நண்ப! பகைவரும் நடுங்கும்படியான உன் ஆற்றல் ஒரு பெண்ணால் அழிந்ததே! பெரு வலிமை படைத்த நீ, ஒரு பெண்ணை யெண்ணி யெண்ணி இப்படி நலிவதா? உன் நெஞ்சையே கலக்கும் அளவுக்கு அவ்வளவு அழகு வாய்ந்தவளா அவள்?' என இடித் துரைத்தான்.

தலைவன் தோழனை நோக்கி, 'தோழனே! அவள் பெருமையும் அழகும் உனக்குத் தெரியா! தெரிந்தால் இங்ஙனம் கூறமாட்டாய்! அவளுடைய உடல் நிறம் மாந்தளிர் நிறம் போன்றது! பற்களோ முத்துபோல் ஒளி வீசும்! அவள் உடலிலிருந்து வீசும் நாற்றமோ மிக்க மணமுடையதாயிருக்கும்! கண்கள் வேல்போல் கூர்மையானவை; தோள்கள் பசுமையான இள மூங்கில் போன்றவை!' என்று தலைவியின் அழகைப் பல உவமை களால் சிறப்பித்துக் கூறினான்.

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோள் அவட்கு. (குறள்-௧௧௧௩)

முறி-தளிர். முறுவல்-பல். வேய்-மூங்கில்.

தலைவனுடைய காதலையும் உள்ள நிலையையும் உணர்ந்த தோழன், காதலர் சந்திக்காவிடில், பெருங் கேடுறுமென எண்ணி, தலைவன் துயர் நீக்க முயன்று தோழியைச் சந்தித்து நிலையை விளக்கினுன். தலைவியும், தலைவனைப் போலவே பிரிவினுல் வருந்தினுள். ஆதலால், தோழி தலைவியின் இல்லத்தைச் சார்ந்த ஒரு சோலையில், இரவில் பிறர் அறியாமல், சந்திக்க ஏற்பாடு செய்தாள்.

காதலர் சோலையில் இரவில் சந்தித்தனர். அன்று இரவு முழுமதி வானத்தில் ஒளிவீசியது. காதலர் பேரின்பம் எய்தினர். தலைவன் தலைவியின் மடிமீது முடிசாய்த்துப் படுத்துத் தலைவியின் முகத்தையும் வானத்து முழுமதியையும் நோக்கினுன். தன் காதலியின் முகம் முழு மதிபோல ஒளிவீசக் கண்டான். ஆனுல் காதலியின் முகத்திற்கும் முழுமதிக்கும் உள்ள வேறு பாட்டையும் உணர்ந்தான். மதியோ தேய்ந்து வளர்ந்து ஒளிவீசும் தன்மையுடையது. காதலியின் முகமோ தேய்தலும் வளர்தலுமின்றி ஒரேநிலையில் நின்று ஒளி வீசக் கூடியது. திங்களின் நடுவில் கறையுண்டு. முகத்தில் கறையில்லை. இவ்வேற்றுமையை யுணர்ந்து, வானத்து முழுமதியைவிடத் தன் காதலியின் முகமே சிறந்தது, என எண்ணி மகிழ்ந்தான்; தலைவியிடமும் கூறி மகிழ்வித்தான்.

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து (குறள்-கஉகஎ)

அறுவாய் நிறைந்த-தேய்ந்து வளர்ந்த. அவர்மதி-ஒளிவீசும் திங்கள். மறு-கறை. மாதர்-தலைவி.

‘இத்தகைய வேறுபாடுகளிருந்தும், அறிவற்ற விண்மீன்கள், தலைவியின் முகத்தையும் ஒருமதியென

நினைத்து, உண்மையான மதி எது, எனத் தெரியாமல் கலங்கித் திரிகின்றனவே! என வியந்து காதலியிடம் கூறி மகிழ்ந்தான்.

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன். (குறள்-கககசு)

பதியிற் கலங்கிய-நிலையின்றித் திரிகின்றன.

மீண்டும் மதியை நோக்கிக் கூறுகின்ருன்.

'ஏ' மதியே! வாழ்கநீ! என் காதலியின் முகத்தைப் போல ஒளிவீசும் ஆற்றல் உனக்கு இருக்கிறதா? அந்த ஆற்றல் உனக்கு இருக்குமாஞல், நீயும் என்ஞல் காதலிக்கப்படுவாய்! அந்த ஆற்றல்தான் உன்னிடம் இல்லையே!'

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. (குறள்-கககஅ)

'ஏ மதியே! மலர் போன்ற கண்களையுடைய என் காதலியின் முகம் எனக்கு மட்டும் உரியதாய், யான் மட்டும் நன்கு நோக்கிச் சுவைக்கும்படியாகத் தோன்று கிறது! இந்தக் கற்பின் ஒளிதான் உன் ஒளியை வென்றது! நீயோ கற்புத் தன்மையில்லாது, பலரும் காணும்படியாக வானத்தில் தோன்றி விளங்குகின்ருய். என் காதலியின் முகத்தை ஒத்திருக்க விரும்பிஞல், பலர் காணும்படியாகத் தோன்ருமல் யான் மட்டும் காணும்படியாகத் தோன்று.'

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி. (குறள்-கககக)

இங்ஙனம் தலைவன் திங்களையும் விண்மீன்களையும் பழித்துக் கூறித் தன் காதலியின் முகத்தழகையும்,

கற்பின் திறத்தையும் புகழ்ந்து கூறினன். தலைவியும் காதலனின் பேரன்பை யெண்ணிப் பெரு மகிழ்வுற்ருள்.

முடிவில் தோழி தலைவியை அழைத்துச் செல்ல வந்தாள். அப்போது தலைவனை நோக்கி, "ஐயா, தலைவியின் பெற்ருேர் ஐயுற்று, மிகக் கடுமையாகவும், காவல் வைத்தும் உள்ளனர். இவளும் உம்மை யெண்ணி யெண்ணி யேங்கி நலிகின்ருள். இன்று பெற்ருேர்களை, ஏமாற்றிவிட்டு, இங்கு அழைத்து வருவது பெரும் பாடாகிவிட்டது. ஆதலால், இவளை வேறு ஊருக்கு அழைத்துச் சென்று, மணந்து, இன்பமாக வாழுங்கள்." என்று கூறினுள்.

தலைவன் தோழியை நோக்கி, 'நீ கூறுவது சரிதான். ஆனல், தலைவியை அழைத்துச் செல்ல வேண்டிய வழி, கல்லும் முள்ளும் நிறைந்த கொடிய வழியாகும். என் காதலியின் அடிகளோ மிக மென்மை யானவை! உலகிலேயே மென்மையில் சிறந்த அனிச்ச மலரையும் அன்னப்பறவையின் இறகையும் பரப்பி, அவற்றில் நடந்தாலும், அவைகள் முற்றிய நெருஞ்சி முள் போல், இவள் கால்களில் குத்துமே! இவ்வளவு மென்மையான அடிகளையுடைய இவள், கல்லும் முள்ளும் நிறைந்த கொடிய வழியில் எங்ஙனம் நடப்பாள்?' எனக்கூறி, உடன் போக்கை-வேற்றூருக்கு அழைத்துக் கொண்டு சென்று மணப்பதை-மறுத்து விட்டான்.

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். (குறள்-௧௧௨0)

தூவி – இறகு. நெருஞ்சிப் பழம் – நன்கு முற்றிய நெருஞ்சி முள்.

தோழியும் தலைவியை அழைத்துச் சென்று, ஒருவரு மறியாமல் படுக்க வைத்துவிட்டாள்.

## 5. காதல் சிறப்பைக் கூறுதல்.

தலைவன் தனித்திருந்து, காதல் இன்பத்தையும், காதலிக்கும் தனக்கும் உள்ள தொடர்பையும் எண்ணி யெண்ணி வியக்கின்றான். 'அத்தான்! அத்தான்!' என்று அன்பாகவும், பணிவாகவும், இனிமையாகவும் அழைக்கும் காதலியினுடைய இதழ் நீரின் - முத்துப் போன்ற தூய்மையான பற்களிடையே ஊறிய நீரின் சுவையை யெண்ணிப் பார்க்கின்றான்.

நன்றாகக் காய்ச்சிய ஆவின் பாலின் சுவை வேறு. இனிய தேனின் சுவை வேறு. இரண்டும் கலந்த கலவையின் சுவை இன்னதென்று கூறமுடியாத தனித் தன்மை வாய்ந்தது. அதைப் போலல்லவா காதலியின் இதழ்நீரும் இன்னதென்று கூறமுடியாத சுவையாக உள்ளது! என்னே அதன் சுவை! என்னே அதன் இன்பம்!

பாலொடு தேன்கலந்(து) அற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர். (குறள்-ககஉக)

பணிமொழி—பணிந்த மொழிபேசும் காதலி.
வால்எயிறு—தூய்மையான பல்.

காதலிக்கும் தனக்கும் உள்ள தொடர்பு எதைப் போன்றது, எனத் தலைவன் எண்ணிப் பார்க்கின்றான். இதோ அவன் எண்ணம்:

உடலைப் போற்றினால் உயிரைப் போற்றலாம்! உடல் அழிந்தால் உயிர் அழியும்! உடல் நலமுற்றால்

உயிர் மகிழும்! உடல் நோயுற்ருல் உயிர் வருந்தும்! உடல் வாடினுல் உயிர் வாடும்! உடல் செழித்தால் உயிர் செழிக்கும்! உடல் அழிந்தால் உயிர் மறையும்! உயிர் மறைந்தால் உடல் அழியும்! என்னே! உயிருக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு! அதைப் போன்றே என் காதலிக்கும் எனக்கும் உள்ள தொடர்பு! அவள் சிரித்தால் நான் சிரிப்பேன்! நான் சிரித்தால் அவள் சிரிப்பாள்! அவள் அழுதால் நான் அழுவேன்! நான் அழுதால் அவள் அழுவாள்! அவள் வருந்திஞல் நான் வருந்துவேன்! நான் வருந்திஞல் அவள் வருந்து வாள்! நான் மகிழ்ந்தால் அவள் மகிழ்வாள்! அவள் மகிழ்ந்தால் நான் மகிழ்வேன்! அவளின்றி நானில்லை! நானின்றி அவளில்லை! அவள் அழிந்தால் நான் அழிவேன்! நான் அழிந்தால் அவள் அழிவாள்!

> உடம்பொ(டு) உயிரிடை யென்னமற்(று) அன்ன
> மடந்தையொடு எம்மிடை நட்பு (குறள்-கக௨௨)

என்ன-எதைப்போன்றது? அன்ன—அதைப் போன்றது.

காதலி என்னைவிட்டு நீங்காமல் என்னுடன் இணைந்தே இருத்தல், உயிர் உடலோடு கூடி வாழ் வதைப் போன்றதாகும்! காதலி என்னைவிட்டு நீங்கு தலோ, உயிர் உடலைவிட்டுப் பிரிவதைப் போன்றதாகும்! அதாவது எனக்குச் சாவதைப்போல! உயிர் நீங்குங் காலத்து உயிரும் உடலும் வருந்தி அழிவதைப்போல, அவள் என்னைவிட்டு நீங்குங்காலத்து இருவரும் வருந்திச் சாவோம்!

> வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
> அதற்குஅன்னள் நீங்கும் இடத்து. (குறள்-ககஉ௪)

ஆயிழை—ஆராய்ந்த அணிகளை யணிந்தவள்.

இவ்வுவமைகளால் உண்மைக் காதலர், ஒருவருக்காக ஒருவர் உயிர் விடுந் தன்மையினர், என்பது நன்கு புலப்படும். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், கண்ணகியின் வழக்கில் தோற்று, வளைந்த கோலை நிமிர்த்த உயிரைவிட்டான்! அவன் மனைவி கோப்பெருந்தேவி, அதே இடத்தில் 'கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவதில்' எனக்கூறி, உயிர்விட்டாள்! பூதப் பாண்டியனை இழந்த பெருங்கோப்பெண்டும் தீப் பாய்ந்து உயிர் நீத்தாள்! கோவலனைப் பிரிந்த கண்ணகியும், அவன் சென்ற உலகமே சென்று விட்டாள்! இராவணனால் பிரிக்கப்பட்ட சீதையும் இராமனும் பிரிவுத்துயரால் எண்ணற்ற துயர் அடைந்தனர்! என்னே உண்மைக் காதலின் இயல்பு! என்னே இவ்வுவமைகளின் விளக்கம்!

இங்ஙனமே, தலைவியும் தன் காதலைப் பலவிதமாகச் சிறப்பித்துக் கூறுகிறாள்:

என் காதலர் என் கண்ணுக்குள்ளேயே இருக்கின்றார்! ஆதலால் அவரை இடைவிடாமல் பார்க்க வேண்டும் என்பதற்காக, என் கண்ணுக்கு மையும் தீட்டுவதில்லை!

> கண்ணுள்ளார் காதல் அவராகக் கண்ணும்
> எழுதேம் கரப்பாக்கு அறிந்து. (குறள்-ககஉஎ)

எழுதேம்-மை தீட்டேன். கரப்பாக்கு-மறைதல்.

என் காதலர் மாயம் மிக்கவர்! கண்ணில் இருப்பார்! அதே காலத்தில் என் நெஞ்சத்திலும் இருப்பார்! ஆதலால் சூடான பால் குடித்தால், நெஞ்சிலிருக்கும் அவரைச் சுட்டுவிடுமே, என அஞ்சி அதுவும் குடிக்க மாட்டேன்!

நெஞ்சத்தார் காதல் அவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. (குறள்-கஉஅ)

வெய்து-சூடானது. வே பாக்கு-சுடுதல்.

என்னே! காதலரின் அன்பு! என்னே! காதலின் சிறப்பு!

## 6. மடல் ஏற எண்ணுதல்

களவொழுக்கக் காலத்தில், தலைவிக்குக் காவல் கடுமையாகிவிட்டால், காதலர் சந்திக்க முடியாமல், காதல் நோய் மிக்கு பிரிவுத் துயரால் வருந்தி மெலிவர். தலைவி நாணத்தினுல் வெளியில் சொல்ல முடியாது வருந்திக் கொண்டிருப்பாள். தலைவன் நாணத்தைத் துறந்து மடலேற எண்ணுவதுமுண்டு. மடல் ஏறல் என்ருலென்ன?

தலைவியைப் பெறமுடியாமல் வருந்தும் தலைவன், பனை மடலால்-பனை மட்டையால் – பொய்க்குதிரை யொன்று செய்து, தலைவியின் ஓவியத்தைக் கையிலேந்தி அக் குதிரையில் அமர்ந்து, தலைவியின் ஊரைச்சுற்றி வருவான். பனை மடலின் கருக்குகள் அவன் உடலை அறுத்தாலும், பொறுத்துக்கொண்டிருப்பான். இவற்ருல் அவனது உண்மைக் காதலை ஊரார் அறிந்து, காதலர் இருவருக்கும் மணமுடித்து வைப்பர். மடலேற்றத்தைப் பற்றி இன்னும் பலர் பலவிதமாகக் கூறுவர். தலைவியைப் பெறுவதற்குப் பல வழிகளிலும் முயன்று முடியாத நிலையில் இறுதியில்தான் மடலேற்றம் கைக்கொள்ளப் படும். நாணமும் ஆண்மையும்மிக்க தலைவன் மடலேருன். ஆனுல் மடலேறுவதாகத் தோழியிடம் கூறி மிரட்டி, அதன் மூலமாகத் தன் செயலை முடித்துக்கொள்வதும் உண்டு.

தலைவிக்குக் காவல் அதிகமாகி விட்டதென்றும், இனித் திருமண ஏற்பாடின்றித் தலைவியைச் சந்திக்க இயலாது என்றும், தோழி தலைவனிடம் கூறிவிட்டாள். 'காதல் நோயால் வருந்தியவர்க்கு மடலேறுதலே வலிமையான காவலாகும். யானும் மடலேறுவேன்' என்றான் தலைவன்.

'நாணம் மிக்க உம்மால், பலரும் அறிந்து தூற்றும் படியாக மடலேற இயலுமா?' என்றாள் தோழி.

'காதல் நோயால் வருந்தும் என்னுடலும் உயிரும் நாணத்தை நீக்கிவிட்டன. காதல் நோய் கடல்போல் பெருகிவிட்டது' என்றான் தலைவன்.

'துயரக் கடலைக் கடப்பதற்கு உதவியாக ஆண்மை, நாணம் என்ற இரண்டு தெப்பங்களைப் பெற்றுள்ள நீர் இங்ஙனம் கூறுவது சரியாகுமா?' என்றாள் தோழி.

'தோழியே! ஆண்மையும் நாணமும், தலைவியைக் காணுமுன் பெற்றிருந்தேன்! இப்போது இழந்து விட்டேன்! காதல் நோயாளர் ஏறும் மடலைத்தான் இப்போது பெற்றுள்ளேன்! இந்நிலை எப்படி யாரால் வந்தது? உன் தோழியால் வந்தது! அவளைக்கண்டேன்! காதல் கொண்டேன்! காதல் வளர்ந்தது! பெருகியது! வெள்ளமாகியது! கடல் போன்ற மிகப்பெரும் வெள்ள மாகிவிட்டது! . அப் பெருங் காதல் வெள்ளம், எனது பகைவரெல்லாம் நடுங்கும்படியான ஆண்மை, பெரும் நாணம் என்ற தெப்பங்களை அடித்துக்கொண்டுபோய் விட்டது! இனி எப்படி யான் தன்னந்தனியனாக, காதல் வெள்ளத்தை நீந்திக் கரையேறுவேன்? மடலேறு வதைத்தவிர வேறுவழியில்லை!' என்று தலைவன் கூறினான்.

காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. (குறள்-ககங௪)

கடும்புனல்-கடும் வெள்ளம். புணை-தெப்பம்; படகு. காமக் கடும்புனல்-காதலாகிய பெரு வெள்ளம்.

இக் குறளில், காமம்-காதல்-பெரு வெள்ளமாகவும் நாணும் நல்லாண்மையும் தெப்பங்களாகவும் உருவகம் செய்யப்பட்டிருப்பதால், இது உருவக அணியாகும்.

## 7. அலர் வளர்க்கும் காதல்

காதலரின் களவொழுக்கத்தைப் பற்றி ஐயுற்ற சிலர் காதோடு காதாகப் பேசிக்கொள்வது 'அம்பல்' எனப்படும். அது இன்னும் நன்ருக வெளிப்பட்டு ஊரெல்லாம் அதேபேச்சாகப் பேசித் தூற்றுவது 'அலர்' எனப்படும்.

நம் காதலரின் களவொழுக்கமும் நன்ருக வெளிப் பட்டு ஊரெல்லாம் அலராயிற்று. தலைவியும் பிரிவுத் துயரால் வாடி மெலிந்தாள்! நன்ருகக் கையைப் பிடித்துக் கொண்டிருந்த வளையல்கள், கை மெலிந்த தால் கழன்றன. இவற்றை யெல்லாம் அறிந்த தலைவியின் தாயும் தலைவியைக் கடுஞ் சொற் கூறிக் கடிந்தாள். எருவிட்டு நீர்பாய்ச்சிய பயிர்போல, தலைவியின் காதல் நோயும் செழித்து வளர்ந்தது.

காதலரின் துன்பத்தை நீக்க, தோழி முயன்ருள்; ஊருக்குப் புறத்தே யுள்ள சோலையில், இரவில், யாரும் அறியாவண்ணம் காதலர் சந்திக்க, தோழி ஏற்பாடு செய்தாள். யாவரும் உறங்கிய பின், தோழி தலைவியை அழைத்துக்கொண்டு சோலைக்குச் சென்ருள். தலைவனும்

சோலையை நோக்கி வந்துகொண்டிருந்தான். பெண்க ளிருவரும் ஏதோ பேசிக்கொண்டிருந்தனர். அவர்கள் யாது பேசிக்கொள்கின்றனர் என்பதை அறிவதற்காகத் தலைவன் வேலிக்குப் பின்னால் மறைந்து கொண்டான். அங்ஙனம் அவன் வந்ததையும் மறைந்துகொண்டதை யும் தோழியர் இருவரும் அறிந்து கொண்டனர். ஆயினும் அறிந்ததாகக் காட்டிக்கொள்ளாமலும், தலை வனுக்கும் கேட்கும்படியாகவும், திருமண முயற்சியைத் தலைவன் உள்ளத்தில் தோற்றுவிக்கும் படியாகவும், தோழிகள் பேசிக்கொள்கின்றனர்.

தோழி:—தலைவீ! திருமணம் செய்து உன் துயரைப் போக்க வேண்டுமென்ற எண்ணமே சிறிதும் இல்லாத தலைவரையே ஏன் இப்படி யெண்ணி யெண்ணி ஏங்கி வாடி மெலிகின்றாய்! வளைகளும் கழன்று விட்டனவே! உண்மை யுணர்ந்த ஊரார் அலர் தூற்றுகின்றனர்! நம் தாயோ கடுஞ்சொல்லால் தாக்குகின்றாள்! இவற்றை யெல்லாம் எண்ணியாவது, தலைவரை மறந்து, காதல் நோயை அடக்கிக்கொண்டிருக்கக் கூடாதோ?

தலைவி:— யான் தலைவரை மறப்பதா! காதல் நோயை அடக்குவதா! நன்கு சொன்னாய்! யான் தலைவரை மறக்கலாம் — காதல் நோயை அடக்கலாம்— என்றெண்ணினாலும், எங்களிருவரையும் இணைத்துப் பேசி ஊரார் தூற்றும் அலரும், அன்னையின் கடுஞ் சொல்லும், தலைவரையும், எங்கள் கூட்டத்தையும், எங்கள் காதலையும் நினைவூட்டி, காதல் நோயை வளர்க் கின்றன. நல்ல எருவிட்டு, முறையாக நீர்பாய்ச்சப்படும் பயிர் செழித்து வளர்வதைப் போல, அலரை எருவாகவும் அன்னையின் கடுஞ்சொல்லை நீராகவும் கொண்டு, காதல் நோயாகிய பயிர் நன்கு செழித்து

வளர்கிறது. எப்படித் தலைவனை மறப்பது? எப்படிக் காதலை அடக்குவது?

> ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
> நீராக நீளும்இந் நோய் (குறள்–கக௪எ)

கௌவை – அலர். நீளும் – வளரும். நோய்–காதல் நோயாகிய பயிர்.

அருமைத் தோழியே! எரிகின்ற நெருப்பில் தண்ணீரை ஊற்றினால் அணையும்; நெய்யை ஊற்றி அணைக்க முடியுமா? நெய் ஊற்றப்பட்ட நெருப்பு மேலும் நன்கு பற்றி எரிவதைப் போல, ஊரார் தூற்றும் அலராகிய நெருப்பினால், காதல் நோயாகிய நெருப்பு நன்கு பற்றியெரிகின்றதே! யான் எப்படித் தலைவரை மறக்க முடியும்? எப்படிப் பொறுத்துக்கொள்ள முடியும்?

> நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
> காமம் நுதுப்பேம் எனல். (குறள்–கக௪அ)

நுதுப்பேம்–அணைப்பேம். எரி–நெருப்பு

இங்ஙனம் தோழியும் தலைவியும் உரையாடிக் கொண்டவற்றைத் தலைவன் கேட்டான்; தலைவியின் துயரை யுணர்ந்தான்; விரைவில் திருமண முயற்சி செய்ய உறுதி கொண்டான்; ஆயினும் திடீரென்று மறைவிடத்தினின்றும் வெளிப்பட்டு, அலரைப் பற்றிய தன் கருத்தை வெளியிடுகின்றான்.

ஆ! அலர்! அந்த அலரால் அல்லவா யான் உயிர் வாழ்கின்றேன்!" என்று கூறிக்கொண்டே தலைவன் வெளிவந்தான். தோழியும் குறிப்பறிந்து காதலரைத் தனியே விட்டுப் பிரிந்து சென்று விடுகின்றாள். தலைவன் மேலும் மகிழ்ச்சியோடு கூறுகின்றான்.

கண்ணே! நாம் சந்திக்க முடியாமையால், காதல் நோய் பெருகி, யான் சாகாமலிருக்க, என்னுயிரை அலர் அல்லவா காப்பாற்றி வருகின்றது! நம்மிருவரையும் இணைத்தும், நம் புணர்ச்சியைக் குறித்தும் ஊரார் பேசுபவற்றைக் கேட்கும் போதெல்லாம், பெறுதற்கரிய உன்னையும், நீ தரும் இன்பத்தையும் பெற்றதைப் போன்ற உணர்ச்சியும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது! ஆதலால் அலர் தான் என் உயிரைக் காக்கின்றது! அந்த அலர் இன்னும் தோன்ருதா! எப்போதும் இருந்துகொண்டே இருக்காதா! அதனுல் உன்னைப் பெற்றதைப் போல மகிழ்ந்து கொண்டே யிருக்க மாட்டேனு!

உறுஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து. (குறள்–ககசுச)

தேமொழியே! குடிவெறியருக்குக் குடித்துக் களிக்கக் களிக்க, மேலும் மேலும் குடிக்க வேண்டுமென்ற ஆவலே தோன்றும். அதைப்போல, அலர் தூற்றத் தூற்ற காதல் இன்பம் அதிகமாகிறது!

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்ருல் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது. (குறள்–ககசுரு)

வேட்டற்ருல்–விரும்புவதைப் போல.

அதிகம் குடிப்பதால் உடலுக்குத் தீமையே. வெறி மிகுதியால் தன்னுணர்வு இழந்து மானமிழந்து விலங்கு போலிருக்க வேண்டும். இந்த நிலையிலும் குடித்துக் களித்தவன் மேலும் குடிக்கவே விரும்புவான். அதைப் போல, அலரெழக் காரணமான களவொழுக்கம் பிரிவினுல் அதிகத் துயரமே தரும். இப்பிரிவுத் துயரத்துடன்,

அலர் தூற்றலால் மானங்கெடும். இந்நிலையிலும் காதலன் அலரையே விரும்புகின்ருன். இவ்விளக்கத்தைக் ‘களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்ருல்’ என்ற உவமை தருகின்றது.

## 8. பிரிவுத் துயர்.

காதலரின் களவொழுக்கம் முடிந்து கற்பொழுக்கம் தொடங்கியது. அதாவது, காதலரிருவரும் பலரறிய மணம் புரிந்து கொண்டு, கணவன் மனைவியராய், பேரின்பம் துய்த்தும், அறவோர்க்கு அளித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க்கு எதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்து எதிர்கோடல் முதலிய அறங்களைக் குறைவறச் செய்தும் ஓராண்டுக்காலம் இனிதே இல்லறம் நடத்தினர்.

வாழ்க்கையில் பொருள் குறைவு ஏற்பட்டது. பொருளின்றி, இல்லறத்திற்குரிய அறங்களை யாங்ஙனம் செய்வது? பசியுடனும் கவலையுடனும் இன்பம் யாங்ஙனம் துய்ப்பது? எனவே, இல்லறத்திற்குரிய பொருள் ஈட்ட தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து வேற்று நாட்டுக்குப் புறப்பட்டு விட்டான். போகும் வழியில், காதல் ஒருபக்கம் இழுக்க, கடமை ஒருபக்கம் இழுக்க, இரு யானைகளால் பற்றி யிழுக்கப்படும் தேய்புரி பழங்கயிற்றைப் போல, தலைவன் உள்ளம் படாதபாடு பட்டது. முடிவில் கடமையுள்ளம் வெற்றி கொண்டதால், காதலையடக்கிச் சிறிது மறந்து, கடமை மேல் கண்ணுய்ச் சென்று விட்டான்.

வீட்டிலேயே அடைபட்டுக் கிடக்கும் தலைவிக்குக் காணும் பொருளெல்லாம் தலைவன் வடிவமாகவே

தோன்றின. தலைவன் கையாளும் எப்பொருளைப் பார்த்தாலும் தலைவனின் தோற்றமே. ஆதலால், காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரும் காதல், இரவெல்லாம் தலைவியைத் துன்புறுத்தியது. தலைவனோடு கூடிய காலத்தில் இன்பமூட்டிய நிலவும், தென்றலும், பஞ்சணையும், இரவும் இப்போது துன்பமே ஊட்டுகின்றன. முன்பு குளிர்ச்சி தந்த நிலவும் தென்றலும், இப்போது வெப்பத்தையே ஊட்டுகின்றன! முன்பு மென்மையாக இருந்த பஞ்சணை மெத்தை, இப்போது முள்ளென உருத்துகிறது! முன்பு 'இன்னும் சிறிது நேரம் நீடிக்காதா' என்று ஏங்கும்படியாக விரைவாகக் கழிந்த இரவுக் காலம், இப்பொழுது பல்லாண்டுக் காலம் போல நீண்டு துன்புறுத்தியது. இப்படிப் பல இரவுகள் கழிந்தன. தலைவனோ கடமை முடித்து மீண்டபாடில்லை. தலைவி என் செய்வாள்? அவள் உடல் பிரிவுத்துயரால் – காதல் நோயால்– மெலிந்தது! வளைகள் கழன்றன! கண்கள் இருண்டன! ஓரிரவு காதல் நோய் மிக்கு இரவு முழுவதும் உறங்காத தால், தலைவி மிகச் சோர்வாகக் காணப்பட்டாள்.

இந் நிலைகண்ட தோழி பதை பதைத்துத் தலைவி யிடம் கூறுகிறாள்:

என்னுருயிர்த் தோழியே! உன்னை மறந்து, கடமையே பெரிது என எண்ணிப் பிரிந்திருக்கும் தலைவரை நீ மட்டும் ஏன் இப்படி யெண்ணி யேங்கு கிறாய்? சார்ந்த பொருளைச் சுட்டெரிக்கும் தீயைப்போலக் கொடியதாயிற்றே காதல் நோய்! அத்தகைய கொடிய காதல் நோய்க்கு இடங்கொடுத்து இப்படி உடலைக் கெடுத்துக் கொள்ளலாமா?

தலைவி:– உயிர்த் தோழியே! நீ இன்னும் காதலின் தன்மையைச் சரிவர உணரவில்லை! உன் வாழ்வில் நீ

அநுபவிக்க நேரும்போதுதான் உணர்வாய்! தீயைப் போன்றதன்று காதல்! தீயைவிடக் கொடியது! நெருங்கினுலும் தொட்டாலும்தான் தீ சுடும்! ஆனல் காதலோ முற்றிலும் மாறுபட்டது! நெருங்க நெருங்கக் குளிர்ச்சியும், விட்டு விலக விலக வெப்பமும் தரக்கூடிய புதுமையான தீயைத் தன்பால் இணைத்துக் கொண்டுள்ளது காதல்! ஆதலால் காதலை யான் மறந்தாலும், அது என்னை மறக்காமல் சுட்டு எரிக்கின்றது!

அடி தோழி! தொட்டாலும் சுடாமல் கூட நெருப்பு இருக்கலாம்! தக்க மருந்தினுலும், மந்திரத்தாலும் நெருப்பினின்றும் தப்பலாம்! மருந்துக்கும் மந்திரத்திற்கும் கட்டுப்பட்டது நெருப்பு! ஆனல் காதல் நோய் எந்த மருந்துக்கும் மந்திரத்திற்கும் கட்டுப்பட்டதல்ல! சுட்டுத் துன்புறுத்தியே தீரும்! ஆதலால், மருந்தும் மந்திரமுமின்றித் தொட்டால் மட்டும் சுடக்கூடிய நெருப்பு, விட்டுப் பிரிந்தால் தவருமல் சுட்டே தீரும். காதல் நோயைப்போல அவ்வளவு ஆற்றலும் கொடுமையும் பொருந்தியதல்ல! இத்தகைய கொடிய காதலிடம் இருந்து எப்படியடித் தப்புவது?

> தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
> விடிற்சுடல் ஆற்றுமோ தீ. (குறள்-கககூ)

என்னே பிரிவுத் துயரின் கொடுமை!

தோழி:- இப்படி நினைத்து நினைத்து ஏங்கி மெலிவதால் காண்போரெல்லாம் ஏளனம் செய்வர். அதனல் உனக்கு நாணமாக இருக்காதா? நாணத்திற்கு அஞ்சியாவது காதல் நோயை மறைத்து வைக்கக்கூடாதா?

தலைவி:- நல்ல ஊற்று அமைந்த கிணற்றில் நீர் இறைக்க இறைக்க ஊறிக்கொண்டே யிருக்கும்.

இறைப்பவர் கை சலித்தாலும் ஊற்று நிற்காது. இயந்திரத்தைக் கொண்டு இறைத்து வடித்து விட்டாலும் மீண்டும் ஊறிக்கொள்ளும். அதைப்போல, நாணத்தால் காதல் நோயை மறைக்க முயன்றாலும், நாணத்தையும் கடந்து அது வெளிப்படுகின்றதே! எவ்வளவுக்கு எவ்வளவு மறைக்க முயலுகின்றேமோ, அவ்வளவுக்கு அவ்வளவு காதல் நோய் மிகுதியாகின்றதே! என் செய்வேன்?

மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை யிறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். (குறள்-ககசுக)

## 9. பசலைத் துன்பம்.

பிரிவுத் துயரமானது மகளிருடலில் பசலையை யுண்டாக்கும். பீர்க்கம்பூவின் நிறம் போன்ற பொன்னிறம் உடலில் பரவுதலே பசலையெனப்படும். இப்பசலையானது பிரிவுத் துயரையும் காதல் நோயையும் நன்கு எடுத்துக்காட்டும். ஆற்ற முடியாத துயரம் மிகும்போதே பசலை படரும்.

பிரிவாற்றுமையால் வருந்திய தலைவியின் உடலிலும் பசலை படர்ந்தது. தலைவியின் எல்லையற்ற துயரைக் கண்ட தோழி வருந்திக் கூறுகிறாள்: "தலைவர் பக்கத்து நாட்டிற்குத்தானே சென்றிருக்கிறார்? அதற்குள்ளாக இப்படிப் பொறுக்க முடியாமல் வருந்துகின்றாயே! உடலெல்லாம் பசலை படர்ந்து விட்டதே."

"தோழீ! தலைவர் என்னைக் கட்டியணைத்த கையைச் சிறிது நெகிழ்த்தாலும் போதும்! அள்ளிக் கொள்வதைப் போல, பசலை படர்ந்துவிடும்! விளக்கு நன்றாக எரியும் போது ஒளி எங்கும் பரவி, இருள் அறவே மறைந்து

விடும். விளக்கில் எண்ணெய் குறைந்து ஒளி மங்க ஆரம்பித்தால், இருளும் படர ஆரம்பிக்கும். விளக்கு அணைந்த உடனேயே எங்கும் இருள் சூழ்ந்து கொள்ளும். அதைப்போல, என் கணவர் என்னை அணைத்துக் கொண்டிருக்கும் போது உடலெல்லாம் இன்ப மயமாக இருக்கும்! அணைப்பு நெகிழ ஆரம்பித்தால் இன்பம் குறைந்து பசலை படர ஆரம்பிக்கும். அவர் என்னை விட்டுச் சிறிது அகன்ற உடனேயே இன்பம் நீங்கி, துன்பம் நிறைந்து, உடல் முழுவதும் பசலை படர்ந்துவிடும்! ஆம்! விளக்கின் இறுதியைப் பார்க்கும் இருளைப் போல, கணவர் அணைப்பின் இறுதியைப் பார்க்கும் பசலை!"

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு. (குறள்-கக அசு)

கொண்கன்–கணவன்.

தனிமையால் துன்பமிக்க தலைவியைக் கண்டு தோழி மீண்டும் ஆறுதல் கூறுகிருள்; 'அருமைத் தலைவியே! உன்னைப்போலவே காதல் நோய் அவரையும் வருத்துமல்லவா? அவருக்கும் தனிமைத் துன்பம் இருக்குமன்ரு? ஆதலால் அவர் உன்னை நாடி விரைவில் வருவார்! வந்து பேரின்பம் தருவார்! கவலைப்படாமல் இருப்பாயாக.

'தோழியே! உலக உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய உணவை யுண்டாக்கித் தானும் உணவாக உதவுவது நீர்! இத்தகைய நீரின்றி உயிர் வாழ்க்கையில்லை! நீரும், வான் -மழை–யின்றி யில்லை! உயிர்வாழ்வாருக்குத் தக்க காலமறிந்து தக்க அளவு மழை பெய்வதைப்போல, அறத்திற்காகப் பொருளீட்டப் பிரிந்து சென்றிருக்கும்

தலைவரையே விரும்பிக் காதலித்து எதிர்நோக்கி யிருக்கும் என்னையும் அவர் விரும்பிக் காதலித்து அதிக காலம் நீட்டிக்காமல் அளவறிந்து தக்க காலத்தில் வந்து இன்பம் பயப்பாரே யானல் சிறப்பான பேரின்ப மாகத்தானிருக்கும்!

வாழ்வார்க்கு வானம் பயந்துஅற்றல் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி (குறள்-ககக௨)

வீழ்வார்க்கு–தலைவனை விரும்பும் தலைவிக்கு. வீழ்வார்–தலைவியை விரும்பும் தலைவன். அளிக்கும் அளி–அன்பு கொண்டு பயக்கும் இன்பம்.

தோழியே! நான் அவரைக் காதலிக்கும் அளவுக்கு அவர் என்னைக் காதலிப்பதாகத் தெரியவில்லையே! எங்கிருந்து அவர் விரைந்து வந்து எனக்குப் பேரின்பம் அளிப்பது?

அதிகம் சுமை தூக்குவோர் ஒரு நீண்ட மூங்கிலின் இருபுறமும் சமமான சுமைகளைத் தொங்கவிட்டு, மூங்கிலின் நடுப்பாகத்தைத் தோளில் வைத்துத் தூக்கிச் செல்வதுண்டு. இந்த அமைப்புக்குக் காவடி யெனப் பெயர். காவடியின் இருபுறமும் சுமை சமமாக இருந்தால் தூக்குவதற்கு நன்ருக இருக்கும். அப்படியில்லாது ஒரு பக்கம் அதிகச் சுமையும், ஒரு பக்கம் குறைந்த சுமையும் ஆக இருந்தால், அதிகச் சுமையுள்ள பக்கம் அழுத்தி, தூக்குபவர்க்குத் துன்பத்தைக் கொடுக்கும். அதைப் போல, இருவரும் மனமொத்துக் காதலிக்கும் காதலே இன்பம் பயக்கும். அங்ஙனமின்றி யாராவது ஒருவர் மட்டும் அதிகம் காதலித்தால், அவருக்கு அந்த ஒருதலைக் காதல், துன்பமே அதிகம் பயக்கும்.

ஒருதலையான் இன்னுது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. (குறள்-ககூகூ)

காப்போல—காவடிபோல.

தோழியே! யான் தலைவர்பால் கொண்டுள்ள காதல் அதிகம். அவர் என்பால் கொண்டுள்ள காதல் குறைவு. அதனுல்தான் ஒரு பக்கம் சுமை மிகுந்த காவடியைத் தூக்குபவனைப்போல துன்பம் அடைகின்றேன்.

## 10. மாலைத் துயரம்

சேர்ந்திருக்குங் காதலருக்கு இன்பந் தருவன வெல்லாம் பிரிந்திருக்கும் காதலருக்குத் துன்பந் தரும். இரவுக் காலம், மாலைப்பொழுது, வான்மதி, தென்றல் காற்று, குழலோசை ஆகியவையெல்லாம் இணைந் திருப்போருக்கு இன்பமும், பிரிந்திருப்போருக்குத் துன்பமும் தருவனவாகும். புணர்ச்சிக்குரிய இரவும், இரவின் வருகையை யுணர்த்தும் மாலையுமே பிரிந்தோ ருக்கு மிகப்பெரும் துன்பம் பயப்பன.

தலைவனைப் பிரிந்த தலைவி மாலைக் காலம் வந்த உடன், அடுத்து வரப்போகும் இரவை யெண்ணிப் பெருந்துயரமெய்துகிருள். காதல் நோய் மயக்கத்தால், ஒளியிழந்த மாலையைப் பார்த்து, தன் துயரை அதன் மேல் ஏற்றிக் கூறுகிருள்.

"எனக்குத் துன்பந்தரும் ஏ மாலைக் காலமே; நீ வாழ்க! நீயும் என்னைப்போல் ஒளி மங்கி அழகு இழந்து இருக்கிருயே! என் துணைவரைப்போல உன் துணைவரும், விட்டுப் பிரிந்திருக்கும் கொடியவரோ?"

புன்கண்ணை வாழி மருள்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. (குறள்-கஉஉஉ)

புன்கண்–வருத்தம். கேள்–கணவன்.

வன்கண்ணது–கொடியது.

இங்ஙனம் வருந்திக் கொண்டிருக்கும் தலைவியைப் பார்த்துத் தோழி "ஏன் மாலைக் காலத்தில் இப்படித் துயருறுகின்ருய்?" என்று கேட்டாள். அதற்குத் தலைவி விடை கூறுகின்ருள்:

'தோழியே, காலையில் அரும்பாக அரும்பி, பகல் முழுவதும் மொட்டாக வளர்ந்து, மாலையில் மலர்ந்து மணம் வீசும் மல்லிகை போல, காதலானது காலையில் சிறிதாகத் தோன்றி, பகலெல்லாம் சிறிது சிறிதாக வளர்ந்து, மாலையிலே நன்கு முற்றி நோயாக மலர்ந்து பெருந் துன்பத்தையே பயக்கின்றதே! யான் என் செய்வேன்?

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய் (குறள்-கஉஉஎ)

காலையில் துயில் எழுவதற்குமுன், பிரிந்த கணவன் வந்து கூடி இன்பமளித்ததாகக் கனவில் கண்டாள். ஆதலால், காலையில் காதல் அரும்புகின்றது. பிறகு நேரம் செல்லச் செல்ல, கனவை மறந்து பிரிவை யெண்ணுவதால், காதல் அரும்பு வளர்ந்து, போது–மொட்டு–ஆகின்றது. மாலை நெருங்கிய உடன் பறவையும் விலங்கும் தத்தம் துணையுடன் இருப்பிடம் நோக்கி, வருவதைக் காணும் தலைவி, கணவனேடு கூடியிருந்த காலத்து அடைந்த இன்பத்தை யெண்ணி யேங்கி வருந்துகின்ருள். ஆதலால் காதல், துன்பம்

தரும் நோயாக மலருகின்றது. அத் துன்பத்தினின்றும் மீளமுடியாத தலைவி, தன் காதல் வளர்ச்சித்துன்பத்தை, 'காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரும் இந்நோய்' என்று உருவகப்படுத்திக் கூறுகின்ருள்.

இங்ஙனம் கூறக்கேட்ட தோழி, 'இங்ஙனம் வருந்துவது பொருந்தாது. பொறுத்துக் கொண்டிரு' என்கிருள்.

தலைவி தோழியை நோக்கி, 'தோழியே! கொலைக் களத்தில் பல உயிர்களைக் கொலைசெய்து பழக்கப்பட்ட கொலையாளிகள், சிறிதும் இரக்கமின்றி மீண்டும் மீண்டும் கொலை செய்வதற்காகக் கொலைவாளுடன் கொலைக்களத்திற்கு வருவர். அதைப்போல, பிரிந்திருக்கும் காதலரைத் துன்புறுத்துவதையே தன் தொழிலாகக் கொண்ட மாலைக் காலம் சிறிதும் இரக்கமில்லாமல், என் காதலர் என்னருகில் இல்லாத நேரமெல்லாம் என்னைத் துன்புறுத்திக் கொல்வதற்காக, தென்றல், வான்மதி முதலிய கொலைக் கருவிகளையேந்தி வந்து துன்புறுத்துகின்றதே! என்செய்வேன்? எப்படி யாற்றுவேன்'' என்கிருள்.

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். (குறள்-கஉஉச)

ஏதிலர்-கொலையாளி.

## 11. மனவடக்கம் அழிதல்

பிரிவாற்ருமையால் மிக வருந்திய தலைவியின் உறுப்புக்கள் யாவும் நலிந்தும், மெலிந்தும், பசந்தும், வாடியும் அழகை இழக்கின்றன. அவளும் மன அடக்

கத்தை யிழந்து மாலைப்பொழுதோடும் வான்மதியோடும், தன் நெஞ்சத்தோடும் தன் துயரை வெளியிட்டு உரையாடுகிருள். இங்ஙனம் உரையாடுவதால், நாணமும் நிறையாகிய மன அடக்கமும் அழிகின்றன. இந்நிலை கண்ட தோழி, "அன்பே, நாணமும் மன அடக்கமும் இன்றி, இங்ஙனம் கண்டவற்ருேடு எல்லாம் நீ உளறுவதால், 'இவள் நாணமும் அடக்கமும் இல்லாதவள், என்று ஊரார் தூற்றுவர். ஆதலால் நிறையும் நாணமும் அழியாது நீ காக்கவேண்டும்'' என்ருள். அதைக் கேட்ட தலைவி கூறும் விடை:

"அருமைத் தோழியே! காதல் தோன்றுவதன் முன்னும், காதலித்த பின் காதலரைப் பிரிவதற்கு முன்னும், யாவற்றையும் மனத்தின் கண்ணே அடைத்துக் காக்கும் நிறையாகிய கதவையும், நாணமாகிய தாழ்ப்பாளையும் பெற்றிருந்தேன். ஆனல் இப்பொழுதோ காமவேட்கையாகிய குந்தாலி அவற்றை உடைத்துத் தகர்த்து விட்டது. இனி யெப்படியடி நிறையையும் காப்பது?''

காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. (குறள்-கஉடுக)

கணிச்சி-குந்தாலம் என்னும் வலிய கருவி. வீழ்த்த-கோத்த.

தோழி:- நாணமும் நிறையும் மிக்க பெண்கள் காம நோயை மறைத்துக் காத்தலே சிறப்புடைத்தாகும்.

தலைவி:- தும்மல் வரும்போது சொல்லிவிட்டு வராது; திடீரென்று வரும்; அப்படி வருகின்ற தும்மலை அடக்க முயன்ருலும் அடக்கவும் முடியாது; அது வெளிப்பட்டே தீரும். அப்படி வருகின்ற தும்மல், ஆண் என்றும்

பெண்ணென்றும் வேற்றுமை பாராது யாராயிருந்தாலும் திடீர் திடீரென்று வந்தே தீரும்; அடக்க முயன்ருல் அடங்காமல் வெளிப்பட்டே தீரும்.

அதைப்போல, காமத்திற்கும், ஆண், பெண் என்ற வேற்றுமையில்லை. அடக்கிஞலும் அடங்கி நில்லாது வெளிப்பட்டே தீரும். யான் என் காமத்தை மறைப் பதற்குப் பலதடவைகள் முயன்றும் தோல்வியே கண்டேன். தும்மல்போல அடங்காமல் அது வெளிப் பட்டுக் கொண்டே இருக்கிறது.

மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும். (குறள்-கஉரு)

தோழி;- உனக்கு இத்தகைய காம நோயைத் தந்து விட்டுப் பிரிந்திருக்கும் தலைவர் வந்தால் நீ யாது செய்வாய்?

தலைவி:- அவர் வரட்டும்! ... வரட்டும்! என்பக்கத்தில் கூட வரவிடாமல் ஊடிக் கொள்கிறேன்!

தோழி:- இது வெறும் பேச்சளவுதான். பல நாட்கள் பிரிந்திருந்தவர் வந்தவுடன் ஆவலுடன் நெருங்குவார்! நீயோ, இப்பொழுதே நிறையையும் நாணத்தையும் இழந்துவிட்டாய்! அவர் எப்பொழுது வருவாரோ' என ஏங்கிக்கொண்டிருக்கிருய்! இந்த நிலையில் நீயா ஊடிக் கொள்பவள்? முன்பொரு தடவை இப்படித்தான் கூறினுய். ஆனுல் என்ன ஆயிற்று? முற்றிலும் மாறு பட்ட செயலன்ருே நடந்தது?

தலைவி:- யான் என்னடி செய்வேன்? கொழுப்பைத் தீயிலிட்டால் என்ன செய்யும்? அப்படியே உருகிவிடும். எனது நெஞ்சமும் அதைப் போன்றதே! நீறு பூத்த

நெருப்பாக இருக்கும் காமம், பிரிந்துவந்த கணவரைக் கண்ட உடன் பற்றி எரிகிறது! அவர் ஆவலுடன் நெருங்கும்போது மூண்டு எரிகிறது! கொழுப்பு போன்ற இளகிய நெஞ்சு உருகாமல் என்ன செய்யும்? நெஞ்சு உருகிவிட்டால், பின்னர் நிறையேது? நாணம் ஏது? ஊடுவதுஎப்படி?யானும் ஆவலுடன் அவரை அணைத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியென்ன?

> நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
> புணர்ந்துஊடி நிற்பேம் எனல். (குறள்–௧௨௯0)

நிணம்–கொழுப்பு.

எப்படியானாலும் சரி. தோழி! இம்முறை அவர் வந்த பிறகு அவர் குற்றங்களை யெல்லாம் எடுத்துக் கூறி 'ஊடுகிறேனா இல்லையா' என்று பார்!

தோழி:– சரி, பார்ப்போமே!

## 12. குறிப்பின் சிறப்பு

தலைவி தலைவன் வரவையே எதிர்நோக்கி யேங்கிக் கொண்டிருக்கிறாள். பொருளீட்டும் வேலையை முடித்த தலைவனும் தலைவியைச்சாரும் வேட்கை மிகுதியினால் விரைவாக வந்து சேர்ந்தான். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? கண்களோடு கண்கள் நோக்கின! இருவரது உள்ள வேட்கையை யெல்லாம் குறிப்பால் உணர்த்தின! வாய்ச் சொற்களுக்கு அங்குப் பயனுண்டோ? கைகள் அணைக்கத் துடித்தன! ஆனால் அதற்கேற்ற காலமும் சூழ்நிலையும் வேண்டாமா? பலர் வந்துகொண்டும் போய்க்கொண்டும் பேசிக்கொண்டும் இருக்கின்றனரே! எப்படி யணைத்துக் கொள்வது? இரவை யெதிர்நோக்கி யேங்கிக்கொண்டிருக்கின்றனர்!

இரவும் வந்தது. அனைவரும் உறங்கினர் இரு வரைத் தவிர. பிரிந்து கூடிய காதலருக்கு உறக்கம் வருமா? இருவரும் கூடினர்! எப்படிக் கூடினர்? செம் மண் நிலத்தில் மழை பெய்தால் நீரும் மண்ணும் எப்படிக் கலக்குமோ அப்படிக் கலந்தனர்!–கூடினர்! அதைவிடப் பேரின்பம் தேவருலகத்தில் கிடைக்குமா? அல்லது தாமரைக் கண்ணனுடைய வைகுண்டத்தில் தான் கிடைக்குமா?

பிரிவாற்றுமையால் தலைவி யிழந்துவிட்ட அழகை யெல்லாம், புணர்ச்சி யின்பத்தினுல் மீண்டும் பெற்றுப் பெரும் பொலிவுடன் விளங்கினுள். பேரின்பம் எய்திய தலைவனும் தலைவியைப் பலவாருகப் புகழ்ந்துரைத்தான். புகழுரையைக் கேட்ட தலைவியின் உள்ளத்தில், 'கணவர் நாளையே நம்மைப்பிரிந்து சென்று விடுவாரோ? அதனுல்தான் இவ்வளவு புகழ்ந்துரைக்கின்ருரோ' என்ற ஐயம் ஏற்படுகிறது. தலைவி ஏதோ ஐயுறுகின்ருள், என்பதை முகம் குறிப்பால் உணர்த்தக்கண்ட தலைவன், ஐயம் யாதென வினவுகிருன். தலைவி நாணத்தால் சொல்லாமல் புன்னகையால் மறைக்கிருள். இந் நிகழ்சியைத் தலைவன் மறுநாள் தோழியிடம் அழகுபட உரைக்கிருன்:

'மலரும் பருவத்திலுள்ள மொட்டுக்குள் மணம் மறைந்திருக்கும். மலர்ந்தாலொழிய மணம் வீசாது. மலராத மொட்டை முகர்ந்தாலும் மணம் தெரியாது. ஆனுல் கண்ணுக்கு அழகாகத்தானிருக்கும். அதைப் போல, தலைவி வாயைத் திறக்காமல், பல் சிறிதும் தெரியாமல் நகைக்கும் புன்னகையில் ஏதோ குறிப்பு மறைந்துள்ளது!

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளது ஒன்றுஉண்டு. (குறள்-கஉஎச)

முகை மொக்குள்—மொட்டின் மலர்ச்சிக்குள். நாற்றம்—மணம்.

பளிங்குபோல் ஒளி வீசும் மணிகளைக் கோத்த நூல் மணியினிடையில் இருந்தாலும், வெளியில் நன்ருகத் தெரியும்; மணியுடன் ஒன்றி இரண்டும் ஒன்றெனவே தோன்றும். பிரிக்க முடிந்தாலும் பிரிக்க முடியாததைப் போல் தோன்றும். அதைப்போலத் தலைவியின் மிக்க அழகுக்குள்ளே கிடந்து, இணைந்து வெளிப்பட்டுத் தோன்றும் குறிப்பு ஒன்று உள்ளது! அக்குறிப்பின் கருத்தை யான் அறியமுடியவில்லை! நீ அறிவிப்பாயாக!

மணியில் திகழ்தரும் நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதுஒன்று உண்டு. (குறள்—கஉஎங)

அணியில்—புணர்ச்சியால் தோன்றிய அழகில்.

## 13. புணர்ச்சி விருப்பம்

முதல் நாளிரவின் புணர்ச்சி முடிவில், தலைவனின் புகழுரையால், 'தலைவன் விரைவில் பிரிவானே' என்று ஐயுற்ற தலைவி, மறுநாள் இரவு, தலைவன் அருகில் வந்தால், அவனுடைய பழைய குற்றங்களை யெடுத்துக் காட்டி ஊடிக்கொண்டு, அவனை நெருங்க விடாது செய்யவேண்டும் என எண்ணினுள். ஆனுல் என்ன ஆயிற்று? தலைவன் அருகில் வந்த உடன், அவனுடைய குற்றங்களை யெல்லாம் மறந்து, தான் உரைத்த சூளை மறந்து, உறுதியிழந்து அவனை விரைந்து அணைத்துக் கொள்கிருள் தலைவி; அணைத்து இன்புற்றுக்கூறுகிருள்:

என் உள்ளங் கவர்ந்த கள்வரே! கள் குடிப்பதால், யாவரும் வெறுத்து ஒதுக்கத்தக்க துன்பமே நேரிடினும் குடிகாரர் மேலும் மேலும் குடிக்கவே விரும்புவர். அதைப்

போல, நீங்கள் அடிக்கடி என்னைவிட்டுப் பிரிந்து சென்று, பிரிவாற்ருமையால் வருந்தவும், காதல் வெறியால் பிதற்றவும், அதனுல் கண்டோர் ஏளனம் செய்யவுமான துன்பங்களைச் செய்தாலும், உமது விரிந்த மார்பைத் தழுவிக் கொள்ளவே என்னெஞ்சம் விரும்புகின்றதே!

இனித்நக்க இன்ன செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு (குறள்-கஉஅஅ)

இன்ன–துன்பம். களித்தார்க்கு–குடித்துக் களித்தார்க்கு. மறுநாளே இன்றியமையாத நாட்டுப்பணியின் காரணமாகத் தலைவன் பிரிந்துவிடுகிருன். தலைவி பிரிவாற்ருமையால் வருந்துகிருள். தோழி இடித்துரைக்கிருள்;

'வருந்துகிருயா? நன்ருக வருந்து. முன்பு நீ கூறியது என்ன? இரு நாட்களாகச் செய்தது என்ன? தலைவர் பிரிவார் என அறிந்தும், ஊடி – பிணங்கி– பிரிவைத் தடுத்து நிறுத்தாது, ஏன் புணர்ச்சிக்கு உடன்பட்டாய்?

இடித்துரைக்கப்பட்ட தலைவி கூறுகிருள்.

'என்னடி செய்வேன் தோழி! கண்ணுக்கு மை தீட்டும் கோல், எதிரே – கீழே கிடக்கும் போதெல்லாம் நன்ருகக் கண்ணுக்குத் தெரிகிறது. மை தீட்டுவதற்காக கண்ணுக்கருகில் கோலைக்கொண்டு சென்ற உடன் அது கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விடுகிறது. அதைப்போல அவர் என்னை விட்டுப் பிரிந்து தூரத்தே இருக்கும்போதே, அவர் குற்றங்களெல்லாம் எனக்கு நன்ருகத் தெரிகின்றன. ஆனுல் அவரைக் கண்டவுடன்– அவர் என்னருகில் வந்த உடன், அவருடைய குற்றங்களெல்லாம் மறைந்து விடுகின்றன.

எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. (குறள்-கஉஅரு)

கோல்-கண்ணுக்கு மை தீட்டுங் கோல். கொண்கன்-கணவன்.

தோழீ; அது மட்டுமா? 'பெருக்கெடுத்தோடும் வெள்ளத்தில் குதித்தால், தன்னை இழுத்துக் கொண்டு ஓடிவிடும்; தன்னால் எதிர்த்து நீந்திக் கரைசேர இயலாது' என அறிந்திருந்தும், ஒருவன் அப்பெரும் வெள்ளத்தில் குதித்தால் அவன் செயலை என்ன வென்று கூறுவது? அதைப்போல, 'பிரிவாற்றாமையால் வருந்திய என்னெஞ்சு, அவரைக் கண்டவுடன் புணரவே விரும்பும்! ஊடினால் தோற்றுவிடும்' என அறிந்திருந்தும் அவருடன் ஊடிக்கொண்டு என்ன பயன்?

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தேன் புலந்து. (குறள்-கஉஅஎ)

உய்த்தல்-இழுத்துக் கொண்டு செல்லுதல். புனல்-ஓடும் வெள்ள நீர். பொய்த்தல்-தோல்வி. புலந்து-ஊடி.

## 14. ஊடலின் சிறப்பு.

நாட்டுப் பணிக்காகப் பிரிந்த தலைவன் விரைவில் பணியை முடித்துத் திரும்பி விட்டான். ஆயினும் இம்முறை தலைவி, ஊடலில் உறுதி கொண்டிருந்தாள். தலைவன் பலவாறாக முயன்றும் தலைவியின் ஊடலைத் தீர்க்க முடியவில்லை. ஆதலின் தலைவனும் வெறுப்புற்று ஊடல்கொண்டு விலகி விட்டான். மறுநாள் உண்மை யுணர்ந்த தோழி, காதலரின் ஊடலைத் தீர்த்துவைக்க முயன்று, முதலில் தலைவிக்கு அறிவுரை கூறுகிறாள்:

தோழீ! நேற்றிரவு என்ன செயல் செய்துள்ளாய் நீ? ஊடலின் சிறப்பை யுணர்ந்து பயன் படுத்தத்தெரிய வில்லையே உனக்கு! உப்பின்றி உணவு சுவைக்காது; உண்ணவே இயலாது. உப்பு உணவுக்குச் சிறந்த சுவை யூட்டுவதுடன் உடலுக்குச் சிறந்த சத்தாகவும் அமைகிறது. உணவுக்குச் சேர்க்கவேண்டிய உப்பின் அளவு சிறிது குறைந்தாலும் உணவின் இன்சுவை குறைந்து விடும்; அதிகமாகி விட்டாலோ உண்ணவே முடியாது. அளவுடன் சேர்க்கும் உப்பே உணவுக்கு இன்சுவை சேர்த்து உடலுக்கும் சத்தைச் சேர்த்து, உடல் நலமும் உயிர் வாழ்வும் அளிக்கின்றது. உயிர் வாழ்க்கைக்கு உதவும் இத்தகைய உப்பைப் போன்றதே காதல் வாழ்க்கைக்கு ஊடலும்.

காதலர் வாழ்வில் அடிக்கடி ஊடல் அளவுடன் அமையவேண்டும். அப்பொழுதுதான்–காதலரிடையே ஏற்படும் சிறு பிணக்காகிய ஊடல் என்னும் புலவி அளவுடன் அமைந்தால்தான்–கலவியென்னும் புணர்ச்சி யின்பம் ஓங்கி காதலும் வளரும். தக்க அளவைவிட ஊடல் குறைந்துவிட்டால், புணர்ச்சியின்பம் குன்றிக் காதலும் குறையும்; அளவுக்குமேல் போய்விட்டால் காதல் வாழ்க்கையே முறிந்துவிடும்.

> உப்பு அமைந்து அற்றால் புலவி அதுசிறிது
> மிக்கு அற்றால் நீள விடல் (குறள்-௧௩௦௨)

புலவி–ஊடல்; காதலரிடையே ஏற்படும் சிறு பிணக்கு.

இங்ஙனம் தலைவிக்கு அறிவுரை கூறிய தோழி தலைவனுக்கும் கூறுகிறாள்.

அறம் பேணும் தலைவரே! தலைவியின் புலவி நீக்கிக் கலத்தலே தங்கள்கடன். அவள் அடிக்கடி அனுபவிக்கும்

பிரிவாற்ருமைத் துயரால் உள்ளமுடைந்து, அவள் பிடிவாதமாக ஊடிக்கொண்டிருந்தாலும், தாங்கள் இன்சொற்கள் பேசி, சிறிது சிறிதாக அவள் மனத்தைக் குளிர்வித்து ஊடல் நீக்கிக் கூடலே தாங்கள் செயற்பாலது.

வறுமையாலும் பிணியாலும் எண்ணற்ற தொல்லைகளை யுற்று வருந்தி மனமுடைந்தோரை வஞ்சகர் வஞ்சகச் செயல்களால் பெருந்துன்பங்கள் பல செய்து துன்புறுத்துவாரே யானுல் அவர் நிலை எத்தகையதாயிருக்கும்? அந்தோ! அக்கொடுமையைச் சொல்லவும் இயலுமா? அதைப் போன்ற கொடிய செயலே, அடிக்கடிப் பிரிவாற்ருமைத் துயரால் வருந்தி, மெலிந்து, நைந்து போயிருக்கும் தலைவியின் ஊடலைத் தீர்த்துக் கூடலால் இன்பந்தராது மேலுந் துன்புறுத்தல்.

அலந்தாரை அல்லல்நோய் செய்துஅற்ருல் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல் (குறள்-௧௩0௩)

அலந்தார்–துன்பமுற்று வருந்தியவர். அல்லல்நோய்–மிக்கதுன்பம். புலந்தார்–ஊடியவர். புல்லாவிடல்–புணராது விடுதல்.

முன்பே நீரில்லாது வாடியிருக்கின்ற பூங்கொடிக்கு நீர் ஊற்ருமல், அதை அடியோடு அறுத்து எறிந்து விடுவதைப் போன்றதே, பிரிவுத் துன்பத்தால் வருந்தி ஊடியிருக்கும் தலைவியின் ஊடலை நீக்கி இன்பந் தராது இருத்தலும்.

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. (குறள்-௧௩0௪)

உணராமை–புலவி நீக்கிப் புணராமை. வள்ளி–பூங்கொடி

இங்ஙனம் தோழியால் அறிவுறுத்தப்பட்ட காதலர் இருவரும் அன்றிரவு ஊடல் நீங்கிக் கூடிப் பேரின்பம் எய்துகின்றனர். ஊடலின் பின்னிகழ்ந்த கூடலினுல் ஏற்பட்ட இன்ப உயர்வையும், ஊடலின் சிறப்பையும் கூறுகின்ருன் :-

'அதிகம் கனிந்து விட்ட பழம் சுவை குறைந்து அழுகல் வாடையே வீசும். மிக இளமையான பிஞ்சுக் காயும் தின்பதற்குச் சுவையாக இருக்காது. அதைப் போல, முதிர்ந்த புலவியாகிய துனியும், இளம் புலவியும் இல்லாத கலவி பேரின்பம் தராது. முதிர்ந்த புலவி யில்லாத கலவி நன்கு கனிந்த பழம் போல் இன்பச் சுவை குறையும். இளம் புலவி யில்லாத கலவி, பிஞ்சுக் காயைப் போல் இன்பம் தராது.'

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியுங் கருக்காயும் அற்று. (குறள்–கந0சு)

துனி-முற்றிய ஊடல். புலவி-இளம் ஊடல்.

மீண்டும் காதலர் கலவியை விரும்பினர். முதல் கலவிக்கும் மறு கலவிக்கும் இடையில் ஊடல் நிகழ வேண்டும். அப்போதுதான் மறுகலவி இன்பம் பயக்கும். இதை யுணர்ந்த தலைவி, பொய்ச்சினங் கொண்டு ஊடினுள். தலைவன் ஊடல் தீர்க்க முயன்ருன். தலைவி ஊடலை நீட்டினுள். தலைவனும் பொய்ச்சினங் கொண்டு கூறுகிருன்:

'நீண்டவழி வெய்யிலில் நடந்து வந்தவருக்கும், வெய்யிலில் வேலை செய்பவருக்கும், நிழலில் உள்ள நீரே இன்பம் பயக்கும். நிழலில் உள்ள நீரானது குளிர்ந்திருக்கும். அதைக்குடித்து நிழலில் சிறிது நேரம் தங்கினுல் களைப்பெல்லாம் நீங்கி விடும். ஆனுல்

வெய்யிலில் உள்ள நீரானது வெதுவெதுப்புடனிருக்கு மாகையால், நீர் வேட்கை தீர்த்து இன்பம் பயக்காது. தங்குவதற்கும் நிழலில்லை. ஆதலின் களைப்பு நீங்கு வதற்கும் வழியில்லை. அதைப் போல, அன்புடைய காதலரின் ஊடலே இன்பம் பயக்கும். அன்பில்லாக் காதலரின் ஊடல் துன்பமே பயக்கும். நீ அன்பில்லா தவளாயிருத்தலால், உன் ஊடல் நீட்டித்து எனக்குத் துன்பமே தருகிறது.'

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. (குறள்-கூ௩0௧)

வீழுநர்—அன்புடையார்.

இங்ஙனம் கூறக்கேட்ட தலைவி, தனது அன்பையும் புணர்ச்சி வேட்கையையும் புன்னகையால் உணர்த்தினுள். மீண்டும் புணர்ந்து காதலர் பேரின்பம் எய்தினர்.

## 15. ஊடலும் கூடலும்

பொருளீட்டல், நாட்டுப்பணி முதலியவற்றை முடித்த தலைவன் தலைவியைப் பிரியாது, கவவுக்கை நெகிழாது வாழ்ந்தான். பிரிவும் இல்லை; குற்றமும் இல்லை; ஊடலுமில்லை; கூடல் மட்டுமே உண்டு. இங்ஙனமே இருந்தால் கூடல் இன்பத்தில்—புணர்ச்சி இன்பத்தில் சலிப்பு தட்டுமன்றோ? சலிப்பைப் போக்கிக் கூடலின்பத்தைப் பெருக்கும் வழி யாது? உணவுக்கு உப்பைப்போல, கூடலுக்கு ஊடல்தானே சுவைதரக் கூடியது? ஊடுவதற்கோ யார் மீதும் எக்குற்றமுமில்லை. என் செய்வது? தலைவி ஒரு புது வழி கண்டுபிடித்தாள். ஒரு நாள் இரவு தலைவி, தலைவன்மீது பொய்யான குற்றங்களைக் கற்பித்து ஊடினுள். அந்தச் சுவையான

நிகழ்ச்சியைத் திருவள்ளுவர் புலவி நுணுக்கம் என்ற அதிகாரத்தில் மிகத் திறம்படச் சித்திரிக்கிருர். நாமும் சுவைப்போம். வாழ்வில் பின்பற்றுவோம்.

"இன்று மாலை நீங்கள் உலாவச் சென்றிருந்தீர்கள் அல்லவா? அப்பொழுது பல பெண்கள் உமது அகன்ற மார்பைப் பார்த்து மகிழ்ந்திருப்பர். ஆதலால் பல பெண்களின் கண்ணெச்சிலாகிய உமது மார்பை யான் தழுவமாட்டேன்" என்று கூறித் தலைவி ஊடினுள்.

இச் சமயத்தில் தலைவன் தும்முகிருன். தும்மு வோரை வாழ்த்துதல் மரபாகையால், 'நீர் வாழ்க' என்று தலைவி வாழ்த்தினுள். தலைவன் மகிழ்ந்தான். ஆனுல் ஊடலை இத்துடன் முடிக்க விரும்பாத தலைவி, 'அன்புடையார் நினைத்தால் தும்மல் வரும்' என்ற மரபை யெண்ணி, 'உம்மை யெவளோ நினைக்கின்ருள். அதனுல்தான் தும்மினீர். யார் அவள்?' என்று கேட்டு அழுதாள்.

தலைவனுக்கு மீண்டும் தும்மல் வந்தது. தலைவிக்கு அஞ்சித் தும்மலை அடக்க முயன்ருன். 'ஆ' அடிக்கடி அவள் உம்மை நினைக்கிருள்! அதனுல்தான் அடிக்கடித் தும்மல் வருகின்றது! நீங்கள் தும்மலையடக்கி மறைக்கப் பார்க்கின்றீர்கள்!' என்று கூறி மேலும் அழுதாள்.

தலைவன் பணிந்து பார்த்தான். 'அவளுக்கும் இப் படித்தான் பணிவீரோ? என்று சினந்தாள். தலைவன் தலைவியின் உறுப்புக்களையே கூர்ந்து நோக்கிக் கொண் டிருந்தான். எவள் உறுப்புக்களுடன் என்னுறுப்புக்களை ஒப்பிட்டு நோக்குகிறீர்? என்று கேட்டு மேலும் சினந் தாள். அவளின் பொய்யான ஊடலைத் தீர்ப்பதற்காகத் தலைவன் பல வழிகளில் முயன்று பார்க்கிருன்.

'நான் பொருளீட்டுவதற்காகவும், நாட்டுப் பணிக்காகவும், உன்னைப் பிரிந்திருந்த காலத்தில், உன்னை யான் அடிக்கடி நினைத்தேன்' என்ருன் தலைவன். 'மறந்து விட்ட ஒன்றைத் தானே நினைத்துப் பார்க்க வேண்டும்? ஏன் என்னை அடிக்கடி மறந்தீர்' என்று கூறி, தலைவி விலகினுள்.

'இந்தப் பிறவியில் உன்னை மறப்பேனு? மறக்கவே மாட்டேன்' என்ருன் தலைவன். 'அப்பொழுது!...? அடுத்த பிறவியில் என்னை மறந்துவிட்டு வேருெருத்தியை மணந்துகொள்வீரோ' என்று கேட்டுக் கண்ணீர்வடித்தாள்.

தலைவனுக்கு நெருக்கடியாகி விட்டது. பின்னும் சிந்தித்து, 'யாவர் காதலையும்விட நம் காதலே சிறந்தது' என்ருன்.

'ஆ! உமக்குப் பல காதலிகள் இருக்கின்ருர்களா? அவர்கள் எல்லாரையும் விட என்னை மிகவும் காதலிக்கின்றீரா? யார்? யார்? அவர்கள்? என்று கேட்டு மேலும் ஊடினுள்.

தலைவன் திகைத்து, "ஐயையோ! அன்புத்தலைவி! அப்படியா எண்ணிவிட்டாய்! நாம் இருவரும் காதலராய் இருப்பதுபோல, உலகில் பல காதலர்கள் இருப்பார்கள் அல்லவா? அவர்களுடைய காதலைவிட நம்முடைய காதலே சிறந்தது" என்று அல்லவா கூறினேன்?' என்ருன்.

இவ்வாறு பல முயற்சிகளுக்குப் பிறகு தலைவி ஊடல் தீர்ந்து புன்னகை பூத்தாள். தலைவன் ஆவலுடன் கை நீட்டினுன். இருவரும் தழுவிக்கொண்டனர். அத்தழுவலில்தான் என்ன பேரின்பம்!

'அன்புத் தலைவி! என்மேல் தவறில்லாதிருக்கவும், ஏன் இவ்வளவு நேரம் ஊடிக்கொண்டிருந்தாய்? என வினவினான் தலைவன்.

'அன்புள்ள அத்தான்! உங்கள் மீது தவறு இல்லாவிட்டாலும், உங்கள் அன்பை எனக்கு அதிகமாக்கிக் கொடுக்கும் ஊடலைப் பெறுவதற்காக, பொய்க் குற்றங்கள் சாட்டிப் பொய்யாக ஊடினேன். ஊடலால் சிறிய துன்பம் ஏற்பட்டாலும் ஊடலுக்குப்பின் ஏற்படும் கூடலால் பேரின்பமன்றோ உண்டாகின்றது! அன்புத் தலைவரே! எங்கோ இருந்துவரும் மழைநீர் நிலத்தில் வீழ்ந்தவுடன் என்னாகிறது? நிலத்தின் சுவையை நீரும், நீரின் தண்மையை நிலமும் ஏற்று இரண்டும், வேற்றுமையின்றி ஒன்றாகக் கலந்து விடுகின்றன. அதைப்போல, எங்கெங்கோ, யார் யாருக்கோ பிறந்து வளர்ந்த நம்மிருவருள்ளமும் ஒன்றாகக் கலந்து விட்டன. இப்படி உள்ளங்கலந்த காதலரிடையே ஏற்படும் ஊடலால், அவ்வூடலுக்குப் பின் ஏற்படும் இன்பத்திற்கு இணையான இன்பம் வேறெங்காவது உண்டா? தேவருலகத்தில் தான் கிடைக்குமா?' என்றாள் தலைவி.

புலத்தலிற் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந்து அன்னார் அகத்து. (குறள்-௧௩௨௩)

புலத்தல்-ஊடல்; சிறுபிணக்கு. புத்தேள்நாடு-தேவர் உலகம்.

புலவிக்குப்பின் நிகழ்ந்த கலவியால் பேரின்பம் எய்திய தலைவன் கூறுகிறான்:

கண்ணே! ஊடலின் பெருமையே பெருமை! நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம். நோயின்றி வாழ வேண்டுமானால், உண்ட உணவு நன்றாகச்

செரித்தபின் – பசியெடுத்தபின் – அளவறிந்து உண்ண வேண்டும். எனவே மேலும் மேலும் உண்பதைவிட, உண்ட உணவு செரித்தலே இன்பமாகும். பசித்தபின் உண்ணும் உணவே அதிகச் சுவை பயக்கும். அதைப் போல, காமஇன்பம் நுகரவிரும்புவோர், மேலும் மேலும் புணர்வதைவிட, புணர்ச்சிக்குப் பின் ஊடிச் சிறிது பிரிந்திருப்பதே பேரின்பம் தருவதாகும். ஊடிக் கூடினால்தான் வேட்கை மிகுதியும் பேரின்பமும் உண்டாகும்.

> உணலினும் உண்ட(து) அறலினிது காமம்
> புணர்தலின் ஊடல் இனிது. (குறள்-௧௩௨௬)

அறல்–செரித்தல்.

அன்பே! கருத்தொன்றிய காதலர் இடையருது அநுபவிக்கும் காம நுகர்ச்சிக்கு இன்பம் பயப்பது ஊடலே! ஊடல் குறைந்து விடாமலும், அளவுக்கு மிஞ்சிப் போகாமலும், அளவறிந்து அவ்வூடலை நீக்கிக் கூடுதலே, அவ்வூடுதலுக்கு இன்பமாகும்.

> ஊடுதல் காமத்திற்(கு) இன்பம் அதற்குஇன்பம்
> கூடி முயங்கப் பெறின். (குறள்-௧௩௩0)

கூடி முயங்கல்–புணர்தல்.

திருக்குறளின் காமத்துப்பாலை நன்கு கற்றுத் தெளிந்து அதன் வழி ஒழுகுவோர், குன்ருக் காதலராய், இணையற்ற இல்லற இன்பம் எய்தி நல்வாழ்வு வாழ முடியும்.

‘குறள் தரும் உவமை யின்பம்’ சுவைத்தோர் ஏனைய இலக்கிய உவமைகளையும் சுவைத்து இலக்கிய இன்பம் எய்துவாராக!

வளர்க உவமை யின்பம்! வாழ்க வள்ளுவம்!

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை